"கம்பநிலய"ப் பிரசுரம்-எ

# வால்மீகி விஜயம்

அல்லது

# THE THREE FORCES—PHYSICAL, INTELLECTUAL, AND MORAL



மகாமகோபாத்தியாய ஹரப் பிரஸாத சாஸ்திரிகள்
இயற்றிய வங்காளி முதனூலினின்றும்
ஆனந்தமடம், சந்திரசேகரன், ராமகிருஷ்ண
விஜயம் முதலியவற்றின் ஆசிரியரான

**மஹேச குமார சர்மா**

தமிழ் செய்தது.



"கம்பநிலயம்," புதுச்சேரி.

சகம் கஅசஉ

விலை ரூபாய் ஒன்று

"கம்பநிலய"ப் பிரசுரம்—எ

# வால்மீகி விஜயம்

அல்லது

## THE THREE FORCES—PHYSICAL, INTELLECTUAL, AND MORAL



மகாமகோபாத்தியாய ஹரப் பிரஸாத சாஸ்திரிகள்
இயற்றிய வங்காளி முதனூலினின்றும்
ஆனந்தமடம், சந்திரசேகரன், ராமகிருஷ்ண
விஜயம் முதலியவற்றின் ஆசிரியரான
**மஹேச குமார சர்மா**
தமிழ் செய்தது.



"கம்பநிலயம்,"
௧0, டூப்ளெக்ஸ் தெருவு, புதுச்சேரி.
சகம் ௧அ௪உ
விலை ரூபாய் ஒன்று

## ஸூசீபத்திரம்

## ஐந்தாம் பாகம்



## ஆறும் பாகம்



## ஏழாம் பாகம்



## எட்டாம் பாகம்



---

திருத்தம்

உஉ-ம் பக்கம் உஉ-ம் வரியில் 'அஹம் விச் வாமித்ர:' என்று திருத்திக்கொள்க.

# முகவுரை

இந் நூல் வங்காளி பாஷையில் மகாமகோ பாத்தியாய ஹரப்பிரஸாத சாஸ்திரி எழுதிய முதனூலின் தமிழ் மொழிபெயர்ப்பு ஆகும். வங்காளி இலக்கிய உலகத்தின் சம்ராட்டாக விளங்கிய பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர் முதனூலையும் முதனூலாசிரியரையும் பற்றி, "இது வங்காளி பாஷையிலே ஒளிச்சுடர்வீசும் உத்தம ரத்தினமாம். வேறெந்த வங்காளி நூலாசிரியரும் இவ்வளவு சொற்ப வயதிலே இத்தகைய பிரதிபையும் மானச சக்தியும் காட்டியதாக எமக்கு ஞாபகமில்லை," என்று எழுதி யிருக்கிறார் என்று சொல்லுவோமானால் படிப்போர் முதனூலை லேசாகக் கருதமாட்டார்கள்.

மொழிபெயர்ப்பாசிரியரான மஹேச குமார சர்மாவைத் தமிழுலகில் அறியாதாரு முண்டோ? ஆனந்தமடம், சந்திரசேகரன் முதலிய அரிய வங்காளிக் கதைகளை மொழி பெயர்த்தும், ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸன், விவேகாநந்தன் ஆகிய அவதார புருஷர்களின் திருவாக்குகளாகிற அமுதத்தைத் தமிழுலகு பருகி உய்யுமாறு செய்தும் இருக்கிற நமது சர்மாவைத் தமிழறிஞர் என்றும் போற்றிக் கொண்டே யிருக்கிறார்கள்.

நம் ஆசிரியர் தமது இறகுக்கு இத்தனை காலம் "இளைப்பாற்றி" கொடுத்ததற்குத் தமிழ்மாது அவர் பேரில் கொஞ்சம் கோவம் காட்டவே செய்கிறாள். அறிஞர் அரசாளப்பின் வாங்குவதற்குத் தண்டனை அறிவற்றோரின்

ஆளுகைக்குள் வாழவேண்டியிருப்பதே என்று பிளாத்தன் சொல்லுகிறான். தமிழ் ஜாதியில் புதிய ஜீவனை உண்டாக்கும் துடிப்புத் தோன்றியிருக்கும் காலத்தில் இவர் தம்முடைய அக்னியைச் சாம்பர் மூடிக்கொள்ளும்படி செய்து விட்டபிறகு, ஆங்கிலேயராலேயே ஆபாசமானவை என்று தள்ளிவிடப்பட்டனவும் படிப்போர் இதயத்தைத் தீப நெறியில் புகவைப்பனவுமான ரெய்னால்ட்ஸ் போலியவர்களின் கதைகள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுத் தமிழ் மக்களின் இதயத்தை அழுக்காக்கிவருகின்றன. ஆனால் நாம் செய்த புண்ணியம், இவர் தமது வலிபொருந்திய இறகைத் தமிழ் இலக்கிய மறுமலர்ச்சியில் மறுபடியும் பிரயோகப்படுத்தத் துவக்கிவிட்டார். இனித் தமிழில் சுத்தமான, கோதற்ற நூல்கள் வெளிவருவதற்கு ஒரு பெருமடை திறந்துவிட்டது எனச் சந்தோஷமுறுவோம்.

ஒரு முறை பூத்துக் காய்த்து ஓய்ந்து போன ஓர் பாஷையை மறுபடியும் மலரச்செய்வதற்கு உத்கிருஷ்டமான சாதனம் வேற்றுப் பாஷைகளிலுள்ள உயர்ந்த நூல்களை மொழி பெயர்ப்பதாகும். அந்த நூல்கள் பிரஸ்தாப பாஷைக்குப் புதிதான ரீதியில்தான் இயற்றப் பட்டிருக்குமாதலால், ஓய்ந்துபோன உடலுக்குக் கடற்காற்று உரம் தருவதுபோல, அவை அப்பாஷைக்குப் புதிய விதிகளைக்காட்டி அதன் சக்திகளைக் கிளப்பிவிடத் தூண்டுகோலாகும்.

இதை உத்தேசித்தேதான் நமது ஆசிரியர் தற்காலம் மிகுந்த உயர்வை அடைந்துவிட்ட வங்காளி பாஷையிலிருந்து நூல்களை மொழி பெயர்க்க முன்வந்திருக்கிறார்.

தவிர, பிராமண அப்பிராமண மனஸ்தாபங்கள் தலைக்காட்டும் இக்காலத்தில் சர்வ ஜனங்களும் சகோதரரே என்றும், வித்தியா பலமாவது புஜபலமாவது மனிதனுக்குத் தனியே நன்மை தராது, களங்கமில்லாத அன்பு ஒன்றுதான் சுகத்தையும் க்ஷேமத்தையும் தரும் என்றும் போதிக்கும் இந்நூலைத் தமிழில் தந்ததற்காகத் தமிழுலகம் நமது ஆசிரியருக்கு விசேஷமான நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது. இதைப் படித்து, ஆய்ந்து, பிராமணர் தங்களுடைய வித்தியாகர்வத்தையும் ஜாதிகர்வத்தையும் அறவே ஒழித்துச் சகலரையும் உடன்பிறந்த சகோதரர் போலவே பாவித்து நடத்த முயலுவார்களாக! பிராமணரல்லாதாருள்ளும், அழுக்காறும் க்ஷாத்திரமும் உள்ளவர்கள் அத் தீய குணங்களை அகற்றி ஜாதிப்பொதுவின் க்ஷேமத்தையே நாடி எல்லோருடனும் ஒத்து உழைக்க முன்வருவார்களாக!

இம் மொழிபெயர்ப்பின் நடை நம் ஆசிரியரின் ‘ஆனந்தமட’த்தைப் படித்து அதன் சொல்லழகைப் பருகி யிருப்பினும் எனக்கு வியப்பைத் தந்தது. இத்தனை சம்ஸ்கிருதப் பிரயோகங்களைப் போட்டும் தமிழ்ச்சுவை

பெருகிக் காட்டும்படி செய்ய வேறு யாருக்கும் சாத்தியமா யிராது என்று நான் உறுதியாய்ச் சொல்லுவேன்.

இனி இந்நூலின் அக்ஷரபத்ததியைப்பற்றி, தமிழில் வரும் சம்ஸ்கிருத மொழிகளை எழுதுகையில் சம்ஸ்கிருத அக்ஷரங்களையே போட வேண்டும் என்பது நமது ஆசிரியர் கருத்து. ஆனால் தமிழ் நூல்களில் மொழிகளை யெல்லாம் தமிழ் அக்ஷர பத்ததியிலேயே தான் எழுதவேண்டும் என்பது "கம்பநிலய"த்தின் கொள்கை யாதலால் நூலில் பெரும்பாலும் தமிழ் அக்ஷர பத்ததியேதான் ஆளப்பட்டிருக்கிறது. இது விஷயத்தில் ஆசிரியர் தமது அபிப்பிராயம் வேறாயிருந்தும் "கம்பநிலய"த்தின் அபிப்பிராயத்துக்கு இணங்கியதற்காகக் "கம்பநிலயம்" அவருக்கு நன்றி செலுத்துகிறது.

பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர் எழுதிய விமரிசனமானது இந் நூலின் யோக்கியதையை நன்கு எடுத்துக் காட்டுவதோடு நல்ல விமரிசனத்துக்கே ஓர் இலக்கியமாகவும் விளங்குவதால் ஆசிரியர் அதையும் மொழிபெயர்த்து அநுபந்தமாய்ச் சேர்த்திருக்கிறார். படிப்போருக்கு அது சுவையாயிருக்குமென்று நம்புகிறேன்.

"கம்பநிலயம்." வ. வே. ஸு. ஐயர்.

# ஸர்வஜன ஸமத்துவம்
## என்னும்
# வால்மீகி விஜயம்

## முதல் பாகம்

க

### ஹிமாலயம்

மழை நின்றுவிட்டது. சாற்காலம் ஆரம்பித்திருக்கிறது. வானம் நிர்மலமாய் விளங்குகிறது. மப்பு மந்தாரம் சிறிதுமில்லை. எங்குபார்த்தாலும் ஒரே நீலம் — முழுநீலம் — கனத்த நீலம். வர்ணனைக்கடங்காததாய் உள்ளத்தைக் கவரும் அந்த நீலவர்ணப் பிழம்பின் நடுவிலிருந்து பெரிய பெரிய நக்ஷத்திரங்கள் பளபளவென்று ஜொலிக்கின்றன. நக்ஷத்திரக் கூட்டத்தின் மத்தியில் சாயாபதம் அல்லது ஆகாய கங்கை* என்னும் பால்வீதியானது ககன

---

* வானத்தின் மற்றெல்லாப் பாகங்களிலும் நக்ஷத்திரங்கள் விசிறி இறைத்துவிட்டதுபோலத் தனித்தனி விளங்க, ஒரு பாகத்தில் மாத்திரம் அவை நெருங்கியும் அடர்ந்தும் இருந்து வானத்துக்கே ஒரு பட்டை கட்டியதுபோலத் தோன்றும். மற்றப் பாகங்களை நோக்க இது வெண்மையாக இருப்பதால் இதற்குக் கிரேக்கர்

மண்டலம் முழுவதையும் இருகூருகப்பிரித்துக் கடைசியில் தானும் பிளவுண்டுபோயிருக்கிறது. பூமியின் ஈரம் உலர்ந்துபோய், மரங்களும் செடிகளும் நன்ருய்ச் செழித்து வளர்ந்திருக்கின்றன. எங்கும் பரந்துள்ள பசுமையின் பிரீதிகரமான நிறம் பூமியின் நவயௌவனத்தைப் பிரகடனம் பண்ணுகின்றது. மேலே கனநீலம், கீழே கனத்த பசுமை; இவ்விரண்டும் ஒன்ருய்ச் சேருமிடத்திலே, ஒரே சட்டத்தில் இரண்டு பெரிய சித்திரப்படங்களைப் பொருத்தி, இடையிலே, பார்ப்பவர்களுக்காகச் சிறிது இடம் விட்டுவைத்திருப்பதுபோல் தோற்றுகின்றது.

மப்பு மந்தார மூட்டம் சிறிதும் இன்றி ஆகாயம் நிர்மலமாய் விளங்கும் சமயமாகிய அந்த ஆநந்தகரமான சரற்காலத்திலே ஹிமாலய பர்வதத்தின் அதிசயமான இன்பக்காட்சியை எவரேனும் அவாவோடு கண்ணுற்றிருப்பதுண்டா? ஒரு பக்கத்திலே ஹிந்துஸ்தானம் முழுவதும் பல நூறுயோஜனைதூரம் பரந்து அகன்ற மைதானம்போல் விரிந்திருக்க, இன்னெரு பக்கத்திலே மலைத்தொடருக்குப்பின் மலைத்தொடரும், அதற்கப்புறம் பின்னும்

---

பால்வீதி என்று பேர்வைத்தார்கள். இது நதிப்பிரவாகம் போலவும் தோன்றுவதால் நம்மவர் அதற்கு ஆகாய கங்கை என்று பேர் கொடுத்தனர்.

மலைத்தொடரும் உயர்ந்திருக்க, அதற்கும் எவ்வளவோ தூரத்துக்கு அப்பால் பனிமூடி ஆகாயத்தை அளாவி நிற்கும் மலையரசைக் கண்ணுற்றிருக்கிறீர்களா? அந்த ஸ்படிகம்போலத் தாவள்யமாய்த் திகழும் பனிக்கட்டிகளின்மேல் சூரிய கிரணங்கள் விழுந்து பளபளவென்று ஜொலிக்கையில், ராஜகுமாரன் வருகையைச் சிறப்பிக்கவேண்டி விசாலமான நகரங்கள் பல நிறமுள்ள தீபமாலைகளால் பிரகாசிப்பதுபோலத் தோற்றுவதைக் கண்டிருக்கிறீர்களா? கிழக்கிலும் மேற்கிலும் கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் சிகரத்துக்குப்பின் சிகரம், கொடுமுடியின்மேல் கொடுமுடி, இவைதாம் கண்ணுக்குத் தென்படுகின்றன, — முடிவுமில்லை, இடைவெளியுமில்லை, அநந்தமென்று சொன்னாலும் பொருந்தும்!

மழை இப்பொழுது நின்றுவிட்டது. சுற்றிலுமுள்ள ஊற்றுகளிலிருந்து இரைச்சலிட்டுக்கொண்டு பாலின்நுரைபோல் வெண்மையான தண்ணீர் வேகமாய் வெளிப்பட்டுச் சிற்றாறுகளாய்ப் பாய்ந்துகொண்டிருக்கின்றது. வெயில் எறிக்கும் அந் நுரையின்மேல் பல வர்ணங்கொண்ட வானவில் மின்னுகின்றது ஒருசார். கண்ணுக்குத் தெரியாமல் நிரந்தரமாய் ஓடிக்கொண்டிருக்கும் சிற்றாறு ஒன்று பேதிக்கமுடியாத அந்தகாரத்தினூடே பாய்ந்துகொண்

டிருக்கின்றது இன்னொருசார். ஊற்றுகள் இருக்கும் இடங்களிலெல்லாம் செடிகளும் மரங்களும் வனங்களும் கூடவே வளர்ந்திருக்கின்றன; அவை இல்லாத இடங்களிலே பயங்கரமான தோற்றமுள்ள பாறைகள், அவற்றின் கிட்டத் துணிந்து போகிறவர்களை யெல்லாம் அப்பொழுதே தாக்கி நொறுக்கிவிடும்போல் நிற்கின்றன. இவ்விடத்தில் இவ்வளவு பயங்கரமான உச்சிகள் இருந்தும், அடுத்துக் கீழேயே அதிக ஆழமான கணவாய்களும் இருக்கின்றன. இனி இவற்றின் அடித்தலம் எங்கே? எங்கேயோ, கண்ணுக்கு எட்டுவதாயில்லை; ஒருகால் கண்ணுக்கு எட்டினால், ஒரு சிற்றாறு பாய்ந்து செல்வதைப் பார்க்கலாம். அதன் தண்ணீர் கற்பாறைகளின்மேல் மோதித் துள்ளிக் குதித்துப் பிரவகித்துக் கொண்டே செல்வதையும் காணலாம். இங்கும் அங்கும் பருத்த, கரடுமுரடான காட்டுமரமொன்று ஆயிரம் வருஷகாலமாகக் காலத்தோடு கடும்போர் புரிந்து தன்னைக் காப்பாற்றிக்கொண்டு நிற்கிறது; அதைச் சுற்றிச் சுற்றிப் பின்னிக்கொண்டு படர்ந்திருக்கும் பூங்கொடியும் ஐந்நூறு வருஷமாக ஜீவித்திருக்கிறது.

இந்த ஹிமாலயமானது இப்பொழுது உங்களுக்கு எப்படி காணப்படுகிறதோ அவ்

விதமாகவே அநந்தகாலந்தொட்டு இருந்து வருகிறது; அநந்தகாலமாக அதன் மஞ்சுமூடிய சிகரங்கள் இவ்விதமாகவே இருக்கின்றன; ஊற்றுநீரும் இப்பொழுதுள்ளது போலவே பிரவகித்துக்கொண்டு வந்திருக்கிறது; ஆகாயமும் இவ்வண்ணமே கனநீலமாய் இருந்திருக்கிறது. ஒவ்வொரு சாற்காலத்திலும் இதைப் போலவே, கம்பீரமாயிருப்பினும் மனோகரமாயும்,பயங்கரமாயிருப்பினும் உன்மத்தமாக்குவிப்பதாயுமுள்ள வனப்பே இருந்து வருகிறது. ஆனால் எந்தச் சாற்காலத்தின் செய்தியைப் பற்றி நாம் இப்பொழுது பேசிவருகிறோமோ, அந்தச் சாற்காலத்து ஓர் அமாவாசை யிரவில் ஹிமாலயத்திலே ஓர் அபூர்வமான திவ்யக் காட்சி நிகழ்ந்தது. அது கிருதயுகமும் திரேதா யுகமும் சேரும் யுகஸந்தியிலே உண்டானது.

## உ

## ரிபுக்கள்

மாணத்துக்குப்பின் மனிதரின் கதி என்ன ஆகிறது? யாரே சொல்லவல்லார்? பூதங்களாய் விடுகிறார்களென்று சிலர் கூறுகின்றனர். பெற்றோரை இழந்தவர்கள் அவர்கள் சுவர்க்கலோகத்தை அடைந்திருப்பதாகச்சொல்லுகிறார்கள். ஆனால் வேத மதத்தின்படி அவர்கள் சுவர்க்கத்துக்குச் செல்வதில்லை: இம்மையில் ஸத்கர்

மங்களைச் செய்கிறவர்கள் ரிபுக்கள் * ஆகிறார்களாம். இவர்கள் எங்கே வாசம் செய்கிறார்கள்? இவர்கள் செய்யும் காரியம் என்ன? யாரால் சொல்லமுடியும்? இவர்கள் சாயாபதத்துக்கும் அப்பாலுள்ள ஏதோ ஒரு சுகஸ்தானத்தில் வசிக்கின்றனர்போலும்!

கீழ் அத்தியாயத்திற்கூறிய சாற்காலத்து அமாவாசை யிரவில் சாயாபதம் திடீரென்று இருகூறாகப் பிளவுண்டது. அதன் நடுவிலிருந்து கணக்கற்ற ரிபுக்கள் வெளிப்பட்டு வந்தார்கள். சமஸ்தப் பிரம்மாண்டமும் அவர்களது சரீரப் பிரபையினால் காந்திபெற்று விளங்கியது. நக்ஷத்திரங்கள் ஒளிமழுங்கி ஆகாயமாகிய படத்தில் தீட்டிய சித்திரங்களெனத் திகழ்ந்தன. இமைப்பொழுதில் ரிபுக்கள் ககன மார்க்கத்தைக் கடந்தனர். பக்ஷிகள் கூட்டம் கூட்டமாய்ப் பறந்துசெல்வது பார்ப்பதற்கு எவ்வளவுநேர்த்தியா யிருக்கிறது! ஆனால் ஜோதிமயமாய் விளங்கும் ரிபுக்கள் தங்கள் மேனியின் ஒளியால் திக்குத் திகந்தங்களையெல்லாம் பிரகாசிக்கச்செய்து, ஆகாயமார்க்கத்தை மறைத்துக் குழாம் குழாமாய்ப் பவனிவரும் காட்சியைப் பூலோகவாசிகள் ஆச்சரியத்துடன் நோக்கி நிற்கும்போது, அக் காட்சி இன்னும்

---

* நல்வினைசெய்து மரித்தபிறகு தேவர்களாகும் மக்கள் வேதத்திலே ரிபுக்கள் என்று சொல்லப்படுவர்.

எவ்வளவு அழகாய் இராது? ஏதோ தூமகேது தோன்றியிருக்கிறதென்று சிலர் சொன்னார்கள்; நக்ஷத்திரங்கள்தாம் உதிர்ந்து விழுகின்றன என்று சிலர் கருதினார்கள். உண்மையாய் நடந்தது யாதெனில், ரிபுக்கள் தங்கள் ஜன்மஸ்தானமாகிய பூலோகத்தைத் தரிசனம் செய்ய அன்று வந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் பூமிக்குச் சமீபமாய் வரவர, அவர்களுக்கு உண்டான ஆநந்தத்துக்கு அளவேயில்லை.

அவர்கள் ஹிமாலயத்துக்கு வந்து சேர்ந்தார்கள். சேர்ந்தபிறகு ஒவ்வொரு சிகரத்திலும் கொடுமுடியிலும் நின்றுகொண்டு அவர்கள் ஆநந்தக்களிப்பின் மேலீட்டினால் தேவகானம் செய்தனர். அந்தக் கானத்தின் கருத்தைக் கிரகிக்க மனிதரால் முடியுமோ? ஆனால் செவிக்கினிய அந்தக் கானஸ்வரமே ஜகத்தை யெல்லாம் மோஹ பரவசமாக்கியது. ஆகாயத்திலும் பூமியிலும் ஒரே நிச்சப்தம் குடிகொண்டது. நக்ஷத்திரங்கள் நிச்சலமாய் நின்றன; இருகூறாகப் பிளவுண்ட சாயாபதமென்னும் நக்ஷத்திர வீதியும் அசைவற்று ஸ்தம்பித்திருந்தது. சமஸ்தமான பிரம்மாண்டமும் சலனமற்று உணர்வழிந்து மகா மோஹநித்திரையின் வயப்பட்டதுபோல் ஆய் விட்டது. ரிபுக்கள் ஒரே ஸ்வரமாய்ச் சேர்ந்து

கானம் செய்தார்கள். அந்தக் கானத்தின் நாதம் அகிலாண்ட சராசரங்களிலெல்லாம் வியாபித்து, சாயாபதத்தின் திறந்த வழியின் வாயிலாகப் பரவெளியிற் போய்க் கலந்தது.

பூமியிலும், ஆகாயத்திலும், பிரம்மாண்டத்திலும், அகன்று பரந்த அகிலப் பிரபஞ்சத்திலும் உள்ள சகல ஜீவர்களும் இந்தக் கானத்தைக்கேட்டு அகம் குழைந்து அவசராயினர். அது அவர்கள் செவிகளில் அமிர்த தாரை போல் ஒருவித ஆநந்தவுணர்ச்சியை உண்டாக்கியது. பரமாநந்த சுகம் அநுபவிக்குங் காலையில் தங்கிநிற்கும் தொடர்ந்த இன்பமாகவும், ஏதோ கனவாகவும், அரைவிழிப்பாகவும், அரைத்தூக்கமாகவும், ஏதோ சுகாநந்தமாகவும், உள்ளத்தைக் கவர்வதாகவும், மதுரமாகவும், சாந்திமயமாகவும், தூரத்திலிருந்து வரும் இனிய சங்கீதத்வனிபோல் ஏதோ ஓர் உணர்ச்சி இருதயத்தில் எப்படிப் போய் ஆழப் படிகின்றதோ, அப்படியே அந்த ரிபுக்களின் கானம் எல்லோருடைய செவிகளிலும் தீர்க்கமாய் நுழைந்து ஆநந்தமளித்தது. இவ்வளவு அக நெகிழ்ச்சியும் ஆநந்தமும் தமக்கு ஏன் உண்டாயிற்றென்று ஒருவருக்கும் விளங்கவில்லை; ஆயினும்கேட்டோர் அனைவரும் அதனால் பரவசமடைந்தனர். மூவர் மாத்திரமே அந்தக் கானத்தின் கருத்தை அறிந்துகொண்டனர்; அம்மூவ

ரும் மந்திரத்தால் கட்டுண்டவர்போலே அதன் ஸ்வரத்திலே லக்ஷியம்வைத்து ஹிமாலய சிகரத்துக்கு வந்துசேர்ந்தார்கள். அவர்களே பாரதவர்ஷத்தின் கிரீடத்தில் சூடாமணிகளாய் விளங்குவோர்; எவ்வளவு காலம் பாரதவர்ஷம் நிலைத்திருக்குமோ, எவ்வளவு காலம் ஹிந்து தர்மம் நிலவியிருக்குமோ, எவ்வளவு காலம் ஜகத்தில் பெருந்தகைமைக்கு நன்குமதிப்பு உண்டோ, அவ்வளவு காலம்வரையில், அவர்களது பெயர்களும் மறையாமல் நீடூழி ஓங்கி நிற்கும்.

ரு

## மூன்று மகாபுருஷர்கள்

முதலாவது, வஸிஷ்ட மகரிஷி. அவர் தமது ஆசிரமத்திலே அறுபதினாயிரம் சிஷியர் சூழ வீற்றிருந்தார். அவர்களுக்கு அவர் ஞானம், தர்மம், நீதி இவைகளை உபதேசித்துக்கொண்டிருந்தார். சிலருக்கு வாக்கியம், வாச்சியம், வியங்கியம் என்னு மிவைகளையும், சிலருக்குப் பிரமாணம், பிரமேயம், பிரயோஜனம், சமுசயம், நிர்ணயம், சலம், ஜாதி, ஹேத்வாபாஸம், முதலிய நுண்ணிய தத்துவங்களையும், சிலருக்குப் பஞ்சதந்மாத்திரைகளோடு லிங்க சரீரத்தின் பேதாபேதங்களையும், சிலருக்கு விவர்த்த வாதத்தையும், சிலருக்குப்

பரிணாமவாதத்தையும் கற்பித்துக்கொண்டிருந்தார். சிலருக்குக் கோமேதம், அசுவமேதம், ராஜசூயம்,. அக்நிஷ்டோமம், கோஷ்டோமம், ஜ்யோதிஷ்டோமம் முதலிய மகாயாகங்களின் பிரயோக பத்ததிகளை அறிவுறுத்திக் கொண்டிருந்தார். சிஷியர்களின் விவேசனத்தை அனுசரித்து இன்னும் சிலருக்குத் துவிஜர்களுக்குரிய தசகர்மங்களை விளக்கிக் கொண்டிருந்தார். இவ்வாறிருக்கையில் திடீரென்று அவரது சிஷ்யர்களின் மனம் வேறெதையோ நாடித்திரிவதாய்த் தோற்றியது. அவர்கள் இருந்த இடத்திலேயே வேரூன்றிவிட்டதுபோல் அசைவற்று, மந்திரத்தால் கட்டுண்டவர்போல் பேச்சற்றுக் கிடந்தனர். அந்தக் கானத் துவனி வஸிஷ்டருடைய காதிலும் சென்றது; அவர் ரிபுக்கள் வந்திருக்கிறார்களென்று ஞானதிருஷ்டியினால் தெரிந்து கொண்டார். அப்பொழுதே அவர் யோகபலத்தினால் ஹிமாலய சிகரத்தைநோக்கி ஆகாய மார்க்கமாய்ச் செல்லலானார்; முகூர்த்தகாலத்துக்குள் அவ்விடம் வந்துசேர்ந்து ரிபுக்களுக்கு நமஸ்காரம் செய்து, மனத்தை ஒரு நிலையில் நிறுத்தி, அந்தக் கானத்தைக் கேட்கலாயினர்.

இரண்டாவது, விசுவாமித்திரர். அவர் திக்விஜயம் செய்யப் புறப்பட்டுப் பகல் முழுவதும் சைனியத்தை நடத்திச் சாயங்காலத்தில்

ஹிமாலயத்தின் அடிவாரத்தில் பாளயம் இறங்கத் தீர்மானித்திருந்தார். சேனுவீரர்களெல்லாம் களைத்துப்போயிருந்தபடியால், ஒவ்வொருவரும் தத்தமக்கு அகப்பட்ட இடத்திலேயே கூடாரம் அடிக்கத் தொடங்கினர். விசுவாமித்திரர் சில மந்திரிகளோடு, மறுநாள் காலையில் சைனியத்தை நடத்திக்கொண்டு போவதைக்குறித்து ஆலோசனை பண்ணும் பொருட்டு, ஒரு சிற்ருற்றின் கரையில் உட்கார்ந்தார். அந்தச் சமயத்துக்குச் சரியாக ஆகாயம் தேஜோமயமாய்ப் பிரகாசிக்க, முன் சொல்லிய இனியகீதத் துவனி எல்லோருடைய செவிகளிலும் சென்றது. சேனுவீரர் எந்த எந்த இடத்திலே எந்த எந்த நிலைமையிலே இருந்தார்களோ அதே இடத்திலும் நிலைமையிலும், செயலொழிந்து, அசைவற்று, வேறு நினைவு ஒன்றும் இல்லாமல் ஆநந்தபாவசராயினர். கூடாரம் அடித்தவன் படுக்கைபோடும் காரியத்தில் புகவில்லை; கூடாரம் அடித்துக்கொண்டிருந்தவன் அந்த வேலையைப் பாதியில் விட்டுவிட்டான்; அடிக்க ஆரம்பஞ்செய்யவிருந்தவன் அவ்வளவிலேயே நின்றுவிட்டான். விசுவாமித்திரர் கீதத் துவனியை உணர்ந்து உலகளந்த பெருமாளுகிய திரிவிக்கிரமனைப்போல் மூன்றடியில் ஒரு மலைச்சிகரத்தில் ஏறிவிட்டார்; ஆனால் அவர் வந்தவுடனே அந்த இடத்தில் ரிபுக்

களின் ஒளி மாறிக் கருநிறமடைந்ததை அவர் பார்த்தும் பாராதவரேயாயினர்.

மூன்றாவது, வால்மீகி. அவர் வழிப்பறிக் கள்வர் கூட்டத்துடன் சேர்ந்து மலையரசனது அரமனையை வலியத்தாக்கிக் கொள்ளையடிக்கப் போயிருந்தார். ஐந்தாறு கள்வருடன் தாமும் கூரைமேலேறி மாடிப்படிகளைத் தகர்க்கும் தறுவாயில் இருந்தார். அப்பொழுது நாற்புறத்திலும், ஹை, ஹை, ரேய், ரேய், என்று இரைச்சல் எழுந்தது. அரசனது காவலாளிகள் எங்கே, எப்படித் தப்பிப்போவதென்று தோன்றாமல் தியங்கினார்கள். ஒருபக்கத்தில் கள்வர்கள் காவலாளிகளைச் சாடினார்கள்; இன்னொருபக்கத்தில் காவலாளிகள் கள்வர்களைக் கொன்றார்கள்; மற்றொருபக்கத்தில் கள்வர் கள்வர்களையே மாய்த்தார்கள்; பின்னும் ஒருபக்கத்தில் காவலாளர் காவலாளரையே வெட்டித் தள்ளினார்கள். வால்மீகி இடைவிடாமல் வாளைச் சுழற்றிக்கொண்டு கொம்புவாத்தியம் ஊதி, அதன் வாயிலாகத் தன் கூட்டத்தாருக்குச் சங்கேதமாய்க் கட்டளையிட்டுக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் மேற்சொன்ன பேரொளியும் இன்னிசையும் உண்டாயின. அந்தக்ஷணமே அவரவர்கள் இருந்த இடத்தில் இருந்தவண்ணமே சித்திரப் பதுமைகளென அசைவற்று நின்றனர். வால்மீகி கானத்தைக்

கேட்டு அதன் கருத்தை உணர்ந்தார்; உடனே அவர் தம் கருவிகளை வீசியெறிந்துவிட்டுக் கீழே குதித்து அருகிலுள்ள கொடுமுடி யொன்றின்மேல் ஏறிச்சென்றார்.

ச

சகோதரத்துவ கானம்

சங்கீதத்தின் இனிமையை யாவரே உணராதவர்? சாமானிய மனுஷிய காயகன் குரலெடுத்துப் பாடும்போதுகூட, பரவசமடையாதிருப்பவர் யாரேனும் உண்டோ? அதனிலும் பார்க்க, உள்ளம் கனிந்து உவகையுடன் பாடும் போது, அப் பாட்டின் இன்பம் இன்னமும் இனிமை தந்து அதன் கருத்தைக் கிரகிப்பவரின் மனத்தைப் பெரிதும் பரவசமாக்கி விடாதா? பாட்டின் பொருளை அறிகின்றவர் அதன் இனிமையை இன்னமும் அதிகமாய் அனுபவிப்பர்; இனி அந்தப் பாட்டு, செவிக்கு இன்பம் பயப்பதல்லாமல் மனத்தையும் ஆநந்தக் களிப்பால் பூரிக்கச்செய்யுமானால், அதனால் மனிதர் பித்தெய்துவதும் அதிசயமாமோ? இன்றிரவு பாடுகின்றவர்களோ ரிபுக்கள்; தங்கள் ஜன்மபூமியைத் தரிசிக்கப் பெற்றதனால் உண்டான சுகாநந்த மேலீட்டின் உல்லாஸத்தினால் உள்ளம் பூரித்துப் பாடுகின்றார்கள். வெகு காலத்திற்குப் பிறகு மீண்டும் அவர்கள்,

நாற்கடலின் அலைக்கைகளால் அலம்பப்பெற்ற பாதங்களை யுடையதும், அநவரதமும் மூடி யிருக்கும் பனியினால் தாவள்யமாய்த் திகழும் கிரிசிகரங்களை யுடையதும், சிறப்பினிய நீர் வளமும் மதுரமிகு கனிவளமும் நிறைந்து பொலிவதுமான தாயாகிய அந்தப் பிராசீன ஜன்மபூமியைத் தரிசிக்க வந்திருக்கிறார்கள். வஸிஷ்டரும், விசுவாமித்திரரும், வால்மீகியும் அவர்கள் பாட்டைக் கேட்கும் சுரோதாக்க ளாகக் கூடியிருக்கிறார்கள். அவர்கள் அந்தக் கீதத்தைக் கேட்டு, உணர்ந்து, அதன் கருத் தைக் கிரகிக்கிறார்கள். அந்தக் கானத்தின் ஆநந்தவெள்ளம் தேனாய், பாலாய், தெவிட்டாத தெள்ளமுதாய், அவர்கள் செவியிலும், மனத் திலும் ஆவியிலும் பாய்ந்து பேரின்பம் அளித் தது. அவர்களது புறப்புலன்க ளெல்லாம் திரண்டுவந்து செவியில் நுழைந்துவிட்டன. உள்ளமும் உயிரும் செவியிடத்தே அமர்ந்தன. அறிவும் உணர்ச்சியும் அகன்றுவிட்டன. அவர்களின் உள்ளமெல்லாம் மோஹ பரவச மாகி, காயகர்களில் லயித்து, காயகபாவத்தில் லயித்து, கானத்தில் லயித்து, கானஸ்வரத்தில் லயித்து, அதன்மேல் அந்த ஸ்வரத்தின் உட் கருத்தில் இன்னமும் லயித்துப்போயின.

அந்த ஸ்வரங்கள் ஒன்றாய்த்திரண்டு மேள னதை அடைய அடைய, 'சகோதர, சகோதர,

சகோதர,' என்று இசைப்பதுபோ லிருந்தன. ரிபுக்கள் தம் கைகளை நீட்டி ஸ்தாவர, ஜங்கம, பூசர, கேசர, ஜலசரங்களாகிய ஸகல ஜீவராசி களையும் அழைத்து, 'வருக வருக, சகோதர, வருக; யாங்கள் அனைவரும் சகோதரரேயாம்,' என்று மொழிவது போலிருந்தது. ஸ்வரங் கள் மேன்மேலும் தீவிரமாகி முன்னிலும் அதிகமான ஆதரத்துடன்,

சோதரரே, எம் சோதரரே, நாம்
அனைவரும் என்றும் சோதரரேயாம்!

என்று அழைப்பதுபோ லிருந்தன.

பிரபஞ்சமுழுவதும், 'சகோதர, சகோதர,' என்னும் நாதமே கணீர், கணீர் என்று ஒலித் தது. அந்த நாதம் பிரம்மாண்ட மெங்கும் பரவி அண்டச் சுவரைத் தாக்க, அங்கிருந்தும், 'சகோதர, சகோதர, சகோதர,' என்று எதி ரொலி எழுந்தது. கிழக்கும் தெற்கும் மேற் கும் வடக்கும் கம்பீரமான குரலில் 'சகோ தரரே! எம் சகோதரரே, நாம் அனைவரும் என்றும் சகோதரரேயாம்,' என்று மேன் மேலும் மொழிவதுபோ லிருந்தது.

'சகோதர, சகோதர, சகோதர,' என்று வஸிஷ்டர், விசுவாமித்திரர், வால்மீகி இவர் களின் நெஞ்சகத்திலிருந்து பிரதித்வனி எழுந் தது. ஏதோ மோகனசக்தி அவர்கள் புலன்

களை விறைக்கச்செய்து உள்ளத்தை உருக்கியதுபோலும், அம் மூவரும் 'சகோதர, சகோதர, சகோதர,' என்ற நாதகீதத்துக்கு ஒத்துப் பாடினார்கள். அவர்களில் ஒருவர் மகரிஷி, ஒருவர் திக்விஜயி, மற்றொருவர் அடித்துப் பறிக்கும் திருமேனி. ஒரு கணப்பொழுதுக்கு அவர்களின் ஒன்றோடொன்று முரணும் மனோ விகாரங்கள் மறைந்துவிட்டனபோலும். அனைவருடைய இருதயங்களும் இசையொத்து ஏக ஸ்வரத்தில் சம்மேளித்து 'சோதரரே! எம் சோதரரே, நாம் அனைவரும் என்றும் சோதரரேயாம்,' என்று மீட்டுவதுபோ லிருந்தது.

ரு

## கானத்துக்குப்பின்

அம் மூவரும் கானரஸ வெள்ளத்தில் மூழ்கித் தம்மை மறந்திருந்தனர். ஆனால், அதி ரகசியமாய், இருந்திருந்து, மெல்ல மெல்ல, நுண்ணிய நீரொழுக்குப்போல் ஒரு பாவனை அவர்களின் அந்தரங்கத்தில் பாயத் தொடங்கிற்று. அவர்கள் அந்தக் கானத்தில் அவ்வளவு வெறிகொண்டு தன்மயமாய் லயித்துப்போயிருந்தபடியால், அதிவேகமான சிந்தையின் ஆற்றொழுக்கினாற்கூட அவர்களை வலித்திழுக்க முடிந்திராதென்றால், இருதயத்தின் ஆழ்ந்த அடித்தலத்தில் அந்தர்வாஹினியாய்ப் பாயும்

அந் நுண்ணிய பாவனையைப்பற்றிப் பேசவும் வேண்டுமோ? அவர்கள் முன்னிருந்த வண்ணமே கானத்தில் தேக்கித் திளைத்துத் தன்மயமாகவே இருந்தனர். ஆயினும் அவர்களின் உள்ளுணர்வு இளகி, உருகி, சிறுகச் சிறுக வேறோர் தன்மையை அடையலாயிற்று.

வஸிஷ்டரின் மனதில் ஆத்ம ஸந்துஷ்டி நிறைந்தது, — 'பிராமணருக்கும் க்ஷத்திரியருக்கு மிடையிலுள்ள விவாதத்தை நான் ஒருவாறு சமாசப்படுத்திவிட்டேன்; நான் எல்லா மனிதர்களும் பரஸ்பரம் சகோதரபாவத்தோடு ஒழுகும்படி ஏற்பாடு செய்துவிட்டேன்,' என்று நினைத்தார்.

விசுவாமித்திரரின் உள்ளத்தில் ஆத்ம ஸ்துதி, தற்பெருமை, தலைதூக்கிநின்றது,— 'நான் என் தோள்வலியால் உலக முழுவதையும் வென்று மனிதவர்க்கத்துக்குள் ஒருவாறு ஐக்கியத்தை ஸ்தாபித்துவிட்டேன்; என்னுடைய ஆளுகையில் எல்லோரும் சகோதரர் போலவே அன்னியோன்னியமாய் இருப்பார்கள்,' என்று வீறு பேசிக்கொண்டார்.

இனி வால்மீகியின் அந்தரங்கத்தில் உண்டான எண்ணம் யாது? கடுமையான துயரமும் பச்சாத்தாபமுமேயாம். 'ஐயோ, நான் என்ன செய்துகொண்டிருந்தேன்? என் சகோதரரை

யல்லவோ முற்றிலும் நாசம் பண்ணிக்கொண் டிருந்தேன்!" என்று தன்னையே நொந்து கொண்டார்.

௬

## ரிபுக்களின் புறப்பாடு

சற்றுநேரம் கழித்து ரிபுக்கள் ஹிமாலய சிகரங் களிலிருந்து புறப்பட்டு அந்தரிக்ஷத்தில் ஏறிச் செல்லலானார்கள். ராசிசக்கரம் விபரீதமார்க் கத்தில் சுழல்வதாக வஸிஷ்டர் முதலானவர் களுக்குத் தோற்றியது. ரிபுக்கள் உயரத்தில் ஏறிச் செல்லச் செல்ல, லக்ஷோபலக்ஷமான நூதன நக்ஷத்திரங்கள் வெளிப்பட்டு ஒளி வீசுவதுபோல் காணப்பட்டது; இந்த நக்ஷத் திரத் தோற்றமும் சீக்கிரத்தில் மறைந்துவிட் டது. ஒரு பிரம்மாண்டமான வெண்மேக படலம் ஆகாயமண்டலத்தை ஆவரித்துக் கொண்டு சாயாபதத்துக்குள் ஊடுருவிச் செல் வது போலவும், அந்தச் சாயாபதம் அகிலப் பிரபஞ்சத்தையும் விழுங்கிவிடுவது போலவும் தோற்றியது. துவாபரயுகத்தின் முடிவில் அர்ஜுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ணன் தன் விசுவ ரூபத்தைக் காட்டியபொழுது அந்த நாராயண னுடைய விராட் ஸ்வரூபத்தின் திருவாயில் ஜகத்து முழுவதும் பிரவேசிப்பதாக எப்படிக் காணப்பட்டதோ, அப்படியே இந்தச் சமயத்தி

லும் நிகழ்வதாகத் தோற்றியது. படிப்படியாக வெண்மேகபடலம் முழுவதும் சாயாபதத்துக்குள் கலந்துபோகவும், அதன் நடுவில் உண்டாயிருந்த குகைபோன்ற பிளவு நிரம்பி மூடிக்கொண்டது. அகில உலகமும் முன்னைய உருவத்தை அடைந்தது; ஆகாயமண்டலம் முன்போலவே ஸ்திரபாவத்தை அடைந்தது; ஆகாயத்தின் கோமளமான நீலநிறப் பரப்பில் நக்ஷத்திரங்கள் முன்போலவே ஜொலிக்கலாயின. பூமண்டலத்தில் பிராதக்காலம் உதயமாயிற்று. காகமும் குயிலும் கூவிக்கொண்டு எழுந்தன.

விசுவாமித்திரரும், வஸிஷ்டரும், வால்மீகியும் ஆவல் நிறைந்த கண்களால் சாயாபதத்தின் திக்கு நோக்கி இந்நேரமளவும் பார்த்த வண்ணமாகவே இருந்தார்கள். ரிபுக்கள் மறைந்துபோகவும், அவர்களுடைய ஆசையெல்லாம் அழிந்தது. ரிபுக்களின் கானஸ்வரங்கள் மாத்திரம் இன்னும் அவர்களின் செவிகளிலே தங்க, 'சோதரரே, எம்சோதரரே, நாம் அனைவரும் என்றும் சோதரரேயாம்,' என்று பாடுவதுபோல் நின்று ஒலித்துக் கொண்டிருந்தன.

இதுவரையில் அவர்களுடைய மனத்தில் இருந்த இடம் தெரியாமல் மந்தமாய் ஊர்ந்து

கொண்டிருந்த சிந்தை இப்பொழுது தீவிரகதியுடன் எழுந்தது. அப்பொழுது இளமையினுடையவும், யௌவனத்தினுடையவும், பழையவும், புதியவும், தன்னயங்கொண்டவும், தன்னயமற்றவுமான பலவகைத் திண்ணிய, முரணுற்ற மனோபாவங்களும் அவாக்களும் ஏககாலத்தில் உள்ளத்திலே உதித்தெழுந்து, இப் புதிதாய்த் தோன்றிய அதீந்திரியமும் ஆதிதெய்விகமுமான பாவனையோடு கலந்து, எல்லோர் மனத்திலும் ஒரு பெருங் கலக்கத்தை உண்டாக்கித் தீர்த்தன. எழுந்து எங்கேனும் செல்லத் தங்கள் அங்கங்களை அசைப்பதற்கும் கணப்பொழுதுக்கு அவர்களுக்கு ஆற்றலில்லாமலிருந்தது. இருந்தாலும், அவர்கள் செவிகளில் மாத்திரம் சப்தித்துக்கொண்டேயிருந்தது, 'சோதரரே, எம் சோதரரே, நாம் அனைவரும் என்றும் சோதரரேயாம்,' என்னும் நாதகீதம்.

எ

## ஆலோசனைகள்

வஸிஷ்டரின் மனத்துக்கு ஒருமுறை தோற்றுகின்றது, "என்னே புத்தியின் மகிமை!" என்று. "க்ஷத்திரியர்களை எவ்வளவு லேசாய் ஏய்த்துவிட்டேன்!" என்று ஒரு க்ஷணம் கருதுவார். மறுபடியும் எண்ணுவார், "பிரா

மணர்களையும் க்ஷத்திரியர்களையும் ஒன்றாய்ச் சேர்த்துவிட்டேன்; மற்ற ஜாதிகளையும் அப்படியே சேர்க்க என்னால் ஆகாதா?" மீண்டும் காதில் முழங்குகின்றது அதே பல்லவி, 'சகோதர, சகோதர, சகோதர,' என்று. மறுபடியும் தர்க்கிக்கின்றார், — "சகல சாஸ்திரங்களையும் கசடறக் கற்றிருக்கிறேன். தேஜஸ் அல்லது பௌருஷசக்தி என்பது யாது? சாஸ்திரமோ 'ஸ்வகார்யம் உத்த்ஹரேத் ப்ராஜ்ஞ:' என்று கூறுகின்றது, அதாவது, புத்திமான் தன் காரியங்களைத் தானே சாதித்துக் கொள்ளவேண்டுமென்று உபதேசிக்கிறது. இனி அதில் மானமென்ன, அவமானமென்ன? பௌரோகித்தியம் கீழான தொழில் என்பது வாஸ்தவமே. ஆனால் சகல அதிகாரங்களும் பிராமணனுக்கென்றே ஏற்பட்டிருக்கவில்லையா? பண்ணவேண்டியதை யெல்லாம் பக்குவமாகவே பண்ணியிருக்கிறேன். இனி, மந்திரசங்கிதைகள் செய்திருக்கிறேன். அவைகளும் இதையே சூசிப்பிக்கின்றன. யோகசாஸ்திரமோ, அதுவும் இதைத்தான் வலியுறுத்துகின்றது. மானமோ, அவமானமோ, எது வந்தாலும் சரி, என் உத்தேசத்தைச் சாதித்துத்தான் தீருவேன். என்னால் முடியாதா? தேஜஸ், சத்தியம், தர்மம், சர்வமும் மித்தை. காரிய சாதனமே சத்தியம். காரியத்தைச்

சாதிக்க என்னால் ஆகாதா? ரிபுக்கள் எதற்காக வந்தார்கள்? ஆஹா! என்ன கானம்! என்ன கருணாரஸம்! நான் சாதிக்கமாட்டேனா? இன்னமும் ஒருமுறை அவர்களைக் கண்ணாரக் காணப் பெறேனோ? இம்முறை காணப் பெற்றால் நாமும் அப்படியே 'சகோதர, சகோதர,' என்று ஜவாப் சொல்லுவோம். இதற்குச் சாதனம் புத்தியும் சாஸ்திரமுமேயாம். நான் சாதித்துத்தான் தீருவேன்!" அப்போது, "சகோதர, சகோதர, சகோதர," என்னும் நாதகீதம் அவர் செவியில் ஜணஜணத்காரம் செய்தது.

விசுவாமித்திரர் ஆலோசிக்கிறார், "இவர்கள்தாமோ ரிபுக்கள்! என்ன கானம்! என்ன வடிவம்! என்னுடைய அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்! என் அதிர்ஷ்டத்துக்கு என்ன குறைவு? எனக்கும் ஒருநாள் அப்பேர்ப்பட்ட ஆநந்தபாவசம் உண்டாகத்தான் போகிறது. அப்படிச் சித்திக்கும் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. நானும் ஒருநாள் ரிபுக்களின் வாக்கியத்துக்கு உத்தரம் சொல்லித்தான் ஆக வேண்டும். அஹம் விஸ்வாமித்ர:. என்பெயர் விசுவாமித்திரனல்லவா? முதலில் நான் உலகத்தை ஜயிக்கட்டும். அதில் என்னைத் தடுக்க எவராலும் ஆகாது. எல்லோரையும் என் கைக்கு அடங்கும்படி நான் செய்யட்டும்; பிறகு

அவர்களை ஒன்ருக்கிவிடுவேன்." காதில் இசைத்தது 'சகோதர, சகோதர' என்ற நாத கீதம். மறுபடியும் பாவிக்கிருர், "இந்தப் பூலோகத்தில் என்றைக்காவது ஒருநாள் நானும் இவ்வாறு பாடும்படி செய்தால்தான் விசுவாமித்திரன் என்ற பெயர் எனக்குத் தகும். ஆனல் அது என்னல் சாதிக்க முடியாதா? இந்தக் காரியத்தை முடிக்க இவ்விரு தோள்களுக்கும் வலிமை இல்லையா?"

வால்மீகி பிரலாபிக்கிருர், "எத்தனை பேர்களைக் கொன்றிருக்கிறேன்? எத்தனை துர்ப்பாக்கியவதிகளை விதவைகளாகும்படி செய்திருக்கிறேன்? இந்த மகா பாதகங்களெல்லாம் எப்படித் தீரும்? இந்தத் தீ எப்படி அவியும்? இங்கே ரிபுக்கள் வந்ததைப் பார்த்தேன். அவர்கள் கானம் செய்த கீதத்தையும் கேட்டேன். அந்தக் கீதம் என் நெஞ்சத்தில் தீயை மூட்டித் தகதகவென்று எரியும்படி செய்துவிட்டது. ஆனல் அவர்களோடு கலந்து அந்த ஆநந்த பரவசத்தை அனுபவிக்க என்னல் முடியாமற்போய்விட்டது. ஐயோ! நான் ஏனே மனிதனுய்ப் பிறந்தேன்? எங்கே நாம் எல்லோரும் சகோதரர்போல் அன்னியோன்னியமாய் இருக்கவேண்டுமோ, அங்கே என்னைக் கண்டமாத்திரத்தில் எல்லோரும் ஓடிப்போய் விடுகிருர்களே! ஓ தெய்வமே! ஏனே எனக்கு

இந்த இழிந்த தொழில் லபித்தது? இது யார் இட்ட சாபமோ தெரியவில்லையே!" என்று எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணாகிப் புலம்பிக் கொண்டிருக்கையிலேயே, 'சகோதர, சகோதர, சகோதர,' என்னும் கானம் மீண்டும் செவியில் தாக்கியது. வால்மீகியின் கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகி அவர் மார்பை நனைத்து விட்டது. "என்ன தீவினைகளைச் செய்தேனோ! இந்த நினைவு என் நெஞ்சத்தைவிட்டு ஒரு காலும் அகலாதோ?" என்று மீண்டும் அங்கலாய்த்தார். அவருடைய 'விழிநீர்கள் ஊற்றென வெதும்பி யூற்றி,' கரைபுரண்டு வழிந்தன.

## அ

## பின் விளைவுகள்

இவ்வாறு அவர்களது இருதயங்களிலே எவ்வளவுநேரம் குழப்பம் உண்டாயிருந்ததோ யாரே சொல்லவல்லார்? ரிபுக்கள் பாய்ச்சிய புதிய மின்சார சக்தியின் வன்மையினால் அவர்களது இருதயாகாசத்திலே இந்த மும்முரமான காற்றுமழை எவ்வளவுநேரம் அடித்துக்கொண்டிருந்ததோ யாரே ஊகிக்க வல்லார்? கடைசியில் அது அடங்கியமர்ந்து, வெளியுலகின் உணர்ச்சி அவர்களின் இந்திரியங்களுக்கு உண்டானபோது எல்லாம் வேறு ரூப

மாய்த் தோற்றியது. சாற்காலத்தின் ஆகாயத்தில் சூரியோதமாயிருந்தது. நக்ஷத்திரங்கள் எங்கேயோ போய் ஒளிந்தன. சுகமாய் வீசும் காலைக் காற்று உள்ளத்துக்கு உற்சாகம் அளித்தது. ஊற்றுகளின் நீர்க்குமிழியோசை செவிகளைச் சாந்தப்படுத்தியது. அம் மூவருக்கும் இரவில் நடந்த செய்திகள் யாவும் கனவுபோல் தோற்றின.

மூர்ணுற்ற கருத்துக்களின் மும்முரக் காற்றுமழை நின்றபிறகு வஸிஷ்டரின் மனத்தில் சாந்தியும் சுகமும் தோன்றின. அவர் தமது கல்வி, அறிவு, தபோபலம், இவற்றின் துணையைக்கொண்டு உலகத்தில் சர்வ ஜன சகோதரத்துவத்தை ஸ்தாபித்துவிடலாம் என்னும் பலமான ஆசையாலும் திடமான பிரதிக்கினையாலும் அகமகிழ்ந்திருந்தார்.

விசுவாமித்திருக்கோ தற்பெருமை தலைக்கேறியிருந்தது. அதோடுகூடக் கொஞ்சம் அச்சமும் கலந்திருந்தது. "நான் புஜபலத்தால் கிட்டத்தட்ட முழு உலகத்தையும் ஜயித்துவிட்டேன். பாக்கியுள்ளதையும் சீக்கிரமாய் வென்று சர்வ ஜன சகோதரத்துவத்தை நிலைநாட்டிவிடுவேன்," என்று அகங்கரித்தார்.

பாவம், வால்மீகிக்குச் சாந்தியுமில்லை, சுகமுமில்லை. பொறுக்கமுடியாத மனோவேத

ஊயே அவருக்கு வாய்த்த சகலபாக்கியமு மாயிருந்தது.

அவர் வழிப்பறிக்கூட்டத்தாரிடம் திரும் பிப்போகவில்லை. தேம்பித் தேம்பி அழுது கொண்டும், புலம்பிக்கொண்டும், சாந்தியடை யும் நோக்கத்துடன் உட்செல்லற்கரிய அடர்ந்த காட்டிற்கு நேரே நடந்து சென்றார்.

வஸிஷ்டர் உள்ளம் மகிழ்ந்து உல்லாஸ மாய்க் காலைக் கடன்களைத் தீர்க்கும்பொருட்டு யோகபலத்தினால் தம் ஆசிரமத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும் வழியிலே, அகன்ற மார்பும் சுடர் வீசும் சரீரமுமாய் விளங்கும் விசுவாமித்திரர் பூமி அதிரும்படி நடந்து கீழே இறங்கிவருவதைக் கண்ணுற்று, உடனே யோகசக்தியினால் பரபரப்புடன் அவரை அணு கவும், இருவருமாகச் சேர்ந்து கால்நடையாய்க் குன்றிலிருந்து இறங்கிச் செல்லலாயினர்.

# இரண்டாம் பாகம்

## க

## இருவரும் சந்தித்தல்

வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் இறங்கி வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களது அடிவைப் பின் அதிர்ச்சியால் பர்வதம் தாழ்ந்து நடுக்கம் கொள்ளுகிறது. எதிரிலுள்ள கற்பாறைகள் வெகுதூரம் சிதறுண்டு அவர்களுக்கு வழி விட்டு விலகி நிற்கின்றன. ஓங்கி வளர்ந்திருக் கும் விருக்ஷங்கள் கிளைகளாகிய கைகளைப் பரப்பி அவர்களுக்கு நிழல் தந்து உபசரித்து, அவர்களது சரீரங்களைக் குளிரச்செய்கின்றன. கிளைகள்தோறும் தீங்குரல் பறவைகள் பலவர் ணச் சிறகுகள் பொலிய உடல்பூரித்து, உள்ளம் களித்து, மதுரமாய்ப் பாடி, அவர்கள் செவி களுக்கு இன்பம் அளிக்கின்றன. பூங்கொடிகள் விருக்ஷங்களின்மேலிருந்து அவர்களுடைய சர்வாங்கங்களிலும் புஷ்பங்களை உதிர்க்கின் றன. கலகல நாதத்தோடு பாய்ந்து செல்லும் நீரோட்டங்கள் அடிதோறும் அடிதொறும் அலைக் கைகளால் அவர்களது பாதையைப் பெருக்கிச் சுத்தஞ் செய்கின்றன. வனபூமியில் வளர்ந்துள்ள கோமளமான புதர்க் கூட்டங்கள் குளிர்ச்சி பொருந்தி, நறுமணம் தாங்கி, மந்த

மாய் வீசும் இளங்காற்றில் அசைவுற்று அவர்களுக்கு வெண்சாமரம் போடுகின்றன. மிகச் செங்குத்தாயும் மேலேறிச் செல்வதற்கரியவாயுமுள்ள கொடுமுடிகளையெல்லாம் அவர்கள் அவலீலையாய்க் கடந்து வருகிறார்கள். பின்புறத்தில் மேகமண்டலத்தைப் பிளந்து செல்லும் பர்வதமாலை, கீழே பசும்புல் பாந்த முழுப் பச்சையான சமதரை, இவற்றின் இடையே தேஜோமயமாய்த் திகழும் வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் விளங்குகிறார்கள். இருவரும் பர்வதசிகரம்போல் பருத்துயர்ந்த மேனியர், பரிதியின் கதிரில் பிரதிபலித்துத் தீவிரமாயும் உஜ்வலமாயும் ஒளிரும் இரண்டு பனிச்சிகரங்கள் புடைபெயர்ந்து சமான கதியுடன் கீழ் நோக்கிப் புரண்டுவிழுவதுபோலத் தோற்றினர்.

அவர்கள் சந்தித்து ஒருவர்க்கொருவர் வந்தனுதிகள் புரிந்தபிறகு வஸிஷ்டபகவான், உதாத்த அநுதாத்த ஸ்வரிதாதி ஸ்வரப்ரக்ரியைகளால் பரிஷ்கரிக்கப்பட்டுக் கோமளமாய்க் கணீரென்றொலிக்கும் கம்பீரமான குரலோசையால் கிரிகுகைகளையும் கந்தரங்களையும் எதிரொலியிடச்செய்து, விசுவாமித்திரரை நோக்கி வினவலாயினர்: "மகாராஜாதிராஜ, பூலோக முழுவதையும் திக்விஜயம் செய்யும் காரியத்தில் தாங்கள் ஊக்கத்துடன் பிரவர்த்தித்திருப்பதாக நான் நெடுநாளாய்க் கேள்வியுற்

றிருக்கிறேன். தவம்புரிதல், வேதமோதல், வேள்வியியற்றல் முதலிய வைதிக கர்மங்களில் நான் நிரந்தரம் வியாபரித்திருப்பதனுல், தங்களைப்போன்ற வீரசிரோமணியின் அற்புத சரித்திர சம்பந்தமான செய்திகளைத் தெரிந்து கொள்ள எனக்கு அவகாசமில்லாமற்போயிற்று. இன்று தங்களுடைய தரிசனம் கிடைத்தது என் மகாபாக்கியவிசேஷமே. தாங்கள்கிருபை கூர்ந்து தங்கள் திக்விஜய வியாபாரத்தின் அற்புதவிருத்தாந்தத்தை வர்ணித்துச்சொல்லி என்னுடைய ஆவலைத் தீர்க்கவேண்டும்."

வஸிஷ்டரின் இடிமுழக்கத்தை நிகர்த்த குரலோசை குகைகளிலும் கந்தரங்களிலும் சென்று அடங்குவதற்கு முன்னரே வேந்தர் வேந்தனுகிய விசுவாமித்திரர், பயங்கரமான கோதண்டத்தின் டங்காரத்வனிபோல் ஸ்பஷ்டமாயும், விரைவாயும், கம்பீரமாயும், ஆனல் சிறிது கடினமாயும் உள்ள வீரத் தொண்டையில் குரலெடுத்துக் கூறலாயினர்: "பிரம்மரிஷியே! அடியேனைப்போன்ற அற்ப மனிதனுடைய சரித்திரத்தை அறியவேண்டுமென்று நும்போலியான மகாபுருஷருக்கு ஆவல் உண்டாவது அடியேனுடைய பரமபாக்கியமென்றே எண்ணுகிறேன். ஆகையால், ஒருவன் தன்னுடைய கீர்த்தியைத் தன் வாயாலேயே வர்ணிப்பது குற்றமாயினும், தேவரீ

ருடைய ஆவலைத் தீர்க்கவேண்டிக் கூடியமட்டில் சிறிது சொல்லுகிறேன். சாம, தான, பேத, தண்டங்களென்னும் நால்வகை உபாயங்களுக்குள்ளே, பேதமும் தண்டமுமே திக்விஜயிக்குப் பிரசஸ்தமானவை. ஆகவே நான் இவ்விரு உபாயங்களையே கைக்கொண்டு இம்முயற்சியில் இறங்கியிருக்கிறேன். அங்கம், வங்கம், கலிங்கம், திரமிளம், திராவிடம், காசி, காஞ்சி, அவந்திகை, மஹாராஷ்ட்ரம், ஸௌராஷ்ட்ரம், கூர்ஜ்ஜரம், மத்ஸ்யம், மகதம், விதர்ப்பம் முதலிய தேசங்களை ஓரே அக்ஷௌஹிணி* சைனியத்தைக்கொண்டு என் அதிகாரத்துக்கு அடங்கும்படி செய்துவிட்டு இன்று ஹிமாலயத்தின் அடிவாரத்தில் பாசறை அமைத்திருக்கிறேன். கிழக்குத்திசையில் சீன, ஹூண, ஷான, சியாம, மக, நாகாதி ராஜ்ஜியங்களுக்குள்ளே கலகத்தைக் கிளப்பிவிட வேண்டி, பேதோபாயத்தில்கைதேர்ந்த, நம்பிக்கையுள்ள, மந்திரிகளை அனுப்பியிருக்கிறேன். மேற்குத் திசையில் சக, யவன, தாத, அரபிய, பாரஸீக, மிலேச்ச, கிராதர் முதலிய ஜாதியார்களையும் கலைத்து அவர்களுக்குள் அமைதியின்மையை உண்டாக்கும்பொருட்டுத் தொண்ணூற்றொன்பது அக்ஷௌஹிணி சைனியத்தோடு என்னுடைய தலைமையான சேனாபதியை அனுப்பி

* தமிழில் 'அக்குரோணி' என்பர்.

யிருக்கிறேன். எல்லாப் பக்கங்களிலுமிருந்து நல்ல சமாசாரங்களே வந்துகொண்டிருக்கின்றன. ஹிமாலயப் பிரதேசங்களை ஜயித்தபிறகு ஒரு முறை சேனுசகிதமாய்ச் சமஸ்த பூமண்டலத்தையும் பிரதக்ஷிணம் செய்து வந்தால், என் திக்விஜயத்தைப் பூர்த்திசெய்துவிடுவேன்.”

வஸிஷ்டர்: மகாராஜாவின் திக்விஜயக் கதையைக் கேட்டுப் பரமசந்தோஷம் அடைந்தேன். தாங்களோ ராஜநீதியில் மகாசமர்த்தர்; அமர்க்களத்தில் அசகாய சூரரான சேனுபதி. தங்களைப்போன்றவருக்கு உலகத்தைத் திக்விஜயம் செய்வது அசாத்தியமான காரியமன்று. ஆனுல் எனக்கு ஒரு விஷயத்தில் சந்தேகமுண்டு; அதைத் தயவுசெய்து தீர்ப்பீர்களாகில் நான் கிருதார்த்தனுவேன்.

விசுவாமித்திரர்: எளியேனுக்கு வேறெவராகிலும் இவ்விதக் கட்டளை இடும்பக்ஷத்தில், அதைப் பரிகாசமென்றே அடியேன் கருதவேண்டியதாயிருக்கும். ஆனுல் தங்களைப் போன்ற கம்பீரப் பிரகிருதிக்குப் பரிகாசம் சம்பாவிதமன்று. ஆகையால் கிருபைகூர்ந்து ஆஞ்ஞை செய்யும்பட்சத்தில், தேவரீருடைய ஆசங்கைக்குச் சாத்தியமானமட்டில் சமாதானம் கூற அடியேன் காத்திருக்கிறேன்.

வஸிஷ்டர்: என்னுடைய பிரதம சந்தேகம் இதுவே: திக்விஜயத்தினல் ஆகும் பிரயோஜனம் என்ன?

விசுவாமித்திரர்: மகாரிஷியே, தேவரீர் அவ்வாறு திருவுள்ளம் பற்றக்கூடாது. திக்விஜயத்தினல் வையகம் முழுவதும் ஒரு வேந்தன் குடைக்கீழ் வரும். அவனது செங்கோலின்கீழ் வாழும் சகல ஜாதிகளுக்குள்ளும் ஐக்கியம் நிலைபெறும்.

வஸிஷ்டர்: எனக்கு அப்படித் தோற்றவில்லை. திக்விஜயத்தினல் வெற்றிபெற்றவனுக்கும் வெல்லப்பட்டவருக்கும் இடையில் பரஸ்பரம் விரோதபாவம் ஜனித்து, ஐக்கியபாவம் உண்டாவதற்குச் சிறிதும் இடமில்லாமற் போய்விடுகிறது. வெல்லப்பெற்றவர்களுக்குள்ளும் வெற்றிகொண்ட அரசன் அளிக்கும் அனுக்கிரகங்களின் தாரதம்மியத்தினல் பகையும் பொருமையும் உண்டாகின்றன. எனது கேள்வியின் சூக்ஷமம் என்னவென்றால், திக்விஜயத்தினல் ஜாதி சமூகங்களுக்குள்ளே எப்பொழுதேனும் சகோதாபாவம் உண்டாவதுண்டா? உள்ளபடியே அவர்களனைவரும் உடன்பிறந்த அண்ணன் தம்பிகளாவார்களா?

விசுவாமித்திரர்: திக்விஜயத்தினலன்றி வேறெதனுலும் பூமண்டலத்தில் சகோதா

பாவத்தையும் ஐகமத்தியத்தையும் ஏற்படுத்த முடியாது. இதுதான் என்னுடைய சித்தாந்தம். திக்விஜயியான அரசன் தந்தையை ஒத்தவன்; அவன் பிரஜைகளைத் தான் பெற்ற மக்களைப்போல் பரிபாலிக்கிறான். ஆதலால் அவர்களெல்லாம் சகோதராராகின்றனர். சென்ற இரவின் நிகழ்ச்சி எனது இச் சித்தாந்தத்தை இன்னும் வலியுறுத்துகின்றது. திக்விஜயத்தினால் ஐக்கியத்தையும் சகோதரபாவத்தையும் ஸ்தாபிப்பதில் என்னை உற்சாகப்படுத்தும் பொருட்டே நேற்றிரவு ரிபுக்கள் எழுந்தருளியிருந்தனர்.

வஸிஷ்டர்: அதுதான் தங்களுக்குண்டாயிருக்கும் பிரமை. ரிபுக்கள் அவ்வப்பொழுது தம் ஜன்மபூமியைப் பார்த்துப்போக வருகிறார்கள். தங்களை உற்சாகப்படுத்தும்பொருட்டு அவர்கள் வரவில்லை. இன்னொரு சங்கதி: தாங்கள் திக்விஜயத்தினால் மனிதர்களின் சரீரங்களைத் தானே வெல்லலாம், அவர்களின் மனத்தின்மேல் தங்களுடைய பிரபுத்துவம் எவ்வாறு செல்லும்?

விசுவாமித்திரர்: அவர்கள் மனத்தில் எதை வேண்டுமானாலும் எண்ணிக்கொள்ளட்டும்; அந்த எண்ணத்தை வெளியில் காட்டவிடமாட்டேன்.

வஸிஷ்டர்: அப்படிச் செய்வது அடக்கி யாள்வதாகுமேயொழியப் பரிபாலனமாகமாட் டாது; அந்தச் சகோதரபாவமென்று சொல்ல வொண்ணுது. மனத்தில் துவேஷ உணர்ச்சி இருக்கும் வரையில் சகோதரபாவத்துக்கு இடமேயில்லை.

விசுவாமித்திரர்: முதலில் பலப்பிரயோ கத்திஞல் அடக்கியாளப்படுவதற்குப் பழகிப் போய்விட்டால், எல்லோரும் ஒரே சமமான தசைக்கு வந்துவிடுவார்கள்; அப்பொழுது அனைவருக்குள்ளுமே சகோதரபாவம் குடி கொள்ளும்.

வஸிஷ்டர்: அது சகோதரபாவமாகாது, தணிக்கப்பட்ட தீயின் புகைச்சலேயாகும். அந்தத் தீ பற்றிக்கொண்டு கொழுந்துவிட்டெரி யும்போது அது தேசமெங்கும் பாவும். அந்த அக்னிஜ்வாலையிலே அரசன் ஆகுதியாய் விழு வான்.

விசுவாமித்திரர் (வலது கையை நீட்டிக் கொண்டு): இந்தக் கையில் வில்லும் அம்பும் இருக்கிறவரையிலே என்னுடைய பிரஜைகள் ஒருகாலும் கலகம் செய்யத் துணியமாட் டார்கள்.

வஸிஷ்டர்: வில்லையும் அம்பையுங் கொண்டே சகோதரபாவத்தை நிலைக்கப் பண்

ணுவதாயிருந்தால், அதைச் சகோதரபாவ மென்று சொல்லத் தகுமோ?

விசுவாமித்திரர்: தகாதென்று ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் திக்விஜயத்தாலன்றிச் சகோதரபாவத்தை ஸ்தாபிக்க வேறு உபாயம் எதையாவது தேவரீர் காட்டமுடியுமா?

வஸிஷ்டர்: முடியாவிட்டால் இவ்வளவு பேச்சு நான் ஏன் பேசவேண்டும்?

விசுவாமித்திரர்: அப்படியானல் தேவரீர் கமண்டலத்துக்குள் என்ன உபாயம் வைத்திருக்கிறீர், காட்டுங்கோள் பார்ப்போம்.

வஸிஷ்டர்: உபாயம் இதுதான்: பலப் பிரயோகத்தினுல் மனிதர்களை ஒன்ருக்க முடியாது. மனிதர் தமக்குத்தாமே சிந்திக்கத் தெரிந்துகொண்டிருக்கிறவரையில், அவர்களில் எவ் விருவரையும் ஒன்ருய்ச் சேர்க்க எவராலு மாகாது. ஆகவே சுவாதீன சிந்தையின் ஓட்டத்தைத் தகைவதே எல்லாவற்றிலும் முதன்மையாக வேண்டப்படுவதாம். தாழ்ந்த வகுப்பாருக்குச் சுவாதீன சிந்தை உண்டாகாதிருக்கும்படியான எல்லாவகைப் பிரயத்தனங்களையும் செய்யவேண்டும்.

விசுவாமித்திரர்: அஞ்சாறு பார்ப்பார் ஒன்ருய்ச் சேர்ந்துவிட்டால் உலகத்திலுள்ள

அசேஷ ஜனங்களின் சிந்தாசக்தியின் சுவ தந்திரப் பிரவிருத்தியையும் தடுத்துவிட முடியுமோ?

வஸிஷ்டர்: புத்திபலத்தினால் சாதிக்க முடியாத காரியமும் உண்டோ? நான் அவர்களின் மனப்பிரவிருத்தியைச் சிறுபிராய முதற் கொண்டே வேறு மார்க்கங்களில் திருப்பிவிடுவேன். சுகபோகங்களில் அழுந்தியிருக்கச் செய்வேன். அவர்களின் உள்ளங்களில் வேறு சிந்தைகள் உண்டாவதற்கு இடமே தரமாட்டேன். கல்வி கற்பதற்கும் இடமில்லாமற் செய்துவிடுவேன். இவ்வாறாக ஒரு தலைமுறையில் முடியாவிட்டால், பத்துத் தலைமுறைகளிலாவது மனிதஜாதிகளுக்குள் மாத்திரமேயல்லாமல் மனிதருக்கும் மிருகங்களுக்கு மிடையில் கூடச் சகோதரபாவத்தை நிலைபெறச் செய்வேன்.

விசுவாமித்திரர்: ஓகோ! மனிதர் மிருகப் பிராயமாய்விடுவார்கள், என்ன ஆச்சரியமான சகோதரபாவம்! இந்தச் சகோதரபாவம் எதன் பொருட்டு? பிராமணருடைய ஆதிபத்தியத்தை அசைவில்லாமல் காப்பாற்றிவைப்பதற்கோ? திக்விஜயத்தினால் சகல ஜனங்களும் ஒரே அரசன் கீழ் மாத்திரமே அடங்கியிருக்கவேண்டும். தாங்கள் சொல்லும் உபாயத்தின்படியோ

லக்ஷாபலக்ஷம் பிராமணர்களுக்கு அவர்கள் அடங்கியிருக்கவேண்டி வருமே. இந்தக் காரியத்தைச் சாதிக்கத் தங்களால் ஆகுமென்று நினைக்கிறீர்களா? தங்களுடைய பரம சத்துருவாகிய ஆகாயம் அதோ இருக்கிறதே, தெரியவில்லையா? அவ் அகல் விசும்பை ஒரு முறை நோக்கினால் போதுமே, சுயாதீனமான சிந்தை தானாய்ச் சுரந்து வெள்ளமிட்டு வாராதா?

வஸிஷ்டர்: அதற்கும் நாம் தக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். அனந்தமான ஆகாயத்தின்பக்கம் கண்ணெடுத்துப் பார்க்க எவருக்குமே இடம் தரமாட்டேன். நக்ஷத்திரத்துக்கு நக்ஷத்திரம் ஒரு தேவதையை ஏற்படுத்தி வைப்பேன். மனிதரது அதிர்ஷ்ட பலாபலன்களுக்கும் ஆகாயமண்டலத்திலுள்ள கிரக தாரா கணங்களுக்கும் ஒரு சம்பந்தத்தை உறுதியாய் அமைத்துவைப்பேன். அந்தரிக்ஷத்திலுள்ள பெருவெளியையெல்லாம் பயங்கரமான உருவங்களைக் கொண்டு நிரப்பிவைப்பேன். எந்தப் பாவனையோடு ஆகாயத்தை நோக்கினால் சுவாதீன சிந்தை உண்டாகுமோ அந்தப் பாவனை அவர்களின் மனதுக்குள் நுழைவதற்கும் இடம் தரமாட்டேன். சமுத்திர யாத்திரையினால் சுயாதீனப் பிரவிருத்தி உண்டாகின்றது, ஆகையால் சமுத்திர யாத்திரையை நிஷேதம் செய்வேன். நித்திய நைமித்திக கர்மங்களை மகா

நிர்ப்பந்தமாய் ஏற்படுத்தி, பிராமணருடைய அனுமதியில்லாமல் ஒரு அடி எடுத்துவைக்கக் கூட ஒருவருக்கும் முடியாமற் போகும்படி செய்துவிடுவேன். அவ்வளவுக்கும் பிராமணன் ராஜ்ஜியபாரத்தை வகிக்கமாட்டான்.

விசுவாமித்திரர்: சரி சரி, தங்களுடைய கருத்தெல்லாம் எனக்கு விளங்கிவிட்டது. தந்திரத்தினல் உலகத்தை அடக்கியாளப் பார்க்கிறீர்கள். ஆனல் தந்திரத்தினல் எவ்வளவு காலம் உலகத்தாரை மயக்கிவைக்க முடியும்? தங்களுக்கு நான் நிச்சயமாய்ச் சொல்லுகிறேன், கேளுங்கள். விசுவாமித்திரன் கக்ஷியைச் சேர்ந்தவர்களை மாத்திரம் தங்களால் ஏய்த்துவிட முடியாது.

விசுவாமித்திரரது கடுமொழிகளால் வஸிஷ்டரின் கோவத் தீ உள்ளுக்குள்ளே கொழுந்துவிட்டெரியத் தொடங்கிற்று. ஆனல் அவர் அதிக கஷ்டப்பட்டு அதை அடக்கிக் கொண்டார். முற்றிய கோவம் சாந்தமாகிற வரையில் அவர் மௌனமாயிருந்தார். விசுவாமித்திரர் தம்முடைய சூக்ஷ்மமான புத்தி சாதுரியத்தினலும் கூரிய பரிகாச வசனங்களாலும் வஸிஷ்டரை வென்றுவிட்டதாக எண்ணிக்கொண்டு இறுமாந்திருந்தார்; ஆதலால் வெகுநேரம் வரையில் அவரால் ஒன்றும் பேச முடியவில்லை.

நிச்சப்தமாய்ச் சிறிதுதூரம் இறங்கிவந்த பிறகு, விசுவாமித்திருக்குத் தூரத்திலுள்ள தமது பாசறை தென்பட்டது. அப்பொழுது அவர் ஒரு முறை ஆகாயத்தை ஏறிட்டுப் பார்த்து வஸிஷ்டரை விளித்து, "மகானுபாவ, இப்பொழுது அதிக வேளை ஆய்விட்டது; விசேஷமான இடையூறு ஒன்றுமில்லாதிருந்தால், அடியேனுடைய பாசறையில் தேவரீர் அதிதியாய் எழுந்தருளி அமுதுசெய்யத் திருவுள்ளம் பற்றும்பக்ஷத்தில், தாசன் கிருதார்த்தனாவேன்," என்றார்.

வஸிஷ்டர் சம்மதிக்கவும், விசுவாமித்திரர் அவரை மிக்க பரிவுடன் தமது பாசறைக்கு அழைத்துச்சென்று அத்தியந்தம் ஆசாரோபசாரங்களோடு விருந்துசெய்து உகப்பித்தார். மேலும் அவர் நானாதேசங்களிலிருந்து கொள்ளையிட்டுக் கொண்டுவந்திருந்த அபாரமான ரத்னராசிகளையெல்லாம் சிறிது படாடோபத்துடன் காட்டி அதில் சிலவற்றை வஸிஷ்டருக்குத் தக்ஷிணையாகவும் சமர்ப்பித்தார். வஸிஷ்டரும் மகா சந்தோஷமடைந்து, விடைபெற்றுக்கொள்ளும் சமயத்தில் விசுவாமித்திரரைத் தம்முடைய ஆசிரமத்துக்கு வருமாறு அழைத்துவிட்டுச் சென்றார்.

## ௨

## வஸிஷ்டமுனிவரின் ஆசிரமம்

குறித்த சமயத்தில் விசுவாமித்திரர் தபோவனம் வந்துசேர்ந்தார். அவரை எதிர்கொண்டழைக்க வஸிஷ்டர் வெகுதூரம் வந்திருந்தார். விசுவாமித்திரர் ஆசிரமத்தில் உள்ளவற்றையெல்லாம் கண்டு பெரிதும் ஆச்சரியமடைந்தார். ஆல், அரசு, ஆச்சா, அசோகு, பனை, புன்னை, பலா, கோங்கு, கோவிதாரம் (காட்டாத்தி), கமுகு முதலிய வலிய வனவிருக்ஷங்கள் ஆசிரமத்தைச் சூழ்ந்து வளர்ந்திருந்தன. அதன் அடித்தரை கொடி, புதர் முதலியவை கொஞ்சமும் இல்லாமல் சுத்தமாய் வைக்கப்பட்டிருந்ததால், சிந்தூரப்பொடி சிந்தினலும் சுலபமாய்த் திரட்டி எடுக்கும்படியாயிருந்தது. அந்த அகன்ற அரணியத்திலே ஒனய், காடி, சிங்கம், புலி, சிறுத்தை, காட்டெருமை, காண்டாமிருகம் முதலிய பயங்கரமான துஷ்ட மிருகங்களும், நல்லபாம்பு, கட்டுவிரியன், சாரை, மலைப்பாம்பு முதலிய விஷஜந்துக்களும் நிர்ப்பயமாய்ச் சஞ்சரித்துக்கொண்டு, அவைகளின் சகஜமான இரையாகிய பசு, ஆடு, மான் முதலிய சாது ஜந்துக்களைக் கண்ணெடுத்துக் கூடப் பாராமலிருந்தன. விசுவாமித்திரரும் வஸிஷ்டரும் பிரவேசித்த மாத்திரத்தில் அவை

கள் வழியின் இரு பாரிசத்திலும் விலகி நின்று பணிவுடன் தலைவணங்கின.

அதைக் கண்டு விசுவாமித்திரர் கூறினர், "மகானுபாவ, புத்திபலத்தினல் தேவரீர் வனசர ஜந்துக்களை வசப்படுத்திவிட்டீரென்பது வாஸ்தவமே; ஆனல் அவ்வாறு மனிதர்களை வசமாக்கத் தேவரீரால் ஒருகாலும் முடியாது."

அதற்கு வஸிஷ்டர், "இந்த ஸ்தானத்தின் மகிமையால் அவை வசமாயிருக்கின்றனவே யொழிய எமது புத்திபலத்தாலன்று," என்றார்.

ஆயினும் வெகு சீக்கிரத்தில் அந்தக் காட்சி மாறிவிட்டது. திடீரென்று அந்த வனம் உத்தியானமாய்ப் பரிணமித்தது. அவ் விசாலமான தபோவனபூமி வரிசைவரிசையாய் அமைத்திருந்த நானவிதமான சாற்காலத்துப் புஷ்பப் பாத்திகளால் நிரம்பி, அழகாய் விரிக்கப்பட்ட ரத்தினக்கம்பளம்போலக் காணப்பட்டது. சிலவிடங்களில் அது வெண்ணிறமாய், விதம்விதமான வெண்ணிறமாயும், மற்றும் சிலவிடங்களில் நீலநிறமாய், பலபேதமுள்ள நீலநிறமாயும், பின்னும் சிலவிடங்களில் செந்நிறமாய், நானவிதச் செந்நிறமுள்ளதாயும், இன்னும் சிலவிடங்களில் பச்சைநிறமாய், பல்வேறுவகைப் பச்சைநிறமாயும், சிற்சில இடங்

களில் மஞ்சள்நிறமாயும், ஒரு நிறம் குறைய இன்னொரு நிறம் மிகுவதுபோலும் பொலிவுற்று விளங்கியது. இனி, புஷ்பங்களின் நிறத்தினால் வர்ண விசித்திரம் ஏற்படாத இடங்களிலே கற்களைக்கொண்டு அந்தக் குறையைப் பூர்த்திசெய்திருந்தது. இந்தக் கம்பளத்தைச் சுற்றிலும் நானாஜாதிகளைச் சேர்ந்த நறுமண மலர்கள் இறைக்கப்பட்டிருந்தன; அம் மலர்களினின்றும் சுவாசனை காற்றில் கலந்து நாற்றிசைகளிலும் கமழ்ந்து பரவியது. இந்த அகன்ற சதுக்கத்தின் நடுவிலே ஒரு பெரிய வாவி இருந்தது. அது முழுவதும் சலவைக்கற்களால் கட்டப்பட்டிருந்தது. அதன் படிக்கட்டுகளும் சலவைக்கற்களால் அமைந்து ஆழத்திலுள்ள அடித்தலம் வரையில் படுக்கப்பட்டிருந்தன. அடித்தலத்துப் படிக்கட்டுவரையில் நன்றாய்த் தெரியும்படி அவ் வாவியின் நீர் ஸ்படிகம் போல் அவ்வளவு நிர்மலமாயிருந்தது. வாவியின் ஊடே வெண்சலவைக்கற் பாலம் ஒன்று போடப்பட்டிருந்தது. அதன் பாரிசங்களில் வேயப்பட்டிருந்த மாகதமயமான 'கிராதி' களின்மேல் நிறுத்தப்பட்டிருந்த மணி ஸ்தம்பங்களிலிருந்து கிளி, குயில், வானம்பாடி, மைனா முதலிய தீங்குரற் பறவைகள் இனிமையாய்ப் பாடியும், பலவர்ணச் சிறகுகளும் தோகைகளுமுடைய மயில்கள் அழகாய் ஆடி

யும், அதிதியாய் வந்திருக்கும் அரசர்க்கரசனை வரவேற்றன. வாவியின் நிர்மல ஜலத்தில் சிவப்பு, நீலம், மஞ்சள், தங்கம் முதலிய பலவர்ணங்கொண்ட மீன்கள் நீந்தி விளையாடிக்கொண்டிருந்தன. இதற்கு வெகுதூரமல்லாத இடத்தில் ஒரு பெரிய அரமனை நின்றது. உரை கல்லால் அமைக்கப்பட்டிருந்த அதன் வாயிலில் பொன்னெழுத்துக்களால் "ஸ்வாகதம் காத்ஹி குலதிலகஸ்ய விச்வாமித்ரஸ்ய," அதாவது, காதிகுலதிலகராகிய விசுவாமித்திருக்கு நல்வரவு, என்று எழுதப்பட்டிருந்தது.

விசுவாமித்திரர் அரமனைக்குள் பிரவேசித்த மாத்திரத்தில், தாம் திக்விஜயம் செய்த சமஸ்த பூமண்டலத்திலும் இத்தகைய பெருஞ்சிறப்பு வாய்ந்த மாளிகையை எங்கும் கண்ணுற்றதில்லை என்று அவருக்குத் தோற்றியது. முத்து, பவளம், வச்சிரம், வைடூரியம், கோமேதகம், புஷ்பராகம் முதலியவற்றால் அம்மாளிகை அலங்கரிக்கப்பட்டிருந்தது. அந்தக் கட்டடம் முழுவதும் அதிகவிலைகொண்ட சிறந்த கற்களால் நிர்மாணம் செய்யப்பட்டிருந்தது. அதன் சுவர்களில் பரசுராமரது யுத்த சரித்திரச் சித்திரங்கள் வரையப்பட்டிருந்தன. க்ஷத்திரியரின் ரத்தம் நிறைந்த தடாகங்களில் பரசுராமர் பிதிருதர்ப்பணம் செய்வது ஒருபக்கம், அவர் க்ஷத்திரியருடன் போர்

புரிந்து க்ஷத்திரிய வமிசங்களை நிர்மூலம் செய்வது ஒரு பக்கம், இவ்வாறாக அவர் க்ஷத்திரியர்களை மூவேழு தலைமுறை வேரறுத்த விருத்தாந்தங்களின் சித்திரங்கள் தனித்தனியே மூவேழு சுவர்களில் தீட்டப்பட்டிருந்தன.

விசுவாமித்திரர் திகைப்புற்றுச் சகலத்தையும் சாவதானமாய் உற்றுநோக்கினார். தாம் செய்த விருந்துக்கு வஸிஷ்டர் எதிர் விருந்து செய்வதோடு தம் இருவருக்குள்ளும் நடந்த வாக்குவாதத்துக்கும் இந்தச் சித்திரத்தின் வாயிலாக உத்தரமளிப்பதுபோல் விசுவாமித்திரருக்குத் தோற்றியது. உள்ளுக்குள்ளே அவருக்குத் த்வேஷபுத்தி தழல்வீசத்தொடங்கிப் பொறுமையாக முதிர்ந்தது. ஆனால் அவர் தற்சமயத்துக்குத் தம் மனோபாவத்தை வெளிக்குக் காட்டாமல் மறைத்துக்கொண்டு விருந்தேற்று, அன்னபானங்களை அகமகிழ்ச்சியோடு அருந்தி, ஆடல்பாடல்களை ஆனந்தமாய் அனுபவித்தார். விருந்து முடிந்து விடைபெற்றுப் புறப்படும் சமயத்தில் வஸிஷ்டர் அவருக்குச் சில அரிய பொருள்களைக் கொடையாய் அளிக்கக் கொண்டுவந்தார்.

விசுவாமித்திரர்: மகானுபாவ, தேவரீர் வனத்தில் வசிக்கும் தவசியாயிருக்கிறீர். தேவ

ரீருக்கு இந்த அளவற்ற செல்வம் எங்கிருந்து வந்தது?

வஸிஷ்டர்: மகாராஜ, என்னிடத்தில் ஒரு பசு இருக்கிறது; அது காமதேனுவின் வயிற்றிற் பிறந்தது; நந்தினி என்று அதற்குப் பெயர். நான் விரும்புவதையெல்லாம் அது எனக்குக் கொடுத்துவருகிறது.

விசுவாமித்திரர்: அப்படியானால் சொற்பக் கொடைகளினால் எனக்குத் திருப்தி உண்டாகாது; எனக்கு அந்தப் பசுவைக் கொடுத்துவிட வேண்டும்.

வஸிஷ்டர்: அதை அதன் தாயினிடத்திலிருந்து நான் கொண்டுவந்தபோது, அதை ஒருகாலும் எவருக்கும் கொடுப்பதில்லையென்று வாக்குத்தத்தம் செய்திருக்கிறேன்.

விசுவாமித்திரர்: தாங்கள் கொடாவிட்டால் அதிதியை அவமானம் பண்ணினவராவீர்கள்; அது ஞாபகத்தில் இருக்கட்டும். ஜனங்கள் அனுஷ்டிக்கவேண்டிய ஆசாரங்களை விதிக்கும் தர்மசாஸ்திரங்களை ஏற்படுத்தினவர்கள் உம்மவரல்லவா?

வஸிஷ்டர்: பலாத்காரமாயாவது தந்திரத்தினாலாவது ஒருவனை வாக்குத் தவறும்படி செய்வது பெரும் பாதகம். ஆகவே இப்படிப்

பட்ட அசத்தான பிடிவாதத்தை விட்டுவிடும் படி தங்களைப் பிரார்த்திக்கிறேன்.

விசுவாமித்திரர் இனித் தம் கருத்தை மறைத்துவைக்க முடியாதவராய், "பசுவைத் தாங்கள் எனக்குத் தரப்போகிறதில்லையே? சரி, நானே அபகரித்துக் கொண்டுபோகிறேன். அபகரித்துக் கொண்டுபோகிற பாதகம் வாக்குத் தவறும்படி செய்கிற பாதகத்தினும் பெரிதல்ல என்று நினைக்கிறேன்," என்று சொல்லி விட்டு, பசுவைப் பலாத்காரமாய்க் கொண்டு போய் விடும்படி தம் ஆட்களுக்குக் கட்டளையிட்டார்.

ஒரு பக்கம், சர்வதேவதா சுவரூபியாகப் பாவித்து உபசரிக்கப்படவேண்டிய அதிதி; இன்னொரு பக்கம், பசுவின் பலாத்காரமான அபகரணம். இந்த உபய சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டு, பாவம், வஸிஷ்டர் தவிக்கிறார். எதைச் சொல்லவும் அவருக்கு நா எழவில்லை. விசுவாமித்திருடைய ஆட்கள் பசுவை இழுத்துக்கொண்டுபோக எத்தனம் செய்கிறார்கள். பசுவோ மருண்ட பார்வையோடு வஸிஷ்டர் பக்கம் நோக்கின வண்ணமாயிருக்கிறது. வஸிஷ்டரும் கண்ணீர்விட்டுக்கொண்டே, "என் கண்மணியே, நான் என்னசெய்வேன்? அதிதி, ராஜா, மகா பிரதாபசாலியான திக்விஜயி,

உன்னை என்னிடத்திலிருந்து அபகரித்துக் கொண்டு போகிறான்; உன் கண்ணாலேயே பார்க்கிறாயல்லவா?'' என்று கதறினார்.

வஸிஷ்டர் இப்படிச் சொன்னாரோ இல்லையோ, ஆகாயமும் பாதாளமும் கிடுகிடென்று நடுங்கும்படியாக நந்தினி ஒரு ஹுங்காரம் செய்தது. உடனே எண்ணிறந்த பாரஸீக, சீன, ஷான, மான, யவனர் முதலிய பல ஜாதிப் போர்வீரர்கள் ஆயுதபாணிகளாய்த் தோன்றி அப் பசுவைக் காப்பாற்றுவதற்கு ஆயத்தமாய் நின்றார்கள். அவர்களைப் பார்த்த மாத்திரத்தில், விசுவாமித்திரர் தம்முடைய சிறந்த சேனாபதிகளாற் கூடத் தோள்வலியால் இதுவரையில் வெல்லமுடியாத யவனர்முதலிய ஜாதிகளை வஸிஷ்டர் புத்திபலத்தினால் அடக்கி வைத்திருப்பதைப்பற்றிச் சிந்திக்கலாயினார். புத்திபலத்தினால் மனிதரையும் வசமாக்கிக் கொள்ளலாமென்பது இப்பொழுது அவருக்குப் பிரத்தியக்ஷமாய் விளங்கிவிட்டது.

௩

## தோல்வி

பசுவைப்பற்றிப் பெருஞ் சமர் மூண்டது; ஒரு பக்கத்தில் க்ஷத்திரிய சேனை, இன்னொருபக்கத்தில் யவன சேனை, மத்தியில் நந்தினி. க்ஷத்

திரியர்களிடத்திலிருந்து தப்பித்துக்கொண்டு போய்விட அது பலகாலும் முயன்றது. முடிய வில்லை: அவர்கள் அதைப் போகவொட்டாமல் தடுத்து நின்றார்கள். யவனர்கள் அதை விடு விக்க முயலவும், போர் தொடங்கிற்று. யவனர் களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் இடையில் போர், பிராமணனை முன்னிட்டுப் போர். பிரா மணன் சும்மா பார்த்துக்கொண்டு நிற்கிறான். நீண்ட நீண்ட வாள்கள், நெடிய நெடிய வேல் கள் சுழல்கின்றன; பெரிய பெரிய விற்கள் டங்காரம் செய்கின்றன; அவற்றினின்றும் எழும் கோஷம் இடிமுழக்கம்போல் நெஞ் சைப் பிளக்கின்றது. விசுவாமித்திரர் தம் சேனையைத் தாமே தலைவராய்நின்று நடத்து கிறார். பிராமணன் பக்ஷத்தில் தலைவனாய் ஒருவருமில்லை. வஸிஷ்டர் அதிதியோடு யுத் தம் செய்ய இச்சிக்கவில்லை; தம் புத்திரர்களை யும் சிஷியர்களையுமகூட யுத்தம்செய்ய வொட்டாமல் தடுத்து, "என் புத்திரர்களே, சிஷியர்களே, க்ஷத்திரியர்களின் நீதி என்னவா யிருந்தாலும், 'ப்ராஹ்மணஸ்ய பலம் க்ஷமா', பிராமணனுக்குப் பொறுத்தருளுதலே பலம்," என்று எச்சரித்தார்.

பிராமணர் யுத்தம் செய்யவில்லை, ஆனால் யுத்தம் கடுமையாய் நடக்கலாயிற்று. க்ஷணப் பொழுதில் ரத்தம் சொரியத் தொடங்கிற்று;

அடுத்த க்ஷணத்தில் ரத்தவெள்ளம் பாயத் தலைப்பட்டது; போர்க்களத்தின் புழுதியெல்லாம் ரத்தக்கிளறியாய்விட்டது. ஒவ்வொருவராகக் கிரமக்கிரமமாய் விசுவாமித்திரரின் நூற்றுக்கணக்கான தேர்வீரர், யானைவீரர், குதிரைவீரர், காலாட்கள் முதலிய படைகளெல்லாம் மடிந்து சாய்ந்தன. அதன்மேல் அவரே ஒரு பயங்கரமான வாளைக் கையில் ஏந்திக் கொந்தளிக்கும் போர்க்கடலில் குதித்தார். ஒவ்வொரு வீச்சிலும் நூற்றுக்கணக்கான யவனர்களின் தலைகள் வெட்டுண்டு விழுந்தன. ஆனால் அவர் தன்னுடைய பிரயாசையெல்லாம் வீணாய்விட்டதென்று கண்டார்; ஏனெனில் நந்தினியின் ஒவ்வொரு ஹுங்காரத்தினாலும் ஒரு புதிய அக்குரோணி சைனியம் வந்துசேர்ந்தது. போரில் வெல்லுதற்கரிய திறல்கொண்ட அவரது அக்குரோணியெல்லாம் இடைவிடாமல் மேன்மேலும் பொங்கியெழும் யவனசேனை வெள்ளத்தில் மூழ்கி மாண்டது. அதன்மேல், 'பசுவைக் கொல்லுங்கள்!' என்று கட்டளையிட்டார் விசுவாமித்திரர்.

ஆனால் பசு இன்னமும் க்ஷத்திரியர்களின் கைவசமாகவில்லை. அவர்கள் தூரத்திலிருந்து வேல்களையும் நாராசங்களையும் எறிந்து பசுவின் உயிரை வாங்க முயன்ற மாத்திரத்தில்,

அப் பசு தெய்வமங்கை வடிவம் எடுத்து ஆகாய மார்க்கத்தில் எழும்பிற்று. அங்கே அத் தேவி வெள்ளைக் கலை உடுத்து, வெண்டாமரை ஆசனத்தில் அமர்ந்து வெண்ணிற ஒளியால் முழு வெண்மதியின் ஒண்ணிலவையும் வெட்கச் செய்து, திருக்கரத்தில் வெண்ணிற வீணை தாங்கி, வெள்ளைக் கமலப் பணிகள் அணிந்த தன் திருமேனியின் பேரழகினால் உலகத்தை யெல்லாம் ஒளிசெய்து விளங்கினாள்.

விசுவாமித்திரரைப் பார்த்து: "அடே மூடா, நான் பிராமணரின் வித்தியாசக்தி. என்னை அபகரித்துக் கொண்டுபோக உன்னால் ஆகுமா? நான் தலைமுறை தலைமுறையாய்ப் பிரா மணர் அகத்தில் வாசம்செய்து வருகிறேன், இப்பொழுதும் வாசம்செய்துகொண்டிருக் கிறேன், இனியும் வாசம்செய்வேன்," என்றாள் அச் சரஸ்வதி. விசுவாமித்திரர் ஆச்சரியத்தால் அசைவற்று நின்றார்.

சரஸ்வதி மறுபடியும் பசுவடிவம் எடுத்து வஸிஷ்டரிடம் இறங்கிவரவும், சைனியம் முழுவதும் காற்றோடு கலந்துபோவதைக் கண்டார் விசுவாமித்திரர்.

வஸிஷ்டர் கண்களிலிருந்து ஆனந்தபாஷ்பம் ஆறாய்ப்பெருக, பசுவின்தேகத்தைக் கையால் தடவிக்கொடுக்கலானார்.

விசுவாமித்திருக்கு இதுவே முதன் முதல் உண்டான தோல்வி. அவருக்கு அவமானத்தினுலும், துக்கத்தினுலும், பொருமையினுலும் மனம் இடிந்து, பசுவையேனும், வஸிஷ்டரையேனும் கண்ணெடுத்துப் பார்க்கக் கூட முடியாதாயிற்று. கோபத்தோடு வில்லையும் அம்பையும் வீசியெறிந்துவிட்டு, மந்திரியினிடம் தம் ராஜ்ஜியபாரத்தை ஒப்புவித்து, அவரையும் சைனிய பரிவாரங்களையும் ஊர் போய்ச் சேரும்படி விடைகொடுத்தனுப்பி விட்டு,

"த்ஹிக் பலம் க்ஷத்ரிய பலம்!
ப்ரஹ்ம தேஜோ பலம் பலம்" *

அதாவது, "பூமி முழுதையும் ஆளுகின்ற க்ஷத்திரியரின் புஜபலமும் ஒரு பலமா? சீ! அதைச் சுடவேண்டும். பிராமணருடைய பிரம்ம தேஜஸ்ஸாகிற பலமல்லவோ உண்மையான பலம்," என்று தீர்மானித்து, பிராமணத்துவம் பெறும்பொருட்டு 'ஒண் தவம் புரிய எண்ணி, உம்பர்கோன் திசை' யிலுள்ள ஹிமவத் பர்வதச் சாரலை நோக்கி நடந்தார். இவ்வாறு, விசுவாமித்திரர் வெறும் தோள்வலி

* "......................கலைமறை முனிவர்க்கு அல்லால்
திண்திறல் வலியும் தேசும் உள எனல் சிரிது அம்மா!
மண்டலம் முழுதும் காக்கும் மொய்ம்பு ஒருவலியன்று."

கம்பன்: மிதிலை கoச.

யால் உலக முழுவதையும் ஒன்றாய்ச் சேர்க்க முடியுமென்று எண்ணிச் செய்யும் எவ்வித முயற்சியும் பயன்படாது என்பதைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டுகொண்டார்.



## மூன்றும் பாகம்

க

### விசுவாமித்திரரின் தவம்

விசுவாமித்திரர் இன்ன இடத்துக்குப் போனு ரென்று ஒருவருக்கும் தெரியவில்லை. அவர் சைனியத்தோடு தன் ராஜ்ஜியத்துக்குத் திரும்பிச்செல்லவில்லை. இராஜ்ஜியபாரத்தை அவருடைய மந்திரி நடத்திவந்தார். அவருடைய குடும்பத்தார், அரசர் இன்று வருவார், நாளை வருவார் என்று நாட்களை எண்ணி எண்ணி, நாட்கள் வாரமாய், வாரங்கள் மாதமாய், மாதங்கள் வருஷமாய், வருஷங்கள் அனந்தமாய் ஸ்தூலித்துவந்த காலத்தைக் கவலையுடன் கழிக்கலாயினர். இதனிடையில் வஸிஷ்டரோ மறுபடியும் தமது சங்கற்பத்துக் கேற்பப் பிராமணரையும் க்ஷத்திரியரையும் ஒற்றுமைப்படுத்த முயலுவாராயினுர். ஆனுல் விசுவாமித்திரர் கக்ஷியைச் சேர்ந்தவர்கள் அவரிடத்தில் கடும்பகை பாராட்டத் தலைப்பட்டமையால், அவரது முயற்சி நிறைவேறவில்லை.

இது நிற்க, விசுவாமித்திரர் மனதை ஒரு நிலையில் நிறுத்தி கோரமான தவத்தில் அமர்ந்திருந்தார். நான் பிராமணன் ஆகவேண்டும்,

என் கைவலியால் பிராமணர், க்ஷத்திரியர், என்னும் இரு சக்திகளையும் ஒன்ருக்கி, கடல் சூழ்ந்த இவ் வையகத்துக்கு நானே ஒப்புயர்வற்ற தனிக் காவலனுகவேண்டும், எல்லோரையும் ஒரு செங்கோலின் கீழ் அடக்கி ஒருமைப்படுத்த வேண்டும், என்ற இதுவே அவர் உள்ளத்தில் கொண்டிருந்த சங்கற்பம். அவர் ஹிமாலயத்தின் மரங்களடர்ந்து உட்செல்லற்கரியவனத்தில் புகுந்து, உடனே ஏகாந்தமான ஒரு ஸ்தானத்தில் அமர்ந்து கடுந்தவம் புரியத்தொடங்கினர். முதல்நாளில் ஒருகவளம் ஆகாரம்; அடுத்தநாள், அரைக் கவளம்; அதன்பிறகு ஒரு தானியமணி; அதற்கப்புறம் அரைத் தானியமணி; அதன்பின் ஒரு நீர்த்துளி; அதற்கப்பால் ஆகாரத்தை அடியோடு நிறுத்திவிட்டு, மிகக் கடுமையான தவத்திலும் தியானத்திலுமே முற்றிலும் அமர்ந்திருந்தார். சரீரம் க்ஷீணிக்கலாயிற்று. பனி, குளிர், மழை, வெயில் இவையெல்லாம் அவரது சரீரத்தைத் தாக்கியும், அவற்றின் உணர்ச்சியே அவருக்கு உண்டாகவில்லை. கேவலம் தியானத்திலேயே ஆழ்ந்திருந்தார். கண்கள் குழிந்துபோயின. நாசியில் எலும்பு மாத்திரமே எஞ்சியிருந்தது. சரீரத்தின் எலும்புகளையெல்லாம் வெறும் தோல் மாத்திரம் மூடியிருந்தது. தலைமயிர்க்கற்றை நீளமாய் வளர்ந்து தரையில் புரண்டுகொண்டிருந்தது. கால்விரல் நகங்

கள் நீண்டு மரங்களின் வேர்களைப்போல் மண்ணில் புதைந்துபோயின. செல்லுகள் அவர் உடம்பில் புற்றுக் கட்டிக் குடியிருந்தன. விசுவாமித்திரரின் தியானம் இன்னமும் முற்றுப் பெறவில்லை. புலி, கரடி முதலிய துஷ்ட மிருகங்கள் அவரைப் பார்த்து, தூரமாய் மெல்ல ஒதுங்கிப் போய்விடும்.

இந்தப் பயங்கரமான நிலைமையில் விசுவாமித்திரர் பற்பலவிதமான உருவெளித்தோற்றங்களைக் காணலாயினர். சிலசமையம், சமஸ்த ஜகத்தும் பரமாணுரூபமாய் மாறிவிட்டதாகத் தோற்றும். அதன் நடுவில் தாம் ஒருவரே இருந்தார்; தமதுசரீரம் விரைவில் வளர்ந்து பிரம்மாண்டமெல்லாம் வியாபித்தது. அதன் சுடர்வீசும் தேஜஸ்ஸினால் பரமாணுக்கள் எரியலாயின. கடைசியில் தம் சரீரமும் எரியத் தொடங்கியது. உள்ளுக்குள்ளேயே எரியும் பொறுக்கமுடியாத அக்னி ஜ்வாலையினால் அவருடைய தியானத்துக்குப் பங்கம் உண்டாயிற்று. கண் விழித்துப் பார்த்தார்: எதிரில் சில பரமசுந்தரிகளான யுவதிகள், அழகில் அரம்பையரையும் பழித்தவர், நாட்டியம் புரிகின்றனர். அவர்களில் சிலர் சுழன்றுசுழன்று ஆடுகின்றனர். சிலர் காதலில் தோய்ந்து மோகபாவசத்தை உண்டாக்கும் தங்கள் மேனி முழுவதையும் ஒயிலாய்க் குலுக்கி நடக்கின்ற

னர். சிலர் மேனிகளில் ஆடை பாதி சோர, இடைகளில் கை வைத்து நிற்கின்றனர். சிலர் கடைக்கண்ணால் நோக்குகின்றனர். அந்தக் கடைக்கண் நோக்கமோ காதல் நிறைந்து, ஒரு க்ஷணம் கோமளமாயும், ஒரு க்ஷணம் சஞ்சலமாயும், ஒவ்வொரு திருப்பிலும் சுழற்சியிலும் அவர்களின் உள்ளக்கருத்தைக் கூசாமல் காட்டுவதாயும் இருக்கிறது. கண் இமைகள் ஒரு சமயம் சோர்வுற்றும், ஒரு சமயம் மின்னல் போல் வேகமாயும் துடிக்கின்றன. அதன்மேல் கடைக்கண் நோக்கம் கூரிய அம்பைப்போல் சரேலென்று பாய்கிறது. சிலர் கூந்தலைப் பின்னிக் கட்டியிருக்கின்றனர், சிலர் முடியாமல் விரித்துத் தொங்கவிட்டிருக்கின்றனர், சிலருடைய கூந்தல் சுருண்டிருக்கிறது, சிலருடைய கேசம் மந்தமாய் வீசும் காற்றில் மிருதுவாய் அசைகின்றது. இவ்வாறு அவர்கள் அனைவரும் நானாவிதமான சரஸவிலாஸங்களைக் காட்டி அந்த விசுவாமித்திரரிடத்தில் தங்கள் காமாதுரமான போகவிருப்பத்தை வெளிப்படுத்தினர். இதையெல்லாம் கண்டார் விசுவாமித்திரர்; அவருடைய உள் எரிவு சிறிது சமனமடைந்ததும், மறுபடியும் தியானத்தில் அமர்ந்துவிட்டார்.

மீண்டும் அவர் புதிதுபுதிதான கனவுகள் காணலாயினர். கோடி சூரியர் ஏககாலத்தில் உதயமாயினர்; அவர்களது தேஜஸ்ஸானது

கண்களைக் கூசச்செய்து தேகத்தைக் கொளுத்தியது. விசுவாமித்திரர் ஓடிப்போய் அந்தச் சூரியதேஜஸ்ஸிலிருந்து தூரமாய்ச் சென்றிருக்க முயன்றார். அவர் ஓடியோடி, அந்தத் தேஜஸ்ஸின் உக்கிரம் குறையும்வரையில் வெகுதூரம் ஓடிச்சென்று ஓரிடத்தை அடைந்தார். ஆனால் வந்துசேர்ந்த இடத்திலே பயங்கரமான நூறுயிரம் சர்ப்பங்கள் அவரைக் கடித்தன. விஷ ஜ்வாலையினால் அவருக்குத் தியானபங்கம் உண்டாய்விட்டது.

அவரது கண்களுக்கெதிரில் கோரமான காட்சிகள் தோன்றின. விதம்விதமான பயங்கர ரூபங்கொண்ட ஜந்துக்கள் அவருக்குப் பீதியை உண்டாக்கின. சில ஜந்துக்கள் பன்றி முகங்களோடும், சிங்கங்களின் பிடரிமயிரோடும் பல யோஜனை நீளமுள்ள வால்களோடும் கூடியிருந்தன. சில பிராணிகள் தலைக்குமேல் கண்களாயும், பாதி சரீரம் கைகளால் நிறைந்தும், இரண்டு கைகளையும் இரண்டு கால்களையும் கொண்டு ஆகாரத்துக்காக இங்குமங்கும் துழாவி, கிடைத்ததை அப்படியே வாயில் போட்டுக்கொண்டு விழுங்கும் பயங்கரமான பிசாசங்களா யிருந்தன. சிலவற்றிற்குப் பற்கள் பன்றியினுடையவை போன்றும், சிலவற்றிற்கு யானையின் தந்தம்போன்றும் இருந்தன. சில பிராணிகளின் தலைகள் மலைச்சிகரங்கள்

போலிருந்தன. சிலவற்றிற்குத் தலைகள்மாத்திரமே இருந்தன, கால்கள் உண்டோ இல்லையோ என்பது சந்தேகம். சில பெண்பிசாசுகளின் கறுத்த ஸ்தனங்கள் பருத்த மலையுச்சிகளைப் போல் தொங்கிக்கொண்டிருந்தன. சில பிசாசுகள் கறுப்பு, சில பிசாசுகள் நீலம், சில பிசாசுகள் மஞ்சள், சில பிசாசுகள் சிவப்பு, இவ்வாறு நாளுவர்ணங்களால் பயங்கரமாய்க் காணப்பட்டார்கள். இந்தக் கோர ரூபங்கொண்ட படைகள் படைத்தலைவனுடைய ஏவுதலின்மேல் விசுவாமித்திரரைத் தாக்கியபோது, அவருக்குக் கதிகலங்கிற்று. ஆனால் அவர் கண்விழித்துப் பார்த்த மாத்திரத்தில் அந்தப் பிசாசுப் படை அவ்வளவும் அழிந்தொழிந்தது. சிலருக்குக் கால் ஒடிந்தன, சிலருக்கு உயிர் நீங்கியது, சிலருக்கு மண்டை உடைந்தது. அவர்களைத் தூக்கிக்கொண்டு சென்றவர்களின் தொங்கலாடும் ஸ்தனங்கள் அறுந்துவீழ்ந்து அவர்களின் தேக பாரத்தை லேசாக்கின. ஒருத்தியின் தலை இன்னொருத்தியின் முண்டத்தோடு சேர்ந்தது; சிலருடைய கால்கள் வேறு சிலருடைய தலைகளோடு ஒட்டிக்கொண்டன.

பிசாசச்சேனை இவ்வாறு துவம்சமானதைக் கண்டு பிசாசப் படைத்தலைவன் நகைமுகத்துடன் இச்சகம்பேசி விசுவாமித்திரரை வசப்படுத்த விரும்பி, அவரிடம் போந்து இவ்வாறு

கூறலாயினன்: "ஓ விசுவாமித்திரரே, நீர் அத்தி வந்த பராக்கிரமசாலி, நீர் தோள்வலியால் எல்லா வற்றையும் வென்றிருக்கிறீர். நீர் தபோபலத் தினல் கண்விழித்துப் பார்த்த மாத்திரையில் என்னுடைய சைனியத்தைச் சின்னபின்ன மாய்ச் சிதறவடித்தீர். ஆகையால் நீர் எனக்குப் புத்திரனய்விடும். இதோ காணப்படுகிற இந்த விசாலமான பிரம்மாண்டத்திலே உள்ள அசுரர், தைத்தியர், தானவர், பிசாசர் இயக்கர் எல்லா ரும் என்னுடைய பிரஜைகள். நீரே எனக்குப் பின் இதையெல்லாம் கட்டியாளும். ஒரே உத் தராதிகாரியாவீர் நீர். சீக்கிரத்திலேயே உம்மை அரசனகப் பட்டம் சூட்டிவிட்டு, நான் சுக போகங்களை அனுபவிப்பதில் நிலைத்திருப் பேன். ஆகையால் நீர் என்னுடைய புத்திர னய்விடும். இந்த ஹிமவத்பர்வதத்தின் உச்சி யில் ஏறிப்பாரும்; எண்ணில்லாத செல்வமும் செழிப்பும் மிகுந்த ராஜ்ஜியங்கள் சுற்றிலும் உம்முடைய கண்களைக் கவரும்; அவை யெல் லாம் உம்முடையவே யாகும். சீன, ஜப்பான், மிஸரம்,* பாரஸீகம் எல்லாம் உமக்கு அடி பணியும். உம்முடைய தவத்தைக் கலைக்க வந்த இந்த அழகிய பெண்களெல்லாம் என்னைச் சேர்ந்தவர்கள். அவர்கள் அத்தனைபேரும் உம்ம வர்களே ஆய்விடுவார்கள். உம் கண்ணுக்குத்

---

* எகிப்து நாடு.

தோன்றுகிற ரத்தினங்கள், முத்துக்கள், பொன் சுரங்கங்கள் எத்தனை உண்டோ அவை அத்தனையும் என்னுடையவைகளே. என்னுடைய ஆணைக்குட்பட்ட பிரஜைகளுக்கோ கணக்கே இல்லை. நீர் என்னுடைய புத்திரனாகி இந்தச் சமஸ்த சாம்ராஜ்ஜியத்துக்கும் ஏகாதீசுவரனாய் விடும். உமக்கு ஒருவிதப் பயமும் கவலையும் வேண்டியதில்லை. நாட்டின் நிலவரம் சீராகிற வரையில், நானே உம்முடன் தங்கியிருந்து, உம்முடைய ராஜ்ஜியம் ஸ்திரமாகி க்ஷேமமாய் நிலைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டுப்போகிறேன்," என்றான்.

விசுவாமித்திரர் கேட்டார், "எனக்குப் பிராமணத்துவம் கொடுக்க உன்னால் ஆகுமா? எனக்கு நந்தினியைக் கொடுக்க வல்லையா? சரஸ்வதியை அளிக்க உன்னால் கூடுமா?" அதற்கு மறுமொழியாக, "இல்லை, முடியாது. ஆனால் பிராமணரோடு போராடி நிற்க உமக்கு ஆற்றலைத் தர என்னால் கூடும். நந்தினியைக் கொன்றுபோட என்னால் முடியும். வித்தையை வேரோடு களைந்தெறியவும் என்னால் ஆகும். ஆனால் சரஸ்வதியை ஒன்றும் பண்ண என்னால் முடியாது," என்றான் பிசாசச் சைனியத் தலைவன்.

"அப்படியானால், உன்னால் என்னுடைய காரியம் நிறைவேறாது," என்று சொல்லிவிட்டு

விசுவாமித்திரர் மீண்டும் தியானத்தில் அமர்ந்துவிட்டார்.

## உ

## விசுவாமித்திரரின் மந்திர தரிசனம்

இந்த முறை அவர் கண்களை மூடக்கூடவில்லை. இடைவிடாமல் மூச்சை அடக்கிவைத்து, சிந்தையை ஓரே விஷயத்தில் நிறுத்திவந்தமையாலும், நெடுநாள் தொடர்ந்து ஆகாரமின்மையாலும், அவரது கண்கள் இனி மூடிக்கொள்ள மறுத்தன. ஆனால் அவர் கடுந்தவம் புரிந்து சதாகாலமும் அந்தர்முக நிஷ்டையிலே அமர்ந்திருந்தபடியால், பகிர்முக உணர்ச்சியே அவருக்கு அற்றுப்போய்விட்டது. எந்திரம் அரைக்கும்போது உண்டாவதுபோன்ற ஒரு சத்தம் அவரது செவித் துவாரங்களினின்றும் வெளிப்படலாயிற்று. நாசித்துவாரங்களிலிருந்து நெருப்புப் பொறிகள் விழலாயின. இந்தச் சத்தம் வெளிப்பட்டபோது, ராசிசக்கரம் அவரது தலையைச்சுற்றிலும் வலதுபக்கத்திலிருந்து இடது பக்கத்துக்குப் பிரதக்ஷிணமாய்ச் சுழலத் தலைப்பட்டது. சாயாபதமும் சுழலமிட்டது. திடீரென்று அவரது கபாலம் உள்ளுக்குள்ளே எரியும் உக்கிரமான அக்னியின் தாபத்தால் மேலுக்கு வெடித்தது. பொம்மென்ற சத்தம் ஜகத்தெல்லாம் வியா

பித்தது. அந்தச் சத்தம் ஆகாயமண்டலத்தில் உருண்டு, புரண்டு, சுற்றிச்சுற்றிச் சுழன்று வந்தது. கடைசியில் அது அண்டமுகட்டைப் பிளந்துகொண்டு அவ்வழியே வெளிப்பட்டுச் சென்றது.

அதற்கப்பாலுள்ள வெளியிலிருந்து தூரத்தில் உண்டாகும் இடைவிடாத நூறுயிரம் இடிமுழக்கம்போல் இந்த மந்திரகோஷம் கேட்கப்பட்டது:

ஓம் ப்ஹூர் ப்ஹுவ: ஸ்வ:
தத் ஸவிதுர் வரேண்யம்
ப்ஹர்கோ தேவஸ்ய த்ஹீமஹி
த்ஹியோ யோ ந: ப்ரசோதயாத். ஓம்.

விசுவாமித்திரர் இந்தத் துவனியைக் கேட்டார். மேலுக்கு வெடித்த அவரது மண்டை யதாஸ்தானத்தை அடைந்தது. க்ஷணப் பொழுதில் அவருடைய சரீரம் வலிமை பெற்று, காந்தி வீசி, தேஜோமயமாய் ஜ்வலித்தது. "எனக்குப் பிராமணத்துவம் கிட்டாமற் போகலாம்," பாவிக்கலானர் விசுவாமித்திரர், "வேத மந்திர தரிசனம் இதுவரையில் பிராமணரின் காணியாட்சியா யிருந்தது. அந்தக் கோட்டையை யாவது இப்பொழுது தகர்த்துவிட்டேனல்லவா? இதுவே யதேஷ்டம்," என்று சொல்லிக்கொண்டே மீண்டும் தியானத்தில் அமிழ்ந்துவிட்டார்.

௩

## ரிஷிகளின் மகாசபை

விசுவாமித்திரரின் தவத்தினல் அகிலப் பிரம்மாண்டத்திலும் உண்டான இந்த அமர்க்களம் இனி ஒருவருக்கும் தெரியாதிருக்கவில்லை. அப்பொழுது பிரம்மதேவன் விசுவாமித்திரரைப் பிராமணராக்கும்பொருட்டு, பிரம்மரிஷிகளை யெல்லாம் ஒரு மகாசபை கூடுவதற்கு அழைத்தார். அந்தச் சபைக்குக் கண்வர், வஸிஷ்டர், முதலிய பிரம்மரிஷிகள், நாரதாதி தேவரிஷிகள், எல்லோரும் வந்துசேர்ந்தனர். ஆகாயமண்டலத்தில் சபை கூடிற்று; அது நூற்றுக் கணக்கான சூரியர்கள் ஆகாயத்தில் ஏககாலத்தில் உதயமானதுபோல் காணப்பட்டது. அந்தச் சபையிலே ஒரு சூத்திராஜன் பிராமணனுகச் சம்ஸ்கரிக்கப்பெற்றுன். விசுவாமித்திரரது ஞானதிருஷ்டிக்குக் கோசரமாகும்படி அருளப்பட்ட மந்திரம் காயத்திரீ என்னும் திருநாமம் பெற்று, அதுமுதல் சகலப் பிராமணர்களும் ஜபிக்கத்தக்க மகாமந்திராஜமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனல் பிரம்மதேவன் விசுவாமித்திரரைப் பிராமணராக்க வேண்டுமென்று பிரஸ்தாவித்தபோது, பிரம்மரிஷிகளிலாவது தேவரிஷிகளிலாவது ஒருவரும் அந்தப் பிரஸ்தாவத்தை ஆமோதிக்கவில்லை. ஏற்கெனவே விசுவாமித்திரர் உலகத்

துக்குக்கர்த்தாவாய் விட்டிருக்கிறார்; இனிப்பிரா மணத்துவமும் பிராமணருடைய வித்தையும் கூடக்கிடைத்துவிட்டால் இப்பொழுதே சிருஷ் டியையெல்லாம் அழித்துவிடுவார், என்றுசிலர் கூறினர். விசுவாமித்திராது துராசையோ அபரிமிதமா யிருக்கிறது; இன்றைக்குப் பிராம ணத்துவம் அடைந்தால், நாளைக்குப் பிரம்மத் துவம் வேண்டுமென்று வாதாடுவார். ஆகவே அவருக்கு இடம்கொடுப்பது அவிவேகமாகும், என்றனர் மற்றும் சிலர். அதன்மேல் அங்குக் கூடியிருந்த பிரம்மரிஷிகள் எல்லாம் பிரம்ம தேவனை விசுவாமித்திரரிடம் தங்கள் பிரதிநிதி யாய் அனுப்புவது என்று சங்கற்பித்து, பிரம்ம தேவனை அவருக்குப் பிராமணத்துவம் ஒன்று தவிர வேறே எது கேட்டாலும் அளிக்கும்படி கற்பித்து அனுப்பினார்கள். அப்பொழுது 'பல்லா யிரம் இருள் கீறிய பகலோ'னது பிரகாசத் தையும் பழிக்கும்படியான பிரபாமண்டலத்தி னின்று சுடர் வீச, பகவான் சதுர்முகன் சூரிய கிரணத் தேரில் ஆரோகணித்து ஹிமவத் பர்வ தத்தின் அந்த ஏகாந்தமான குகையில் எழுந் தருளிவந்தார். வந்து, விசுவாமித்திரரைத் தியானத்திலிருந்து எழுப்பி, "நான் பிரம்மா, உன்னுடைய தவத்தால் திருப்தி அடைந்து வரம் அளிக்க வந்திருக்கிறேன். உனக்கு என்ன வரம் வேண்டுமோ, அது அசாத்தியமா யிராத

பட்சத்தில், அளிக்கச் சித்தமா யிருக்கிறேன்,” என்ருர்.

“எனக்குப் பிராமணத்துவம் வேண்டும், கொடுக்கமுடியுமா?”

“முடியாது.”

“அப்படியானல் உம்மைப்போன்ற பிரம்மாவினிடத்திலிருந்து எனக்கு ஒரு வர மும் வேண்டாம்.”

பிரம்மதேவன் சிறிது தலையிறக்க முற்று, திரும்பியும் சூரியகிரணத்தேரில் ஏறிக் கொண்டு பிரம்மரிஷி சபைக்கு வந்துசேர்ந்து, விசுவாமித்திரரைப் பிராமணனுக்கும்படி புத்தி சொன்னர். ஒருவரும் சம்மதிக்கவில்லை. கடைசியில் எல்லாருமாகச் சேர்ந்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதாவது, சமஸ்த ரிஷிகளும் விசுவாமித்திரரிடம் சென்று, வேறு ஏதாகிலும் ஒரு வரம் பெற்றுத் திருப்தியடையும்படி அவரை இசையச் செய்தலே தகுதி என்று தீர்மானித்தார்கள். வஸிஷ்டர் அவர்களோடு செல்வதற்கு முதலில் ஆக்ஷேபித்தார்; ஆனல் பிரம்மதேவனும் மற்றுமுள்ள மகாரிஷிகளும் பிரார்த்தித்ததன்மேல் போவதாக ஒப்புக் கொண்டார். அப்பொழுது ஒளிப் பிழம்பு போல்விளங்கும் சரீரகாந்தியுடன் முனிவர்கள், சிலர் சூரியகிரணத் தேர்களில் ஆரோகணித்

தும், சிலர் மனோவேகத்தினாலும், சிலர் வாயு வாகனத்திலேறியும், சிலர் யோகபலத்தினாலும் விசுவாமித்திரரருகில் வந்துசேர்ந்தனர். பிரம்ம தேவன் மறுபடியும் அவரைத் தியானத்தி லிருந்து எழுப்பினார். விசுவாமித்திரர் தமக்கு வரம் அளிக்க எழுந்தருளி வந்திருப்பவர்களுக் குள் வஸிஷ்டரும் இருப்பதைப் பார்த்து மனக் கொதிப்புக்கொண்டு நெடுநேரம் வரையில் மௌனமுற்றிருந்தார். மகரிஷிகள் அவரை நோக்கி, "ஓ விசுவாமித்திரரே, பிராமணத் துவம் அதி சாமானியமான பதார்த்தம். நீரோ மகா தேஜஸ்வி, ஒப்பற்ற தபஸ்வி, நீரே மகா புருஷன், நீரே பிராமணருக்குச் சிரோமணி. எல்லாப் பிராமணர்களும் உம்முடைய மந்தி ரத்தை ஓதவேண்டும் என்றும் உம்முடைய மந்திரத்தை நியமத்தோடு உச்சரித்து ஜபிக்க வேண்டும் என்றும் விதிக்கப்பட்டிருக்கிற போது, நீர் பிராமணத்துவம் அடைவதற்கு இன்னம் என்னபாக்கி இருக்கிறது? பிராமணத் துவம் அனுஷ்டிப்பதில் பல கஷ்டங்கள் இருக் கின்றன; அனேக விரதங்களையும் நியமங்களை யும் ஆசரிக்கவேண்டும். ராஜாவாகிய உமக்கு அவை வருத்தத்தை உண்டாக்கும்," என்றனர்.

விசுவாமித்திரர்: "இது வரையில் இவ் வளவு கடுமையான தவங்களைச் செய்ய எனக்கு ஆற்றல் உண்டாயிருக்கையில், பிராமணத்துவத்

துக்குரிய விரத நியமங்களை அனுஷ்டிக்க எனக்குச் சக்தி யில்லாமற் போகுமா?”

ரிஷிகள்: “உம்மால் அது முடியாது என்று நாங்கள் சொல்லவில்லையே. ஆனால் நீர் அவ்வளவு கஷ்டத்தையும் அனுபவிப்பதினால் என்ன பிரயோஜனம் உண்டாகப்போகிறது? நீர் இந்திரபதம் அடைய ஏன் முயற்சி செய்யக்கூடாது? அது தான் உமக்குத் தகுதியான பதவி. நாங்கள் அனைவரும் உம்முடைய தபஸ்ஸினால் பரமசந்தோஷ மடைந்து, உமக்கு ராஜரிஷி என்று பட்டம் கொடுக்கிறோம். தேவரிஷி, பிரம்மரிஷி என்பவருக்கு அடுத்த படியில் உள்ளவர் ராஜரிஷிகள் என்பது உமக்கு நன்கு தெரிந்திருக்கிறது. ஆகவே அந்த மூன்றாவது படியிலுள்ள ராஜரிஷிப் பட்டத்தை உமக்கு அளிக்கிறோம். பிராமணத்துவத்தினால் உமக்கு ஆகவேண்டிய காரியம் என்ன? ராஜரிஷிகளுக்குரிய கௌரவ சூசகமான பதக்கத்தை இதோ தருகிறோம், பெற்றுக்கொள்ளும்.”

இந்தப் பிரசங்கத்தின் தந்திரத்தை யெல்லாம் விசுவாமித்திரர் நன்றாய்க் கண்டுகொண்டார். பிரம்மரிஷிகள் தம்முடைய தவத்தைக் கண்டு பயந்துபோய்விட்டார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள அவருக்கு வெகுநேரம் செல்லவில்லை. அவர் அவர்கள் அளித்த பதக்

கத்தை வீசியெறிந்துவிட்டுச் சொல்லலாயினர்: "ஓ பிரம்மரிஷிகளே, உங்களுடைய தந்திரமெல்லாம் எனக்கு நன்ருய்த் தெரிந்துவிட்டது. நீங்கள் வெளிமயக்கான வார்த்தைகளினுல் என்னைப் பிராமணத்துவம் பெறவொட்டாமல் ஏய்க்கப் பார்க்கிறீர்கள். அந்தப் பிராமணத்துவம் இனி எனக்கு வேண்டியதில்லை; அதை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள். நான் பிரம்மபதத்தை வகிக்க விரும்புகிறேன். இனி நான் உங்களது புகழ் பாடித் தவம் செய்யப்போகிறதில்லை. நான் நூதனமாய் ஓர் உலகத்தைப் படைத்து அதற்குப் பிரம்மாவாகப்போகிறேன். என்னுடைய உலகத்திலிருந்து துக்கத்தை அகற்றிவிடுவேன். அதில் பிராமணரைக் கிட்ட நெருங்கவொட்டாமல் எட்டியிருக்கச் செய்வேன். உங்களால் என்னைத் தடுக்க முடியுமானுல் ஒரு கை பாருங்கள்!" என்ருர்.

வஸிஷ்டர் பிரம்மதேவனுக்குச் சைகை காட்டிச் சொல்லலுற்ருர், "இதை நான் முன்னமே சொன்னேன் இல்லையா? பிராமணத்துவம் கிடைக்காதிருக்கையிலேயே இவன் பாடு இப்படி இருக்கிறது!"

ரிஷிகள் இன்னம் எத்தனையோ உபாயங்களெல்லாம் செய்து விசுவாமித்திரரை வழிக்குக் கொண்டுவர முயன்ருர்கள். "நீர் மனது

வைத்தால் இன்னொரு பிரம்மாண்டத்தையும் படைப்பீர். அதில் ஆச்சரியம் என்ன? தபோ பலத்தினால் பிரம்மாண்டத்தை இரண்டாய்ப் பிளந்தவர் வேறொரு பிரம்மாண்டத்தை உண்டாக்குவது ஓர் அதிசயம் அன்று. ஆனால் நாங்கள் உம்முடைய நேசர்களானபடியால், உமக்கு ஒரு புத்தி சொல்லுகிறோம். நீர் ஏன் இவ்வளவு சிரமப்படவேண்டும்? இந்த உலகத்திலே நீர் அத்விதீயர். உமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை. நீர் பிராமணரினும் உயர்ந்தவர்; பிரம்மாவினும் சிறந்தவர். அப்படியிருக்க, நீர் ஏன் உலகசிருஷ்டி செய்யும் சிரமத்தை ஏற்க விரும்புகிறீர்? என்றனர்.

விசுவாமித்திரர்: "பிராமணவமிசம் நிர்மூலமாய்ப் போக! அப்போதுதான் நான் உங்கள் சிருஷ்டியில் தங்கியிருக்க முடியும். இந்தப் பிராமண பீடையைக் கண்ணால் பார்க்கவும் எனக்குச் சகிக்கவில்லை."

அதன்மேல் பிரம்மாதியர் கோபத்தினால் தேகமெல்லாம் துடிதுடிக்க அவ்விடத்தை விட்டு வேகமாய்ப் புறப்பட்டுச் சென்றார்கள். விசுவாமித்திரரும் நூதன ஜகத்தைச் சிருஷ்டிக்க வேண்டித் தற்போதுள்ள பிரம்மாண்டத்தின் பரப்பைப் பார்வையிட்டு அறியத் தவளகிரியின் உன்னத சிகரத்தில் ஏறினார்.

## நான்காம் பாகம்

க

### மூலப்பொருளைத் தேடி அடைதல்

சரற்காலத்து நிர்மலமான ஆகாயத்தை நோக்குமிடத்து, கணக்கில்லாத நக்ஷத்திரக் கூட்டங்களின் இடையிடையே மங்கலான வெண்ணீராவி போன்ற சில பதார்த்தங்கள் சிற்சில சமையங்களில் காணப்படும். தூரதிருஷ்டிக் கண்ணுடியைக்கொண்டு பார்த்தால் அவைகளை இன்னும் ஸ்பஷ்டமாய்க் காணலாம். அவை யெல்லாம் உலக சிருஷ்டி செய்வதற்காகச் சேகரித்திருக்கும் சாமக்கிரிகளேயன்றி வேறொன்றுமல்ல; அவற்றினின்று பூமியாவது ஸௌரஜகத்தாவது இன்னும் அமைக்கப்படவில்லை. * மங்கலான நீராவிபோன்ற தோற்றமுடைமை பற்றிச் சிலர் அவைகளுக்கு நீராவிப்படலம் அல்லது நீகாரிகையென்று பெயரிட்டிருக்கிறார்கள்.

---

* ஒரு சூரியனும் அதைச்சுற்றிச் சுழன்று அதினின்று ஜீவனைப் பெறும் கிரகங்களும் சேர்ந்து ‘ஸௌரஜகத்து’ என்னப்படும். வானத்தில் தோன்றும் ஒவ்வொரு நக்ஷத்திரமும் ஒரு ஒரு சூரியன். அனேக நக்ஷத்திரங்களைச் சுற்றி நமது பூமி போன்ற கிரகங்கள் இருக்கின்றன என்று ஊகிக்கப்படுகிறது.

என்றைய தினம் விசுவாமித்திரர் பிரம்ம தேவனோடும் பிரம்மரிஷிகளோடும் சண்டை போட்டுவிட்டுத் தவளகிரியின் உன்னத சிகரத்தில் ஏறினாரோ, அன்று முதன்முதல் இந்த நீகாரிகை அவருடைய கண்ணில் பட்டது. அந்த க்ஷணமே அவர் ஆகாயவெளியில் அதற்கு அபிமுகமாக விரைந்து சென்றார். அம்பைப்போலவும், புகைரதத்தைப்போலவும், மின்னலைப்போலவும் பாய்ந்து ராஜரிஷியாகிய விசுவாமித்திரர் ககனமார்க்கத்தில் கமனம்செய்து பிரதிக்ஷணமும் பல்லாயிரம்காத தூரம் கடந்துசென்றார். அவர் அப்பொழுது உருக்கிவார்த்த பொன்னார் மேனியராய்த் திகழ, அவரது மின்னார் செஞ்சடைக் கற்றைகள் அவருக்குப் பின்னால் குதிகால் வரையில் தொங்குவனவாய்ச் சூரியகிரணத்தில் பளபள பளபளவென்று மிளிர்ந்தன. பகற்பொழுதில் இந்த அசாதாரணமான தோற்றத்தைக் கண்டு பூமியிலுள்ள ஜனங்கள் அதை அகாலத்தில் உண்டாகும் உற்கையென எண்ணினார்கள். * இரவு நள்ளிருளாகவும், வஸிஷ்டர் தமது ஆசிரமத்தில் நிர்ஜனமான பிரதேசத்தில் நிஷ்டையில் அமரப்போகும் தறுவாயில், திடீரென்று ஆகாயத்தில் ஒரு தூமகேது உதயமாவதைக்

---

* உற்கை—ஆகாயத்தில் நக்ஷத்திரம் விழுவதுபோலத் தோன்றும் உருவம்.

கண்டு, ஏதோ உற்பாதம் உண்டாகவிருக்கிற தென்று அச்சங்கொண்டு ஆவிகலங்கி நின்றூர். பெருஞ்சமரில் சலியாமலும் பிரம்மரிஷிகளின் சபையில் கலங்காமலும் இருந்த நெஞ்சம் இப்பொழுது திடீரென்று பயந்து பதை பதைத்தது.

விசுவாமித்திரர் வாயுமண்டலத்திற்கு மேலே கிளம்பி, ஸ்திரவாயுப் பிரதேசங்களைத் தாண்டி காரணவாரி பரவிய அம்பர மண்டலத்தையும் கடந்து, அங்காரக மண்டலத்தையும் அதற்கப்பால் வியாழ மண்டலத்தையும் அதிக்கிரமித்து, அதன்பின் கிரமக்கிரமமாய் மற்றக் கிரக மண்டலங்களுக்கும் அப்பால் சென்று இன்னெரு ஸௌரஜகத்தில் பிரவேசித்தார். அந்த ஜகத்தின் கிரகங்களையும் உபக்கிரகங்களையும் படிப்படியாய்க் கடந்து, மூன்றுவதொரு ஸௌர ஜகத்தில் வந்துசேர்ந்தார். இவ்வாறு அவர் ஒரு ஸௌரஜகத்திலிருந்து இன்னெரு ஸௌரஜகத்தையும் அதிலிருந்து மற்றெரு ஸௌரஜகத்தையும், அதன்பிறகு இன்னும் எத்தனையோ ஸௌரஜகத்துக்களையும் தாவிக் கடந்து, கடைசியில், காற்றில்லாத, அசைவற்ற, உணர்ச்சியில்லாத, சப்தமில்லாத, யுக்திக்கெட்டாத, மனதுக்கெட்டாத சூனியமாகிய அனந்த வெளியில் வந்து சேர்ந்தார். அது ஆதியந்த மற்று, அடர்ந்தும் ஆழ்ந்தும், எல்லையற்றும்

அடியற்றும், கடக்கவொண்ணாததாயும் கரையற்றதாயும் உள்ள உருவற்ற, பயங்கரமான பாராவாரம்போல் பொலிவுற்றிருந்தது. கிரகங்களும் நக்ஷத்திரங்களும் தூரதூரமாய் விலகி விலகிக் கடைசியில் கண்ணுக்குத் தெரியாமல் மறையலாயின. ஒளியும் மங்கலாயிற்று. விசுவாமித்திரரை இவ்வளவு தூரம் பிடர் பிடித்து உந்திச்சென்றது அவரது யோகபலமேயன்றி, வெறும் மானுடபலமன்று. ஆகவே கற்பனைக்கும் எட்டாத இந்தப் பயங்கரமான ஸ்தானத்திலே அவருக்குப் பீதி என்பதே தோன்றவில்லை. இந்த அடியற்ற அனந்த வெளியிலே அவர் வெகுதூரம் சென்றபிறகு, கண்ணுக்குத் தெரியாத ஒரு கேந்திரத்தைச் சுற்றி, எல்லையற்ற, ஆழம் காணமுடியாத, அளவற்ற, முடிவற்ற பரமாணுக் கூட்டங்கள் இடைவிடாமல் சதாகாலமும் சுழன்றுகொண்டிருப்பதைக் கண்டார். இதுவே அவர் நாடிவந்த நீகாரிகை என்று தோற்றியதால், அதற்கு அதிக தூரமில்லாத ஓரிடத்தில் அவர் தம் ஓட்டத்தை நிறுத்தினார்.

௨

## புதிய ஒளி

இந்த அகாதமும் அனந்தமுமான சூனியமென்னும் வெறுவெளியின் அகத்தே அள

வற்ற நீகாரிகைகள் இருப்பதாக விசுவாமித்திருக்குத் தியானபலத்தினல் தெரிந்தது. தெரியவும் அவர் அந்தச் சமஸ்தமான நீகாரிகைகளையும் யோகபலத்தினல் ஆகருஷிக்கலாயினர். எத்துணை கணக்கில்லாத கிரக நக்ஷத்திராதிகள் அந்த அமூர்த்தமான அவியக்த பதார்த்தக் கூட்டத்துக்குள்ளே ஆகருஷிக்கப்பட்டனவோ யாரே உரைக்க வல்லார்? விசுவாமித்திரர் மங்கலான வெளிச்சத்தின் ஊடே பார்க்கலானர். பிரம்மாண்டமான உருவமுள்ள ஜலஜந்துக்கள் நீரில் உண்டாகும் உக்கிரமான கொந்தளிப்பினல் பயந்து, பளிங்குபோல் தெளிந்த தடாகத்தின் அடித்தலத்தில் விரைந்து அடைக்கலம் புகுவதுபோல் தோற்றியது. அல்லது பூதாகாரமான மேகத்துண்டங்கள் இரண்டு பிரதிகூலமான காற்றுகளால் மோதப்பட்டு ஒரு ஸ்தானத்தில் ஒன்ருய்த் திரண்டு பிண்டீகரணமுறுவதுபோலவும் தோற்றியது.

தமக்கு வேண்டிய அளவுக்கு அந்த நீகாரிகைப் பொருள்கள் நிறையக் கிடைத்தன என்று தோற்றியபோது, அவர் யோகபலத்தினல் அந்தச் சமஸ்த நீகாரிகைகளையும் ஒருங்கு திரட்டுவித்து அவற்றில் சுழற்சி இபக்கத்தை உண்டாக்கினர். ஒவ்வொரு நீகாரிகையும் அதன் அதன் கேந்திரத்தைச் சுற்றிச் சுழலத்

தலைப்பட்டது; பிறகு சமஸ்த நீகாரிகைகளும் ஐககேந்திரிகமாகச் சுழலத் தொடங்கின.* சுழற்சி இயக்கம் க்ஷணத்துக்கு க்ஷணம் வேகத்தில் விருத்தியாகிக் கொண்டேபோய், கிரமக் கிரமமாய் ஒரு க்ஷணத்துக்கு, ஆயிரம், பதினாயிரம், லக்ஷம், கோடி, அர்ப்புதம், விருந்தம், கர்வம், மகாகர்வம், பரார்த்தம் என்ற குரோசக் கணக்கான வேகத்தை அடையலாயிற்று. எவ்வளவு வேகமாய் அவை சுழன்றனவோ, அவ்வளவு பரிமாணத்தில் பரமாணுக்கள் ஒன்றோடொன்று நெருங்கிப் பொருந்திவரவரக் கனீபூதமாயின. கனீபாவம் மேலுக்கு மேல் அதிகமாக ஆக, வெப்பமும் விருத்தியாகிக் கடைசியில் பெருத்த பரமாணுராசிகள் ஜொலிக்கலாயின. பரார்த்தக் குரோச தூரத்திலிருந்த நக்ஷத்திரங்கள் எங்கேயோ கண்ணுக்குத் தெரியாமல் போய் ஒளிந்தன. காடாந்தகாரத்தைப் பிளந்துகொண்டு, இருட்கூட்டத்தைப் பிளந்துகொண்டு, இருட்கூட்டத்தைப் புதிய உலகத்தினின்றும் தூர வெருட்டி, சாசுவதயாம அந்தகாரத்தில் அமர்ந்திருந்த முடிவற்ற வெளியை[illegible] அகாதமான கர்ப்பக் குகைகளைப் பிரகாசிப்பித[illegible] அந்தப் புதிய சோதி

---

* வட்டத்தின் நடுவைக் ‘கே[illegible]ம்’ என்பார். பல பொருள்கள் ஒரே கேந்திரத்தைச் சுற்றி[illegible]து அவையெல்லாம் ‘ஐககேந்திரிக’ மாகச் சுற்றுகின்ற[illegible]ன்பார்.

யின் அகன்ற விரிகதிர்கள் முடிவற்ற பரவெளியின் திக்குத் திகந்தங்களி லெல்லாம் பரவி, நவநவமான தீவிரகதியோடு நொடிக்கு ஆறு கோடிக்குரோசதூரம் சென்று வஸிஷ்டருக்குப் புதிய சிருஷ்டியின் செய்தியைச் சொல்லத் தாவிவந்தன. இந்தப் புதிய ஒளி பாங்காயிருக்கிறதென்றும், தாம் படைத்த நவீன ஸௌர ஜகத்தின் சூரியன் நன்றாய் அமைந்திருக்கிறதென்றும், கற்பகோடி காலத்தும் அதன் சுடரொளி குன்றாதென்றும் கண்டார் விசுவாமித்திரர். கண்டு மகிழ்ந்தார்.

ரு

## புதிய சிருஷ்டி

அது சிறிது நேரம் ஜொலித்தானதும், விசுவாமித்திரர், "புதக்கிரகம் உண்டாகுக," என்று சங்கற்பித்தார். உடனே, சுழன்று ஜொலித்துக் கொண்டிருக்கும் அந்த ஒளிப் பிழம்பினின்றும் ஒரு கண்டம் பிரிந்து தூரத்தே எறியப்பட்டதாகி அதைச் சுற்றிச் சுழன்றுவரத் தொடங்கியது. அது படிப்படியாய் வெப்பம் தணிந்து புதக் கிரகமாய் உருக்கொண்டது. புதக்கிரகம் நன்றாயிருக்கிறதென்று விசுவாமித்திரர் கண்டார். அதன் பிறகு அவர், "சுக்கிரன் உண்டாகக் கடவது!" என்று ஆக்ஞை செய்தார். உடனே அந்தத் தேஜோமயமான

சுழற் பிழம்பிலிருந்து இன்னொரு கண்டம் தூரத்தே தெறித்து விழுந்து அதைச் சுற்றி உருளத் தொடங்கியது. சுக்கிரன் வடிவாய் விழுந்திருக்கிறதென்று விசுவாமித்திரர் கண்டு களித்தார். மறுபடியும் அவர், "பூமி உண்டாகக்கடவது," என்று திருவுள்ளம் பற்றினர். உடனே மறுபடியும் அந்தச் சுழலும் சுடர்ப் பிண்டத்திலிருந்து இன்னொரு பாகம் தெறித்து விழுந்து, குன்றும் மலையும் நதமும் நதியும் தீவும் கடலும் பொருந்திப் பொலியும் பிருதிவி யாகப் பரிணமித்தது. விசுவாமித்திரர் பார்த்தார். பழைய பூமி தமது நூதனசிருஷ்டி யாகிய இந்தப் பிருதிவியுடன் எவ்விதத்தும் ஒப்பிடத்தகுவ தன்றென எண்ணினர். இவ்வாருக அவர் அந்த அளவற்ற பரமாணுக் கூட்டத்தினின்றும் ஒவ்வொன்ருக மூன்று தினத்துக்குள் ஞாயிறு, திங்கள், செவ்வாய், வியாழன், ஹர்ஷல், நெப்தியூன், முதலிய என்னென்ன கிரகங்களும் உற்கை தூமகேதுக் களும் நம்முடைய ஸௌரஜகத்தில் உளவோ அவற்றை யெல்லாம் சிருஷ்டி செய்தார். ஆனல் அவருடைய பிருதிவி நம்முடைய பிருதிவியை விடக் கோடிப் பங்கு பெரிதாயும், சூரியனும் அப்படியே அனந்தகோடிப் பங்கு பெரிதாயும் இருந்தன. நம்முடைய பூமியிலிருந்து விசுவாமித்திர சிருஷ்டி மிகவும் பெரியதோர் மண்டல மாய்த் தோற்றியது.

௪

## புதிய பூமி

இந்தப் புதிய பூமியிலே புல், பூண்டு, காற்று, நீர், பனி, மலை, ஆறு, வனம், விருக்ஷர், இவையெல்லாம் பழைய பூமியில் உள்ளதுபோலவே இருந்தன. அதிகமாயிருந்தது, அப்பொழுது நம்முடைய பூமியில் இல்லாத தென்னமரம் மாத்திரமேயாம். விசுவாமித்திர சிருஷ்டியிலே துஷ்ட ஜந்துக்களே இல்லை. பல வர்ணங்களோடு கூடிய சிறகுகளையுடைய அழகு நிரம்பிய விசித்திரப் பறவைகள் கண்ணையும் மனதையும் கவர்ந்து களிப்பித்தன. அங்குள்ள நானு ஜாதியைச் சேர்ந்த விசித்திர மிருகங்கள் பார்க்கப் பார்க்கக் கண்கொள்ளாக் காட்சியா யிருந்தன. பூஞ்செடிகளி லெல்லாம் சுகந்தம் கமழும் மலர்கள் — மரங்களின் இலைகளிலும் சுகந்தம், தண்டுகளிலும் சுகந்தம், அவற்றின் சுவையிலும் இனிய சுகந்தம். புதிய பூமியின் தரையை ஆடைபோல் போர்த்திருந்த பசும்புல்லானது சிறந்த அத்தரைப் பார்க்கிலும் பல மடங்கு சுகந்தமான பரிமளம் வீசியது. விண்ணினின்று வீழும் மழை பன்னீராகவே பெய்தது. காற்றோ தூப கந்தத்துடன் இனிமையாய்க் கமழ்ந்தது.

அங்கே உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யவேண்டிய ஆவசியகமே இல்லை. காற்

றும் நீரும் வனபூமிகளும் வேண்டிய ஆகார பதார்த்தங்களை அளித்தன; இன்னும் எத்தனையோ ஆயிர வருஷங்களுக்கும் அளித்து வரும்; கிருஷித் தொழில் செய்ய எவருமே சிரமப்பட வேண்டியதில்லை. ஒருவேளை ஜனத்தொகை அபரிமிதமாய் விருத்தியாய்க் கொண்டே போனால் தான் கொஞ்சம் யோசிக்க வேண்டிவரும். வீடோ வாசலோ படுக்கையோ ஒன்றுமே அங்கு வேண்டுவதில்லை,—தொடுவதற்குச் சுகமாய் நறுமணங்கமழும் அதி மிருதுவான பசும்புல்லே சயனமாய் உதவியது. மாரிகாலத்தில் ஒதுங்கியிருப்பதற்கு விசுவாமித்திரர் அவரது பூமி முழுவதும் மலைகளைக் குடைந்து அழகிய உறைவிடங்களை அமைத்தார். அங்கு உக்கிரமான வெயில் நடப்பவரின் மேல் படாதவண்ணம் சகல ராஜமார்க்கங்களிலும் பந்தர்ப் போட்டு நடுப்பகலில் பனிஜலம் தெளித்துக் குளிர்ச்சியாயிருக்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வயல்களிலே அடி சுடும்படி வெயில் எரிக்கும்போது, இந்த நிழல் செறிந்த ராஜமார்க்கங்களுக்குச் சென்றால், சரீரம் குளிரச் சுகமாய் இளைப்பாறலாம். விசுவாமித்திருக்குச் சுவபமாகவே இயற்கையழகில் எப்போதும் அனுராகம் அதிகமாகையால், மலையுச்சிகளுக்கு ஏறிச்செல்ல, வேண்டிய சௌகரியங்களை யெல்லாம் அவர் செய்து

வைத்தார். அன்றியும், பர்வதங்களின் உன்னத சிகரங்களிலிருந்து சமுத்திரங்களின் ஆழ்ந்த அடித்தலம் வரையில் உள்ள எல்லாப் பொருள்களையும் சதா நன்கு ஆராய்ந்தறிவதற்கு வேண்டிய சகலவித சாதனங்களையும் அவர் அமைத்துவைத்தார்.

ரு

## புதிய மனிதன்

இனி மனிதரோ? நூதன ஜகத்தில் நூதன விதமான மனிதரே உண்டாயினர். இந்தப் புது சிருஷ்டியானது விசுவாமித்திரரின் மனம் போல ஏற்பட்டதானபடியால், அவருடைய புதிய பூமியில் உண்டான மனிதர் எல்லோரும் சுகமயமாய் விளங்கினர்; முதலில் துக்கானுபவத்திற்குரிய பிரவிருத்தி எதுவுமே அங்கு உண்டாகவில்லை. மேலான புத்திவிருத்திகள் விரிந்து உன்னதியடைவதற்குத்தக்க சாதனங்கள் எல்லாம் ஏற்பட்டிருந்தன. பிராமணர் என்பார் பிரம்மதேவனுடைய முகத்திலிருந்து பிறந்தவரல்லர் என்பதே விசுவாமித்திரரின் துணிபு. கேவலம் மனத்தின் மேலான சக்திகளை யெல்லாம் பயிற்சிசெய்து அதனாலேயே அவர்கள் பிராமணத்துவம் என்னும் மேன்மையை அடைந்தார்கள் என்றும், பிறகு சுயநலப் பிரியத்தின் மேலீட்டினால் அவர்கள்

லஜ்ஜையின்றி நீச காரியங்களைச் செய்யப் புகுந்துவிட்டார்கள் என்றும் அவர் எண்ணினுர். ஆகவே சகல ஜனங்களின் புத்தியும் சமானரூபமாய் விருத்தியடைவதற்குச் சாதகமாக விசுவாமித்திரர் எவ்விடத்தும் பாடசாலைகளையும் வித்தியாபீடங்களையும் ஸ்தாபித்தார். உயர்தர நீதிபோதங்களையும் அரசியல் முறைகளையும் கற்பிக்கத் தனித்தனியே போதகர்களை நியமிக்காமல், எல்லோருமே ஒன்று சேர்ந்து இக்காரியங்களையெல்லாம் பொதுவில் நடத்துமாறு ஏற்பாடு செய்யப்பட்டது. யுக்தி ஒன்றே உபாசிக்கத்தக்க தெய்வமாயிருந்தது. அதையன்றி வழிபாட்டுக்குரிய வஸ்து வேறொன்றும் ஏற்படவில்லை. எல்லோரும் தினந்தோறும் யுக்தி தேவதையையே பூசித்துவந்தனர்.

இனி அன்போ? அவர்களெல்லோரும் பரஸ்பரம் அன்புசெய்து வந்தனர். சகல மனிதர்களும் சரிசமானமாகக் கருதப்பட்டனர். எவனுவது ஒருவன் எந்த விஷயத்திலாகினும் ஒரு படி உயர ஏறினுல், அதனுல் தனக்குக் கிடைத்த அறிவைப் பிறருக்கும் உதவி, எல்லோரையும் தன்னுடைய நிலைக்கு உயர்த்த முயற்சி செய்வான். விசுவாமித்திரர் படைத்த உலகில் எல்லோரும் அழகிய வடிவினர்; விகார உருவம் வெகு அபரூபமாயிருக்கும். முகத்தைப் பார்த்த அளவில் ஒருவர்மேல் ஒருவர்

மோகம் கொள்ளும்படியான சம்மோஹன சக்தி எல்லோருடைய முகங்களிலும் திகழ்ந்தது. அங்கே ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள நேர்ந்தவிடத்து, கை குலுக்குவதாவது தலை அசைப்பதாவது கை கூப்புவதாவது கிடையாது; உள்ளன்புடன் மார்புறத் தழுவிக்கொள்வதே வழக்கமாயிருந்தது. எல்லோரும் சுரு சுருப்புள்ளவர்களாயும், அபிவிருத்தி மார்க்கத்தில் முன்னேறிச் செல்பவர்களாயும் இருந்தனர். அந்த நூதன ஜகத்தில் எல்லோரும் நூதன உற்சாகத்தோடு விராமமின்றி எங்கும் சென்று உழைப்பவரா யிருந்தனர். சில பொழுது மலையுச்சிகளில் ஏறி * வைஜ்ஞானிக தத்துவங்களைக் கண்டுபிடிப்பதில் ஆவலா யிருப்பர், சிலசமையம் கடலுக்குள் முழுகி அதன் சூக்ஷ்மரகசியங்களை நிர்ணயிக்க முயல்வர், சிலவேளை ஆகாயமார்க்கத்திற் பறந்து பற்பல காரியங்களைச் செய்யப்புகுவர். இவ்வண்ணம் எல்லோருமே திரிந்தலைந்து தம் தம் உன்னதியையும், தம் சமாஜ உன்னதியையும், பொதுவாக மனித வர்க்கத்தின் உன்னதியையும் நாடி உழைப்பவரா யிருந்தனர்.

விசுவாமித்திரருடைய உலகத்திலே விவாகபந்தம் கிடையாது. ஆனால், விவாகம்

---

* பதார்த்த விஞ்ஞான சாஸ்திர சம்பந்தமான-scientific.

இல்லாவிட்டாலும், காதலின் மிகுதியால் ஒரு முறை மனத்தோடு மனம் கலந்துபோனால், பிறகு பிரிவு நிகழ்வது வெகு அருமையா யிருக்கும். ஒருவேளை பிரிவு உண்டானாலும், மீண்டும் கூடுவதற்காக மூன்று வருஷம் காத்திராமல் எவரும் பிறருடன் சேர்ந்து வாழார். அப்படிச்செய்தாலும், அதில் ஒருவரும் குற்றம் காணார்: எல்லோரும் புலன்களை வென்றவரா யிருந்தனர். பிறர் பொருளைக் கவர்தல் முதலிய குற்றங்களைக் கனவிலும் கருதார்.

கீதம், வாத்தியம் முதலிய கலைகளில் எல்லோரும் தேர்ந்தவரா யிருந்தனர். தினந்தோறும் எல்லாவிடங்களிலும் கானமோ வாத்தியமோ ஆட்டமோ அபிநயமோ ஏதாவதொன்று நடந்தவண்ணமாகவே யிருக்கும்; அதில் எல்லோரும் கலந்து இன்புறுவர். பிரதிதினமும் புதிய உற்சவங்கள் அந்தப் புதிய உலகத்தில் உண்டாகிக்கொண்டே யிருக்கும். பயப்படுவதற்கு எவ்வித அரசனாவது சேனாபதியாவது கிடையாது. எல்லோரும் சேர்ந்து எது செய்யவேண்டுமென்று சம்மதிக்கிறார்களோ அது அவ்வாறே நடக்கும். பதார்த்தங்களின் சூக்ஷ்ம தத்துவங்களை ஆராய்வதும், அண்டை அயலாரை மகிழ்விப்பதுமே விசுவாமித்திர லோகவாசிகளின் நித்தியகர்மங்களா யிருந்தன.

உவகை, உல்லாசம், ஆனந்தம், இவற்ருல் மக்கள் மனம் பூரித்துப் பாடி ஆடிக் குதிப்பர். மனிதருக்குள் பரஸ்பரம் பகை உண்டாவதற்குக் காரணமா யிருப்பவைகளை யெல்லாம் விசுவாமித்திரர் அதிக ஜாக்கிரதையோடு மக்களின் மனத்திலிருந்து அகற்றியிருந்தார். பொன்னுசை, புகழாசை, அதிகார விருப்பங்கள் எவருக்குமே கிடையா. விநோதமும் உல்லாஸமுமே எங்கும் நிறைந்திருந்தது. இன்று ஒருவர் வீட்டுச் சுபசோபனங்களுக்கு மற்றவர் வந்து நட்புப் பாராட்டுவதும், நாளை அம் மற்றவருடைய சுபமங்களங்களுக்கு முதற்சொன்னவரும் மற்ரேரும் வந்து மனம் களிப்பதுமாக இவ்வாறு எல்லாரும் பரஸ்பர யோகக்ஷேமாதிசயங்களைக் கருதிக் காலக்ஷேபம் செய்து வந்தனர்.

விசுவாமித்திருடைய ஜகத்திலே மனிதர் மரிப்பதில்லை, ஒரு உலகத்தைவிட்டு இன்னேர் உலகத்துக்குச் செல்வர். இவ்வாறு ஏழெட்டு முறை மாறிமாறி லோகாந்தரம் சென்று, பிறகு யதாஸ்தானத்துக்கு வந்துசேர்வார்கள். அங்கே ஜன்மம் இரண்டு வகை, புனர்ஜன்மம், நூதன ஜன்மம் என்று. நூதன ஜன்மங்களின் தொகை ஓர் வரம்புக்குட்பட்டிருந்தது; தினந்தோறும் ஓர் நிஷ்கரிஷையான சங்கியையுள்ள ஜனனங்களே உண்டாகும்; மற்றவை

யெல்லாம் புனர்ஜன்மங்களே யாம். விசுவா மித்திரரின் பூமி சொற்பகாலம்தான் இருந்தது; புதிய ஜனனங்கள் அதிகமாய்ப்போனால், என்ன நேர்ந்திருக்குமோ சொல்லமுடியாது.

சு

## கவித்துவ ஜனனம்

இது நிற்க, வால்மீகியானவர் ஹிமாலய வனங் களிலே கண்ணீருங் கம்பலையுமாய்க் கரைந்து புலம்பிக்கொண்டு திரிவாராயினர். அவரு டைய புலம்பலுக்கும் மனோவேதனைக்கும் ஒப்புமில்லை, ஒழிவுமில்லை. என்ன பாவம் செய்தேனோ, இந்தப் பாவம் எப்படித் தீருமோ, என்று பலகாலும் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணாகிப் பதைபதைத்து எவ்விடத்தும் இருக்க நிலைகொள்ளாமல் ஏங்கி அலைவார். வழிப்பறிக் கள்வரின் முகத்தில் இனி ஒரு காலும் விழியேன் என்பார். அவர்களும் வீணே தேடித் திரிந்து அவரைக் காணக்கூடா தவராயினர். மனிதர்களைக் கண்டுவிட்டால், அவர் மனதை வாட்டும் தீ இன்னம் அதிகமாய் மூண்டு கொழுந்துவிட்டெரியத் தொடங்கும். அவர் பசு பக்ஷிகள் சகிதம் காட்டையே தமக்கு உறைவிடமாகக் கொண்டார். அந்தப் பசு பக்ஷிக ளும் அவருடைய துயரத்தைக் கண்டு இரங்கின. அவர் அவைகளுக்குள் சிலவற்றைப் புறங்

கழுத்தில் தடவிக்கொடுத்தும் சிலவற்றைக் குளிப்பாட்டி இரை ஊட்டியும் காலங்கழித்து வந்தார்.

இப்படி இருக்கையில் ஒரு நாள் ஆணும் பெண்ணுமாகிய இரண்டு அன்றிற் பட்சிகள் ஒன்றோடொன்று கூடிக்குலாவிக் களித்திருந்தன. ஒன்று மற்றொன்றின்மேல் விழுந்து அலகு கோத்து முத்தமிட்டும், ஒரு க்ஷணம் பின்னுக்கு விலகியும், மறு க்ஷணம் நொண்டி நொண்டி அருகில் அணுகியும் விளையாடும். இவ்வாறு அந்தப் பறவைகள் மாறி மாறி ஒன்றின்மேல் ஒன்று விழுந்து, பிறகு சிறகுகளை அடித்துக்கொண்டு சுழன்று சுழன்று கூவிக்கொண்டே பறந்து கிளைக்குக் கிளை தாவி உல்லாஸமாயிருந்தன. அவைகள் இவ்வாறு களிப்பதை வால்மீகி கண்டு பரவசமடைந்து, "இவைகள் என்னைப் பார்க்கிலும் எவ்வளவு அதிகமாய்ச் சுகம் அனுபவிக்கின்றன! நானும் ஏன் இப்படி ஆனந்தத்தில் அமிழ்ந்து யதேச்சையாய்த் திரியக்கூடாது? எனக்கும் யதேஷ்டமாய்த் தோழர்கள் இருக்கிறார்களே!" என்று கவல்வாராயினர். அதற்குமேல் நினைக்க அவருக்கு ஒன்றும் தோன்றவில்லை. பழைய நினைவுகள் மறுபடியும் புதிதாய் ஞாபகத்துக்கு வந்து அவர் மனதை வருத்தலாயின. இப்படி அவர் சிந்தையில் ஆழ்ந்திருக்கையில்,

திடீரென்று ஒரு பாணம் வந்து அடித்து ஒரு பறவையை வீழ்த்தவும், அது துடிதுடித்துத் தரையில் புரண்டு உயிரை விட்டது. உடனே ஒரு வேடன் ஓடிவந்து அதன் சிறகுகளைப் பறிக்கத் தொடங்கினான். அந்தப் பரிதாபக் காட்சியைப் பார்க்கப் பொறுமல் வால்மீகியின் நெஞ்சம் பதைபதைக்க, அவர் நாவினின்றும் இந்தச் சுலோகம் சோகத்தில் தோய்ந்து கம்பீரமாய், கணீரென்று எழுந்தது:—"அடே துராத்மா!

"மா நிஷாத ப்ரதிஷ்ட்ஹாம் த்வம்
அகம: சாச்வதீ: ஸமா:
யத் க்ரௌஞ்ச மித்ஹுநாத் ஏகம்
அவத்ஹீ: காமமோஹிதம்." *

இந்த வாக்கியத்தை வால்மீகி சொன்ஞரோ இல்லையோ, உடனே ஓர் அழகிய கன்னிகை அருகிற் பெருகும் அருவியின் நடுவிலிருந்து வெளிப்பட்டு அந்த வனப்பிரதேசத்தில் ஒளி வீசி வருவதைக் கண்டார். அவளுடைய திருமேனியழகு தெய்வமங்கையரையும் வெட்கச்செய்யும் காந்தியுடன் பொலிந்து, முழுநிலாக் கதிர்களையும் பார்க்க இனிமையும்

---

* ஏ வேடா, காதலால் ஒன்றையொன்று மோகித்திருந்த அன்றிற்பறவையிணைகளில் ஒன்றை நீ கொன்றாய், அதனால் நீ என்றென்றைக்கும் பெருமையற்றுப் பாழாய்ப்போகக் கடவாய்!

குளிர்ச்சியும் வாய்ந்து, உள்ளத்தைக் கொள்ளை கொள்வதாய்த்திகழ்ந்தது. அவ் அழகிய மங்கையின் மனோகரமான சோபையைக் கண்டு எல்லோரும் ஆச்சரியபரிதராயினர். பக்ஷியை எடுக்கக் கையைநீட்டியிருந்த வேடன் தூணைப் போல் அசைவற்று நின்றுவிட்டான். பசுபக்ஷிகள் எல்லாம் அரவமற்றவையாயின. அந்தப் பரமசுந்தரி வால்மீகியின் எதிரில் வந்து நின்றாள். வால்மீகிக்குப் பேச நா எழவில்லை. அவளும் அவருக்குப் பேச அவகாசம் கொடாமல் அவரை நோக்கி, "வால்மீகியே, ஆச்சரியப் படவேண்டாம், நான் சாஸ்வதி, பிராமணரின் குலதெய்வம். ஆனால் பிராமணருக்குள் உன்னைப்போல் மனவுருக்கமுள்ள ஒருவரையும் நான் கண்டதில்லை. ஆகையால் உனக்கு இந்த வீணையை அளிக்க வந்தேன். இந்த வீணையானது உனது கையிலும் உன்னைப்போன்றவர்களின் கைகளிலும் என்றென்றைக்கும் விளங்கிக்கொண்டிருக்கும். நீ பரோபகார விரதம் பூண்டு பிறர் நன்மையின் பொருட்டே இதை உபயோகிக்கக்கடவாய்," என்று அருளிச்செய்ய, வால்மீகி அவளுடைய திருவடிகளை வணங்கி அவ் வீணையைப் பெற்றுக்கொண்டார். மற்று, அவர் அதை ஏந்திய து ஏந்தியவண்ணமா யிருக்கையிலேயே சாஸ்வதி அந்தர்த்தானமாயினள்.

~~~
~~~

# ஐந்தாம் பாகம்

## க

## பழைய உலகம்

விசுவாமித்திரர் பூலோகத்தை விட்டுப் புதிய சிருஷ்டிசெய்யும் பொருட்டுப் பிரஸ்தானமான பிறகு, பழைய சிருஷ்டிக்கு என்ன நேர்ந்த தென்று எளிதில் அறிந்துகொள்ளலாம். புவி முழுதும் குழப்பமும் அராஜகமும் கொள்ளை யும் குடிகொண்டன; ரத்தப் பிரவாகம் எங்கும் இடைவிடாமல் பெருகியவண்ணமா யிருந்தது. இதிகாசத்திலே அராஜகசமையங்கள் அடிக்கடி வர்ணிக்கப்பட்டிருப்பதை நாம் படித்திருக் கிறோம். பாரதவர்ஷத்திலே யவன சாம்ராஜ் ஜியம் அழிந்துபோனதுமுதல் ஆங்கல சாம் ராஜ்ஜிய ஸ்தாபன பரியந்தம் நிகழ்ந்த பயங்கர மான சம்பவங்களைப்போல உலகத்தின் மற்றெந்தப் பாகத்திலாவது நேர்ந்திருக்குமோ என்பது சந்தேகம். ஆனால் விசுவாமித்திரர் நூதன ஜகத்தைச் சிருஷ்டிப்பதாகிய காரியத்தை முடிக்கும்பொருட்டுச் சென்ற பிறகு நேரிட்டவற்றில் நூற்றில் ஒரு பங்குக்குக் கூட மேற்சொல்லிய சம்பவங்கள் ஈடாகா.

ஸ்தூலமாய்ச்சொல்லுமிடத்து, அக்காலத்திலே பூமியில் பிராமணர், க்ஷத்திரியர், ராக்ஷஸர், வானரர், என்னும் நால்வகைப் பிரதான ஜாதிகள் இருந்தார்கள். யவனமிலேச்சஹூணர்களின் ராஜ்ஜியங்களை விசுவாமித்திரர் சின்னபின்னமாகக் குலைத்து அழித்துவிட்டிருந்தார். அவர்களின் அரசர் அனேகர் போர்க்களத்தில் கொல்லப்பட்டுப்போயினர். பலர் ஓடிச்சென்று வஸிஷ்டரைச் சரணமடைந்தார்கள். இன்னும் அனேகர் எங்கே போய்விட்டார்களோ தெரியவில்லை. அவர்களது ராஜ்ஜியங்களும் அராஜகத்தினல் தாறுமாறுய்ப் போய்விட்டன. கள்வர்களும் கொள்ளைக்காரர்களும் கூட்டமாய்ச் சேர்ந்து பகற்பொழுதிலேயே கொள்ளையிட்டார்கள், பட்டணங்களை நெருப்புவைத்து எரித்தார்கள். நகரங்கள் நகரங்களாய் அவர்களுடைய வாளுக்கு இரையாயின. இந்தச் சமயத்திலே வால்மீகியார் எல்லாவற்றிலும் பிரதானமான கொள்ளைக்கூட்டத்தின் தலைமையை ஒழித்துவிட்டிருந்தார். ஆனல் அவரது கூட்டம் இன்னும் கலையவில்லை. அந்தக் கூட்டத்தார் குகன் என்னும் ஒரு கிராதனைத் தங்களுக்குத் தளபதியாக நியோகித்துக்கொண்டு ஹிந்துஸ்தானம் முழுவதையும் கொள்ளையடிக்கத் தொடங்கினர். ஒருநாள் யமுனைத்தரியி

லும் இன்னொரு நாள் பிரயாகத்திலும், இன்று சதத்துரு சங்கமத்திலும் நாளை சரயுநதி தீரத்திலும் என்று இவ்வாறு அவர்கள் கொள்ளையடிக்கலானார்கள். இந்தச்சமயங்களிலே அந்தக் கொள்ளைக்காரரின் கூட்டங்களைப் பார்த்தால், கலியுகத்தில் உண்டாகவிருக்கும் சர்வஜாதி ஸங்காம் இப்பொழுதே நடந்துவிட்டதோ என்று தோன்றும். பெரிய பெரிய தளங்களிலே மிலேச்சர், யவனர், ராக்ஷஸர், வானரர், பிராமணர், க்ஷத்திரியர் ஆகிய எல்லோரும் ஒருமித்து உண்பதும் உறங்குவதும், எல்லோரும் ஒருமித்து ஒரே தொழில் செய்வதும், ஒரே சுகங்களை அனுபவிப்பதுமாய், அதிக ஆடம்பரத்தோடும் படாடோபத்தோடும் வாழ்ந்து வந்தனர். நரஹத்தி செய்வதும் ஊரைக் கொள்ளையிடுவதுமாகிய துஷ்கிருத்தியங்களையே அவர்கள் முக்கிய விரதங்களாகக் கொண்டு தேவர்களாலும் அடக்கவொண்ணாத கொடியராயினர். இந்தக் கோரமான அராஜகயுகத்திலே வலிமையுடைய ராஜ்ஜியம் ஒன்றாவது இருந்திருப்பினும், ஒருவாறு ஆப்பியாயமா யிருக்கும், ஒரு ஜாதிக்காவது பிராதான்யம் உண்டாயிருப்பினும் ஓர் ஆறுதலாயிருக்கும். ஆனால் அவ்வாறிருக்கக் கொடுத்துவைக்கவில்லை. ஒவ்வொரு ராஜ்ஜியத்திலும் இரண்டு கக்ஷிகள் உண்டாயிருந்தன;

எல்லா ஜாதியாருக்குள்ளும் ஐக்கியமின்மை மேலிட்டிருந்தது. ராஜ்ஜியாதிகாரத்தை உடைத்தாயிருந்த கக்ஷியார் அறக்கொடியாராயிருந்தனர்; அவர்கள் இழைக்கும் அட்டூழியங்களையும் பார்க்கக் கள்வர் கொள்ளைக்காரரின் அக்கிரமங்கள் ஆயிரமடங்கு உத்தமமாயிருந்தன. கொள்ளைக்காரர் கொல்லுதல் மாத்திரமே செய்தனர்; அவர்களோ தங்களிடம் அகப்பட்டுக் கொண்டவர்களைச் சொல்லமுடியாத துன்பங்களுக் குள்ளாக்கிச் சித்திரவதை செய்து கொன்றனர்.

இந்தச் சமயத்திலே ராவணன் மகா பல பராக்கிரமமுடைய வேந்தனாயிருந்தான். பரஸ்திரீ ஹரணம், பாதன-அபஹரணம், பிறர் தேசங்களைக் கொள்ளையடித்தல், பிறரைப் பிடித்தல், வேடிக்கைக்காகவென்றே பிறரைத் துன்புறுத்தல் ஆகிய இவைகளே அவனுடைய முக்கியமான விநோதங்கள். அவனுடைய சொந்த தேசத்திலே அவன் தம்பியாகிய விபீஷணன் அவனுக்கு விரோதியாயிருந்தான். ஆகவே அவனை ராவணன் சிறையில் வைத்து, அவனுக்குப் பரிந்து பேசின பிரதான மந்திரிகளின் மூக்கையும் செவிகளையும் அறுத்து விடும்படி கட்டளையிட்டான். அன்றியும் அவன் வானரராஜ்ஜியத்தில் வாழும் சுக்கிரீவனோடு விபீஷணனுக்கு நேசம் உண்டாகும்போ

விருப்பதைக் கண்டு, கா தூஷணர் என்னும் குரூரமுள்ள வன்கண்ணரான சேனபதிகள் இருவரைத் தண்டகாரணியத்தில் சுக்கிரீவனை எதிர்க்க அனுப்பினன்.

வானர ராஜ்ஜியத்திலே வாலியரசன் தனக்கு விரோதமாயிருந்த கக்ஷியாரை நாட்டை விட்டு ஓட்டிவிட்டு, தன் தம்பியின் மனைவியைச் சேர்ந்து சுகமாய் வாழ்ந்திருந்தான். அவனது அனுசரர்கள், ஜனங்கள் வாழும் வளம்பொருந்திய பிரதேசங்களை யெல்லாம் சூறையாடி மனித சஞ்சாரமற்ற பயங்கரமான பாலைவனங்களாகச் செய்துவிட்டனர். "தண்டகாரணியம்," "தண்டகாரணியம்," என்று பிரசித்தமாய்ச் சொல்லப்படும் காடுகள் ஒரு காலத்தில் எல்லா வளங்களிலும் சிறந்த ராஜ்ஜியங்களாய் விளங்கினவை; ஆனல் அவை இப்பொழுது வாலிராஜனுடைய கொடுஞ்செயல்களால் ஜன சூனியமான அடவிகளாயும் புலி, சிங்கம் முதலிய துஷ்ட மிருகங்களின் உறைவிடங்களாகவும் மாறிப்போயின.

அக்காலத்தில் பிராமணருக்குள்ளே இரண்டு கக்ஷிகள் உண்டாயிருந்தன. இரண்டு கக்ஷிகளாய்ப்போவானேன்? ஒவ்வொருவனும் தனக்குத் தானே பிரதானமென்று சொல்லிக் கொண்டு திரிந்தான். ஆயினும் இந்த ஸ்வயம் பிரதானரான பிராமணர்களை யெல்லாம் இரு

வகுப்புகளாக வகுக்கலாம். ஒரு வகுப்பாரின் பிரதானத் தலைவர் க்ஷத்திரியப் பூண்டையே பூமியிலிருந்து அற ஒழித்துவிடவேண்டு மென்று சங்கற்பித்துக்கொண்டவரான பரசு ராமர். ஆனால் பரசுராமருக்கு எவரைக் கண் டாலும் பிடிக்காது. ஆகையால் அவர் கடற் கரை ஓரமாய் வாசஸ்தானம் அமைத்துக் கொண்டு அங்கே வசித்துவந்தார். பிராமணர் கள் அவர் சொல்லியபடி நடக்காமற் போன மையால், க்ஷத்திரியர்கள் மீண்டும் பிரபலராயி னர். ஆகையால் அவர் அவ் இரு ஜாதியார் களையும் வேரோடு அழிக்கக் கருதினர். அவர் ஒருவரே ஓர் ஆயிரவர்க்குச் சமமானவரல்லவா? அவர் பிராமணர் செய்யும் கர்மங்களில் அவர்க ளோடு சேர்வதில்லை. அவரைப்போல் எவ ரெவர் க்ஷத்திரியர்களின் ஜன்மவைரிகளா யிருந்தனரோ அவர்களெல்லாம் தம்தம் மனதுக்கு எது இஷ்டமோ அதையே செய்வர். பிராமணரின் மற்ற வகுப்புக்குத் தலைவராயிருந் தவர் வஸிஷ்டர். அவரும் தம் வகுப்பாருக் குள் முழுமுதற்றலைமை வகிக்க முடியாமற் போயினும், ஏதோ ஒருவாறு சிறிது பிரபுத் துவம் செலுத்திவந்தார்.

க்ஷத்திரியருக்குள் ஒரு சாரார் வஸிஷ்ட ருக்குப் பல வகைகளில் கடமைப்பட்டவரா யிருந்தனர்; அதன் பொருட்டு அவர்கள் பிரா

மண க்ஷத்திரிய ஐக்கியத்தை எவ்வாற்ருனும் பழுதுற வொட்டாமல் பாதுகாக்கத் தம்மால் இயன்ற வரையில் பாடுபட்டுவந்தனர். இந்த வகுப்பாருக்குள் அயோத்தி மிதிலா நகரங்களின் ராஜவமிசங்கள் முக்கியமானவை. இன்னொரு வகுப்பார், பரசுராமர் எப்படி க்ஷத்திரியாந்தகரா யிருந்தாரோ அப்படிப் பிராமணாந்தகரா யிருந்தனர். விசுவாமித்திர வமிசத்தார் இந்த வகுப்பாருக்குள் பிரதானரா யிருந்தனர். வஸிஷ்டர் கக்ஷியைச் சேர்ந்தவர்கள் ஒழிய மற்ற எல்லாக் கக்ஷியாரும் ஒருவருக்கொருவர் துன்பம் செய்யும்பொருட்டே தம் உயிரையும் விடத் தயாரா யிருந்தார்கள். பிராமணரின் யஜ்ஞயாகாதிகளைக் கெடுக்க விசுவாமித்திரரின் மந்திரிகள் சிலசமையம் ராக்ஷஸராகிய கரதூஷணர்களை அழைப்பார்கள். சமையம் நேர்ந்தால் பகைவரைப் பீடிக்கும்பொருட்டுப் பழிபாவத்துக் கஞ்சாத துஷ்டர்களையும் கொள்ளைக்காரர்களையும் ஏவிவிட ஒருவரும் சற்றேனும் முன்பின் யோசிக்கமாட்டார்கள். அற்ப காரணங்களை முன்னிட்டு அடிக்கடி பெருங் கலகங்கள் விளைந்து நாடுநகரங்களெல்லாம் கெட்டுக் குட்டிச்சுவராகும். இதற்கு உதாரணங்களைப் பெருக்கிக்கொண்டுபோவது அனுவசியகம். ஒரு நாள் விசுவாமித்திரரது ராஜதானியாகிய கான்யகுப்ஜத்திலே ஒரு பிராமணன் பலாத்கா

மாய்ப் பிடிக்கப்பட்டான். மந்திரி அவனைத் தன்முன் கொணர்வித்து, கசையினாலும் சாட்டையினாலும் பலமாய் அடிப்பித்து, நாசியையும் செவிகளையும் அறுப்பித்து, செவித்துவாரங்களிலே காய்ச்சிய ஈயத்தை ஊற்றுவித்தான். அதன் பிறகு எத்தனையோ நாய்களைக் கொண்டு வந்து அவற்றோடுகூட அந்தப் பிராமணனை ஒரு கூட்டில் தள்ளி அடைக்கச் செய்தான். பிராமணன் வேதனை பொறுக்கமாட்டாமல் பாத்துவாஜரின் பெயரைச் சொல்லிக் கதறினான். அக்காலத்திலே பாத்துவாஜ முனிவர் அனேக சிஷியர் சகிதமாய் யமுனையாற்றுக்குச் சிறிது தூரத்தில் வசித்துவந்தார். அவர் ஒரு விசாலமான வனபூமிக்குச் சுதந்தர அதிபதியா யிருந்தும் வஸிஷ்டருடைய கக்ஷியையோ பாசுராமருடைய கக்ஷியையோ எதையும் சேராதவரா யிருந்தார். பிராமணர்கள் எவ்விதச் சண்டையிலும் தலையிட்டுக்கொள்ளாது ஒதுங்கியிருக்க வேண்டும் என்பது அவரது கொள்கை; பௌரோகித்தியத் தொழிலிற் பிரவேசிக்கவும் அவர் மனமொப்பவில்லை; எவரிடத்தும் துவேஷபுத்தியும் அவருக்குக் கிடையாது. ஆகவே எல்லோரும் அவரிடம் பக்தி சிரத்தைகள் உள்ளவரா யிருந்தனர். யாதனை பொறுக்கமாட்டாமல் மாணவஸ்தையி லிருக்கும் பிராமணன் வாயிலிருந்து பாத்துவாஜரின் பெயர்

வெளிப்பட்டதைக் கேட்ட மந்திரி, அவனைப் பாத்துவாஜரின் ஒற்றனென்று எண்ணி இன்னும் அதிக யாதனைக் குட்படுத்தி அவனுயிரை வாங்கினன். அன்றியும் அந்தமந்திரி இருபது கள்வர் கூட்டங்களைத் திரட்டிக்கொண்டுபோய் மறுநாளே பாத்துவாஜரின் தபோவனத்தைச் சூழ்ந்து அதற்குநெருப்புவைத்தான். பாத்துவாஜரும் அவருடைய சிஷியர் சிலரும் மாத்திரம் யோகபலத்தினல் தப்பிப் பிழைக்கலானர்கள்; ஆனல் கணக்கில்லாத பிராணிகளோடுகூட அவ்வனம் அடங்கலும் ஓரே நாளில் அக்கினிக்கு இரையாய்ச் சாம்பராகிப் பாலைவனமாய் மாறியது.

## உ

## பூமியில் சாந்தி

இங்கே வால்மீகியார் சரஸ்வதி தேவியின் வீணையை அருளப்பெறும் பாக்கியத்தோடு கவிதாமாதுரியத்தைச் சுவைக்கும் சக்தியும் உடையவராகி ஹிமாலய பர்வதத்தின் கம்பீரமான வனபூமிகளினின்று நீங்கி ஜனங்கள் வாசம் செய்யும் இடங்களுக்கு வந்தார். வந்து ஆங்கு உண்டாயிருந்த பயங்கரமான காட்சிகளைக் கண்டு மனமுருகி ஆற்றாமையினல் விம்மி விம்மி அழத் தொடங்கினர். உயிர்கள் படும் துக்கத்தைக் கண்டு வருந்தி முதன்முதல் அவ

ருடைய கண்களினின்றுதான் கருணை விழிநீர் பெருகியதுபோலும். இவ்வாறு கண்ணீர் விடும் கருணாசாலிகள் எத்தனை பேர் உளர்? ஆனால் அக் கண்ணீரில் ஒவ்வொரு துளியும் மதிப்பில் அடங்காத ஓர் மாணிக்கமாகி ஓராயிரம் கொடுமைகளைத் தணிக்க வல்லதாகும்! இவ்வாறு கரைந்துருகி வால்மீகியார் பாடிக் கொண்டே ஹிந்துஸ்தானம் முழுவதும் சஞ்சாரம் செய்தார். எவ்விதமாக இந்தத் துக்கத்தை நிவாரணம் செய்வதென்று அவருக்குத் தெரியவில்லை யாயினும், அதை இனிச் சகிக்கமாட்டாதவருமாயினர். ஒரு நாள் ஓர் ஆற்றங்கரையில் அவர் இருந்து வீணையை வாசித்துக்கொண்டே தம் கண்ணீர்ப் பெருக்கினால் ஆற்றுநீர்ப் பிரவாகத்தை அதிகப்படுத்திக்கொண்டிருக்கையில், திடீரென்று பயங்கரமான ஓர் இரைச்சல் வெகு தூரத்தினின்று அவர் செவிகளில் விழுந்தது. முதலில் அச் சத்தம் கொள்ளையடித்துக் கொண்டிருக்கும் கள்வர்களின் கூச்சல்போலவும், பிறகு ஆபத்தில் அகப்பட்டவர் ஓலமிட்டு அலறும் அழுகுரலாய் மாறியும் கேட்கப்பட்டது. வால்மீகியார் இனி ஒரு கணமும் தரிக்கமாட்டாதவராய் அச் சத்தம் வரும் திசையை நோக்கி விரைந்து ஓடினார். நெடுந் தூரம் ஓடிப் பார்த்தபொழுது, ஒரு பெரிய நகரத்தில் கொள்ளையடிக்க ஆரம்பமாயிருப்

பதைக் கண்டார். வால்மீகியார் வீணையைத் தாங்கி அவ்விடம் போந்து கள்வர் கூட்டத் தலைவனது கைகளைப் பிடித்துக்கொண்டு, "இக் காரியத்தை நீ தவிர்," என்று கேட்டுக் கொண்டார்.

பிறர் துக்கத்துக்கு ஆற்றாது அழுவதினால் விளையும் நன்மைகள் அனந்தம். உன் பொருட்டே நீ அழுதால், உன் அழுகையை எவரும் காது கொடுத்துக் கேட்கமாட்டார்கள். பிறர் பொருட்டு ஒருமுறை நீ அழுவாயாகில், எல்லோரும் உன்னோடு சேர்ந்து அழுவார்கள். உன் அழுகையில் உருக்கமும் அந்தரங்க சுத்தியும் இருக்கும்பக்ஷத்தில், அவர்கள் இன்னும் அதிக ஆராமையுடன் உள்ளங்கசிந்து கண்ணீர் சொரிந்து கதறுவார்கள். வால்மீகியாரின் அழுகையாலும் கானத்தாலும் தீனபாவத்தாலும் அக் கள்வர்தலைவனின் நெஞ்சம் சிறிது இளகிற்று; அவன், பாடினது வால்மீகியாரெனத் தெரிந்துகொண்டான். கள்வர்கூட்டத் தலைவன் இனி ஒரு கணமேனும் தரிக்கலாற்றாதவனாகி, கொள்ளையடிப்பதை உடனே நிறுத்தி விடும்படி உத்திரவு பண்ணினான். அவனது சொந்தக் கூட்டத்தார் நிறுத்திவிட்டனர். ஆனால் அவன் தளத்தில் சேர்ந்திருந்த மிலேச்சரையும், யவனரையும், வானரரையும், ராக்ஷஸரையும் எவ்வாறு அடக்குவது?

தளபதி தானே அவர்களை நிறுத்தும் பொருட்டுப் போனபொழுது, ராக்ஷஸர்கள் ஏற்கெனவே ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்களை யெல்லாம் பக்ஷித்துவிட்டிருப்பதாகக் கண்டான்; அப்படி யிருந்தும் அவர்களை விட்டு விலகும்படி பிரார்த்தித்தான். இயற்கையிலேயே அவர்கள் துஷ்ட சுபாவமுள்ள ராக்ஷஸர்கள்; அதிலும் இப்பொழுது சுராபானம்செய்து கொள்ளை யடித்து மதோன்மத்தரா யிருந்தனர். அப்படி யிருக்க, அவர்கள் ஏன் இவன் வார்த்தையைக் கேட்கவேண்டும்? அவர்கள் இன்னும் அதிக கோபாவேசம் கொண்டார்கள். கொள்ளவும் கள்வர் தலைவன் அவர்களைப் பலாத்காரமாய் அந் நகரத்திலிருந்து கிளப்பவேண்டியதாயிற்று. ஆனால் அவர்கள் ஊருக்கு வெளியில் வந்த வுடனே யவனரோடும் மிலேச்சரோடும் வானரரோடும் சேர்ந்துகொண்டு கள்வர் தலைவனது பாசறையைப் பீமபராக்கிரமத்துடன் எதிர்க்கலாயினர். அதனால் அதிக கஷ்டத்தோடு கள்வர் தலைவன் பாசறைக்குள் நுழைந்தான். நுழைந்து அங்கு எதிர்ப்பட்ட காட்சியைக் கண்டு பிரமித்துப்போனான். பார்த்தான். வால்மீகியார் வீணாஹஸ்தராய், "சகோதர, சகோதர," என்று பாடிக்கொண்டிருந்தார்; கள்வரெல்லோரும் கேட்டு அழுதுகொண்டிருந்தார்கள். ஆயிரம் ஆயிரம் வீரர்கள் நிச்சப்தமாய்,

"அழுதலன்றி மற்றயலொன்றும் செய்குவ தறியா"ராய்க் கண்ணீர் சொரிந்தவண்ணமா யிருந்தார்கள். ஈ ர ஹ த் தி யை யே தங்கள் முக்கியத் தொழிலாகவும் ஜீவனோபாயமாகவும் கொண்டிருந்தவர்க ளெல்லோரும் தம்தம் ஆயுதங்களை எறிந்துவிட்டு இப்பொழுது அழுது கொண்டிருந்தார்கள். ராக்ஷஸர் முதலானவர்கள் ஒன்றுகூடி அவர்களை வளைந்திருந்தும், அவர்கள் அவர்களைக் கண்ணெடுத்துக் கூடப் பார்த்தார்களில்லை. ராக்ஷஸர்கள் அவர்களைக் கோரமாய் எதிர்க்க, வால்மீகியாரின் கானம் இன்னம்உச்சஸ்வரமாய் எழுந்து, மனிதர் படும் துக்க வர்ணனை நிரம்பியதாய், தயை புரிக வென்று கேட்கும் பிரார்த்தனையாகிய பல்லவி மயமாய், எல்லோருடைய உள்ளங்களையும் உருக்குவதாயிற்று. ராக்ஷஸர்களும் படிப்படியாய் அவ் இசையின் வசப்பட்டுக் கேட்பாராயினர். ரிபுக்களின் கானத்தைக் கேட்டு அன்று வால்மீகியார் என்ன தன்மையை அடைந்தாரோ, அதே தன்மையை இன்று எல்லாக் கள்வர் கூட்டத்தார்களும் அடைந்தனர். யவனரென்ன, மிலேச்சரென்ன, ராக்ஷஸரென்ன, வானரரென்ன, எல்லோரும் அந்த இசை வெள்ளத்தில் மெய்ம்மறந்து மூழ்கினர்; எல்லோருடைய இருதயங்களிலும் தயாரஸம் பொங்கியது. அந்தக் கானமானது, "தமை

யன்மாரே, தம்பிமாரே, இது வரையில் செய்தது செய்தாய்விட்டது. இனி அப்படிச் செய்யவேண்டாம். யோசித்துப் பாருங்கள், உங்களுக்கு இப்படி நேரிட்டிருந்தால், உங்கள் மனதுக்கு எப்படி இருக்கும்? எல்லாரும் மனிதர் தானே! உங்கள் உடப்பு எப்படி ரத்தமும் சதையுமாய் இருக்கிறதோ, அப்படித் தானே எல்லாருடைய உடம்பும்! உங்களுக்கு ஒரு அடிபட்டால் எவ்வளவு வலி உண்டாகிறது? உங்களுக்குக் கொஞ்சம் வலி உண்டானாலும் உயிர் துடி துடிக்கிறதல்லவா? அப்படித் துடித்தும், இன்னொருவனுடைய மண்டையின்மேல் கூசாமல் வாளால் ஓங்கியடிக்கிறீர்களே. ஐயோ, அப்பொழுது அவனுடைய மனம் எப்படித் தத்தளிக்குமோ சற்று யோசித்துப் பாருங்கள். பிறர் குழந்தைகளின் தலைகளைச் சிறிதும் இரக்கமில்லாமல் வெட்டித் தள்ளுகிறீர்களே, அடே பாவிகளா, உங்கள் சொந்தப் பிள்ளைகளுக்கு அந்தக் கதி உண்டானால் நீங்கள் எப்படிக் கலங்குவீர்கள், சற்று எண்ணிப் பாருங்களடா," என்று சொல்வது போலிருந்தது. அதைக் கேட்டவர்களெல்லோரும் விம்மி விம்மி அழுது மண்ணில் விழுந்து புரண்டு, "சுவாமி, எங்களைக் காப்பாற்றியருளும்; கடைத்தேறும் வழியைக் கூறியருளும்," என்று கதறினார்கள்.

மறுபடியும் பாடத் தொடங்கினர் வால்மீகியார்: "எல்லோரையும் சகோதரரே, சகோதரரே என்று அழையுங்கள். எல்லோரும் உங்களுக்குச் சொந்தமானவர்களே, ஒருவரும் அன்னியரில்லை. எல்லோரும் உங்களைப் போல் மனிதர்களே. பனிகாலத்தில் உங்களுக்கு எப்படி குளிர்கிறதோ அப்படியேதான் பிறருக்கும் குளிர்கிறது. வெயிற்காலத்தில் உங்களுக்கு வியர்ப்பதுபோலவே மற்றவர்களுக்கும் வியர்க்கிறது. மழையால் உங்கள் தேகம் நனைவதைப் போலத்தான் எல்லாருடைய தேகமும் நனைகிறது. அப்படியிருக்க உங்களுக்கும் மற்றுமுள்ள மனிதர்களுக்குப் என்ன பேதம்? ஆகையால் எல்லோரும் ஒன்றாய்ச் சேருங்கள். எல்லோரும் ஒரே நாதத்தில் ஒருயிராய் இசைந்து ஈடுபடுங்கள். நான் உங்களைச் சேர்ந்தவன், நீங்களும் என்னைச் சேர்ந்தவராகுங்கள். ஒரே பசும்புல் எல்லோருக்கும் படுக்கை, ஒரே பூமிதான் எல்லோருக்கும் உறைவிடம். ஒரே சூரியன் எல்லோருக்கும் ஒளி கொடுக்கிறது; ஒரே சந்திரன் எல்லோர் மனதையும் குளிரப் பண்ணுகிறது. பின்னே நாம் மாத்திரம் ஏன் பிரிந்து வாழவேண்டும்?" இன்னும் இவ்வாறு எத்தனை எத்தனை தத்துவங்களை அந்தக் கானம் போதித்ததோ யாரே கணிக்க வல்லார்? புல்லறிவினனாகிய யான் வால்மீகியாரின் திவ்விய

கானத்தைப்பற்றி இன்னம் எவ்வளவு நேரம் தான் வியாக்கியானம் பண்ண முடியும்?

இந்தப் பாட்டின் பயனுய் எல்லோரும் கள்வர் கோலத்தைக் களைந்துவிட்டு வால்மீகியாரின் திருவடிகளிலே அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கினுர்கள். கள்வர் கூட்டத் தலைவனுகிய குகன் அவர் பாதத்தைப் பற்றிக் கொண்டு கதறலாயினுன். வால்மீகியார் அவர்களைத் தம் பாதங்களை விடும்படி சொல்லி, "நான் தெய்வமல்லன், அவதாரமல்லன், அரசனுமல்லன். உங்களெல்லோரையும்போல நானும் ஒரு மனிதனே. என் காலில் விழுவதில் என்ன பிரயோஜனம்? இது வரையில் தீவினை செய்து வந்தீர்கள். இனி அப்படிச் செய்ய வேண்டாம். கெட்ட வழியை விட்டு நல்ல வழியை நாடுங்கள். சுகமடைவீர்கள்!" என்று உபதேசித்தார்.

வால்மீகியார் இவ்வாறு அக் கள்வர் கூட்டத்தாருக்கு நல்லறிவுச் சுடர்கொளுத்தி நல்வழிக்குத் திருப்பும்படி உபதேசித்துக் கொண்டிருக்கையிலே, நகரவாசிகளுக்குள்ளே உயிர் தப்பினவர்கள், சிலர் நொண்டிகள், சிலர் குருடர், நெருப்பிலே வெந்த தேகத்தினர் சிலர், வயோதிகரான தாய் தந்தையர்களைத் தூக்கிக் கொண்டு வருகிறவர் சிலர், காயம்பட்டுக் குற்றுயிரா யிருக்கும் தம் சிசுக்களை மார்போ

டணைத்து வருவோர் சிலர், ஆக எல்லோரும் பட்டணத்திலிருந்து வெளிப்பட்டுப் போவதைப் பார்த்தார். ராஜவமிசத்தார்களை ராக்ஷஸர் தின்றுபோட்டார்கள், ஆகையால் அராஜகமான நாட்டில்' வாழ்வது உசிதமன்று என்றெண்ணி, அவரவர்கள் தம்தம் உற்றார் உறவினர் இருக்கும் இடங்களைத் தேடிப்போவாராயினர். வால்மீகியார் அவர்களைச் சுட்டிக்காட்டி, 'பாருங்கள் உங்கள் கீர்த்தி மகிமை விளங்குவதை, பாருங்கள்,' என்று அக்கள்வருக்கு இடித்துரைத்தலும், அவர்களது விழிநீர்கள் ஆறாய்ப் பெருகி மார்பெலாம் வழிந்தன. எல்லோரும் தாங்கள் செய்த பாவங்களை எண்ணியெண்ணி நெஞ்சம் புண்ணாகிச் செத்தவர்போல் முகத்தின் நிறமாறித் தவித்தனர். தவிக்கவும் வால்மீகியார் அவர்களை நோக்கி, "நீங்கள் போய் அவர்களைத் திருப்பி அழைத்து வாருங்கள்," என்றார். அதைக் கேட்டு எல்லோரும் அவர்களின் சமீபமாய்ச் செல்ல, சென்ற மாத்திரத்திலே, அந்நகரவாசிகள் பயத்தினால் கதறி ஓலமிட்டு ஓட்டமெடுக்கலாயினர். அப்பொழுதுதான் அக்கள்வருக்கு விளங்கியது, துஷ்டர்கள் உண்மையைச் சொன்னாலும் உலகத்தார் நம்பமாட்டார்கள் என்று. அவர்கள் வால்மீகியாரை நோக்கி, "தாங்களே அந்நகரவாசிகளைத் திருப்பி

அழைத்து வாருங்கள்," என்று பிரார்த்தித்தார்கள். ஆனால் வால்மீகியும் கள்வனில்லை என்று எப்படி அறிந்து நம்புவார்கள் அந் நகர வாசிகள்?

ஆயினும் வால்மீகியார் இந்தச் சமயமும் தம் பாடலைக்கொண்டே அவர்களைத் திரும்பி வரப் பண்ணினார். அவர் அவ்வளவு உருக்கமாய் உள்ளம் கனியப்பாடி, அவர்களைப் பிழை பொறுக்கும்படி அவ்வளவு பரிதாபமாய் வேண்டிக்கொள்ளவும், அவர்கள் மனமிளகி, வால்மீகியாரின் வார்த்தைக்கிசைந்து நகரத்துக்குத் திரும்பி வந்தார்கள். வந்து அராஜகமான நாட்டில் வாழ்வது அயுக்தமென்று சொல்லி அவரையே தங்களுக்கு அரசனாயிருக்கும்படி பிரார்த்தித்தார்கள். வால்மீகியார் அதற்கு ஒப்பாதவராய், கள்வர் தலைவனாயிருந்த குகனை அந் நாட்டுக்கு அரசனாக முடிசூட்டினார். குகனுடைய ராஜ்ஜியத்திலே ஐக்கியப்பட்ட சமஸ்த மிலேச்சரும் யவனரும் வானரரும் ராக்ஷஸரும் ஒன்றுகூடிச் சுகமாய் வாழ்ந்து வந்தார்கள்; அவர்கள் கொள்ளைத் தொழிலின் பெயரைக்கூட எடுப்பதில்லை. பிறதேசங்களைக் கொள்ளையடிக்கச் செல்லும் இச்சையும் இவ்வாறே அவர்களுக்குள் ஒழிந்துபோயிற்று. ஆனால் பிறர் எவரேனும் தங்களைப் பிடிக்க வந்த காலத்து, தங்கள் பல பராக்கிரமங்களைக்

காட்டி அவர்களை முறியடித்தனர். ஆக, பூமியில் சாந்திமயமான ராஜ்ஜியமொன்று இவ்வாறு ஸ்தாபிதமாயிற்று. ஆனால் இந்த ராஜ்ஜியம் நிலைத்து நிற்குமா, இத்தனை கள்வர்களும் ஐக்கியமாய் இருப்பார்களா, என்ற விஷயத்திலே வால்மீகியாருக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. அவர் மாதந்தோறும் ஒவ்வொரு முறை குகனைப் பார்த்துவிட்டுப்போக வருவர். மற்றக்காலங்களிலே தம் மனோதர்மத்தின் பிரகாரம் வீணகானம் பண்ணிக் கொண்டு உலக முழுதும் சஞ்சாரம் செய்வர்.



## ஆறும் பாகம்

க

### பறக்கும் நகரம்

விசுவாமித்திரர் தமது நூதன சிருஷ்டியைத் தடுக்க வொண்ணாத பிரதாபத்தோடும் பராக்கிரமத்தோடும் தம் சொந்த சந்ததியைப் போலக் காப்பாற்றிவந்தார். ஜனங்களின் யோகக்ஷேமாபிவிருத்தியின்பொருட்டும், அவர்களுடைய வாழ்நாளை யாதொரு கஷ்டமுமின்றிப் பரம சுகமாய்க் கழிக்கும்படி செய்யும் பொருட்டும், அவர் தம் உயிரைக் கொடுத்தாவது பாடுபடப் பின்னிடையார். இவ்வளவும் செய்தும் அவற்றால் அவருக்குத் தம் அளவில் யாது பயன்? ஆனால் முதலிலெல்லாம் அவர் சிருஷ்டித் தொழிலின் உற்சாகத்திலே நெடுங்காலம் இருந்துவிட்டபடியால், தம் சொந்த விஷயத்தைப்பற்றி நினைப்பதற்கு அவருக்கு அவகாச மில்லாமலிருந்தது. அவர் தமது சிருஷ்டிக்குச் சுவயம் பிரபுவா யிருந்தார்.

எவ்விதமான மனித சகவாஸமு மில்லாமலும், தன் எண்ணங்களை மனம் விட்டுச் சொல்லிக்கொள்வதற்கு உற்ற நண்பன் ஒருவனுமில்லாமலும் இருக்கும் ஒரு சாதாரண மனிதன்

பைத்தியக்காரனைப்போல் ஆய்விடுகிருன். இந்த மகாபுருஷனும் பிரதான மகாராஜனு மாகிய விசுவாமித்திரர் தமது நூதன சிருஷ்டியிலே எல்லாவற்றிலும் உன்னதமான பதத்தில் ஏறியும் தாம் தன்னந்தனியராய் இருப்பதை உணரலாயினர். அவருக்கு எல்லாம் இருந்தது, ஆனல் சுகம் எங்கே? தம்மையே பற்றிய செய்தி என்ன ஆயிற்று?

அவர் தம் சிருஷ்டியிலுள்ள மனிதரோடு கூடி அளவளாவினர். ஆனல் அவர் தம் வாழ் நாளெல்லாம் பழகப்பெற்றவர்களும் அவருடைய சுக துக்கங்களை உணர்ந்தவர்களும் எங்கே? நூதன ஜகத்தின் ஜனங்கள் சுகமாய் வாழ்ந்து வந்தார்களென்பதில் சந்தேகமில்லை. ஆனல் விசுவாமித்திரரோ பூலோகத்து மனிதப்பிறவியாதலால், துக்கம் அனுபவிப்பதே அவருடைய தலைவிதியாய்விட்டது. அவருக்குத் துக்கம் உண்டானுலும் சித்தப்பிரமையுண்டானுலும் அவர் முகத்தைக் கண்ணெடுத்துப் பார்க்கும்படியான அவ்வளவு மனிதன் யார்? அவருக்குப் பலமான மனேவியாதி உண்டாகி விட்டது.

இப்படிச் சிலநாட்கள் சென்றன. கடைசியில், பழைய உலகத்திலிருந்து சில மனிதரைத் தம் புதிய உலகத்தில் கொண்டு வந்து வைத்துக்கொள்ளவேண்டுமென்று அவ

ருக்கு இச்சை உண்டாயிற்று. இந்த உத்தேசத்தோடு அவர் கான்யகுப்ஜ நகரத்தை அப்படியே பெயர்த்துக் கொண்டுவந்து தம் புதிய உலகத்தில் நிலைப்பிப்பதன் பொருட்டு ஒரு பிரம்மாண்டமான நகரத்தை நிர்மாணம் பண்ணினார். அவருடைய புதிய சிருஷ்டியிலே சத்துருபயம் இல்லாமையால், இந்த நகரத்திலே மதில் சுவர்களாவது அகழிகளாவது அமைக்கவில்லை. மனோகரமான மாளிகைகளாலும் அற்புதமான அரண்மனைகளாலும் நிறைந்து இப்புது நகரம் பொலிந்தது. அப்பொழுது விசுவாமித்திரர் பூமிக்கு வந்து சேர்ந்தார். கான்யகுப்ஜத்துக்குச் சென்று மந்திரியைக் கண்டு பேசி, தம் குடும்பத்தாரையும் போய்ப் பார்த்தார். பார்க்கவும், ஒருவன் அகண்ட பூமண்டலத்துக்கு ஈசுவரனாயிருந்தும் ஏகாகியாய் இருப்பானாகில், உற்றார் உறவினரோடு கூடிவாழும் ஒருவன் அனுபவிக்கிற அவ்வளவு சுகத்தை அவன் ஒருகாலும் அனுபவிக்க முடியாதென்று அவர் மனதில் பட்டது. இந்தப் பூமியிலேயே தங்கி நின்றுவிடலாமாவென்றும் ஒருகால் அவருக்கு எண்ணம் உண்டாயிற்று. பிறகு இந்தப் பூமியிலே தமக்குள்ள அதிகாரத்தையும் அந்தப் புதிய ஜகத்தில் தமக்கு உண்டாயிருக்கும் சக்தியையும் செல்வாக்கையும் சீர்தூக்கிப் பார்த்து, அதோடு

இவ்வுலகத்துப் பிராமணர்களுடைய செய்திகளும் நினைவுக்கு வர, அவற்றையும் ஆராய்ந்து பார்த்த அளவில், அவர் சுவஜன வர்க்கத்தோடு தமது புதிய ஜகத்துக்குச் செல்வதே உத்தமமெனக் கருதி அதற்கு ஆகவேண்டிய சன்னாகங்களைச் செய்தார்.

கான்யகுப்ஜ நகரம் அடங்கலும் ஆகாயத்தில் எழும்பிற்று. அது மெல்ல மெல்ல மேலே எழுந்து செல்லும் அற்புதக் காட்சியைப் பூலோகத்திலுள்ளவர் அடங்காத ஆச்சரியத்தோடு வந்து பார்த்தார்கள். பறந்து செல்லும் பட்டணத்துக்குள்ளிருந்து வரும் இனிய வாத்தியத் துவனிகள் விசும்பெங்கும் வியாபித்தன. அதிலுள்ளவர்களெல்லோரும் நர்த்தனம் செய்யத் தொடங்கினர். ஆனால் சிறிது தூரம் சென்ற அளவில் அவர்களுடைய சுகமெல்லாம் துக்கமாக மாறிவிட்டது. அவர்களுக்கு மூச்சுவிட முடியாமல் தொண்டை கட்டிப்போய்விட்டது. விசுவாமித்திரர் பூலோகத்தின் வாயுவை ஆகருஷிக்க முயன்றார்; ஆனால் அது வரவில்லை. விசுவாமித்திரர் மகத்தான சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டார். அவர் தாமொரு பூமிவாயுவைச் சிருஷ்டிக்க முயன்றார்; முடியவில்லை.

பிறகு பிரம்மாவை மனதில் தியானித்தார். பிரம்மா பிரத்தியக்ஷமான உடனே, அவரை

நோக்கி, "நீர் இன்னும் என்னுடன் வாது செய்யப் போகிறீரோ? நான் என் சுவஜனங் களோடு என் நூதன சிருஷ்டிக்குப் போக வேண்டும். நீர் ஏன் தடைசெய்கிறீர்?" என்றார்.

பிரம்மா கூறினர், "உமக்கு இருந்த தபோபலம் எல்லாம் நீர் செய்த சிருஷ்டியி லேயே க்ஷயமாய்விட்டது. இனி மேற் கொண்டு எதைச் செய்வதற்கும் உமக்கு இப்போது தவ வலிமை இல்லை. நூதனமாய் எதையும் செய்ய முயல்வீரேல், உம்முடைய சிருஷ்டி அழிந்துபோம். நான் சொல்வதைக் கேளும்; பேசாமே புத்தியோடு பிழையும்."

"பளா! பளா! அற்பப்பதரே! உனக்கு வாய் எவ்வளவு அகலமோ அவ்வளவு அதிகப் பிரசங்கமும் செய்து தீர்த்தாய்! எனக்கோ நீ புத்தியாய்ப்பிழை யென்று சொல்லவந்தாய்! இதோ பார், உன் கண்முன்னே என் பூமியி லிருந்தே காற்றைக் கொண்டுவந்து இவர்களை அழைத்துப் போகிறேன்," என்று சொல்லி விசுவாமித்திரர் வேகமாய்ப் பிரஸ்தானமானார்.

அப்பொழுது கான்யகுப்ஜ நகரம் விரைந்து வீழத் தொடங்கிற்று. அதன் வீழ்ச்சியினல் தம்முடைய சிருஷ்டிக்கே நாச முண்டாகும் என்று பிரம்மா கண்டு, தாமே

அந் நகரத்தை மெல்ல மெல்ல இறக்கி யதாஸ்தானத்தில் கொண்டு நிறுத்தினர். அதன் மேல் விசுவாமித்திரரின் அனுசரர் பிராமணருக்குக் கோரமான கொடுமைகளை இழைக்கத் தொடங்கினர்; ராக்ஷஸர்களோடு சேர்ந்து பல விதமான உபத்திரவங்களைச் செய்யத் தலைப்பட்டனர்.

உ

## புதிய சிருஷ்டியின் அழிவு

விசுவாமித்திரர் தம்முடைய சொந்த சிருஷ்டியிலிருந்து காற்றை அகன்ற வெறுவெளியின் வழியாய்ச் செலுத்திக்கொண்டு வரமுயன்றார்; முடியவில்லை. அப்பொழுது அவர் கோபாவேசம் கொண்டு மறுபடியும் பிரம்மாவை மனதில் நினைத்தார். பிரம்மா பிரத்தியக்ஷமாகவும், “வெறுவெளியின்வழியே என் காற்றைக் கொண்டு செல்வதற்கு மார்க்கம் ஏற்படுத்திக் கொடும்,” என்று கேட்டார் விசுவாமித்திரர்.

“அதற்கு வேண்டிய தபோபலம் உம்மிடத்தில் இல்லை. உமக்குத் தபோபலம் இல்லாதபோது, அதை உமக்கு அளிக்க எனக்கும் ஆற்றல் இல்லை,” என்றார் பிரம்மா.

கோபத்தினால் கண் கலங்கி விசுவாமித்திரர் பிரம்மாவைச் சிறையில் அடைக்கப் போனார். முடியவில்லை. அதன்மேல் ரௌத்

திராகாரமாய்ப் பொங்கி, கதையை எடுத்து, "பிரம்மாவின் சிருஷ்டியை அழித்துப்போடு கிறேன்," என்று ஆர்ப்பரித்தார். அதைக் கண்ட பிரம்மா, "அதோடு நிறுத்தும்: புதி தாய் எதையும் செய்யத் துணிந்தீராகில், உமது சிருஷ்டியே ஒழிந்துபோம்," என்றார்.

விசுவாமித்திரர் நிந்தை மொழிகளால் பிரம்மாவைத் தூற்றிவிட்டு, தம் கதையைத் தூக்கினார். அது அவர் கையினின்றும் விழுந்துவிட்டது. மறுபடியும் அதை மகா வேகமாய் எடுத்தார். அது விழுந்த அதிர்ச்சி யினால் தம்முடைய பூமியிலே பிளவுகளும் வெடிப்புகளும் உண்டாயிருக்கக் கண்டார். அவர் கதையைச் சுழற்றலானார். அவரது பூமி யின் மூட்டுகளெல்லாம் தளர்ந்து சிதறலாயின. பிரபமாண்டத்தின் நடு மையத்தில் குறி பார்த்து அடிக்கவேண்டுமென்பது அவர் கருத்து. ஆகவே அவர் அதிலே இலக்கு வைத்துக் கதையை வேகமாய்ச் சுழற்றினார். ஆனால் அவருடைய ஜகத்தின் கூறுகள் இன் னும் சிந்திச் சிதறலாயின. கதைச் சுழற்சி யின் வேகம் அதிகமாக ஆக, அவருடைய பிரம்மாண்ட சிருஷ்டி முழுதும் படிப்படியாய் முன்னைய நீகாரிகை நிலைக்கு வந்துவிட்டது. அவர் கதையை வீசி எறிந்தார். உடனே அவர் சேகரித்திருந்த நீகாரிகைக் கூட்ட மெல்

லாம் எந்தெந்த இடங்களிலிருந்து வந்திருந்தனவோ அந்த அந்த இடங்களுக்கு விரைந்து போய்விட்டன. நொடிப் பொழுதில் நூதன சிருஷ்டி யெல்லாம் கடல் நீரின் துளிபோல் மாயமாய் மறைந்து சூனியத்தில் கலந்துபோய் விட்டது. பூமியிலிருந்து ஆகாயத்தில் ஈசானிய மூலையில் நக்ஷத்திரக் கூட்டங்கள் நிறைந்து காணப்பட்ட பாகம் இப்பொழுது பழையபடி சூனியமயமாய்ப் போய்விட்டது. விசுவாமித்திரர் சிருஷ்டித்த பூமியின் நூதன மனிதர்கள் அனுபவித்த போக போக்கியங்களெல்லாம் இப்பொழுது அபாவ பதார்த்தங்களாயின. அந்த மனிதர்களெல்லாம் கூட மீண்டும் அவியக்தமான அணுக் கூட்டத்திற்போய்க் கலந்தனர். அந்த அழகிய குன்றுகளும் மலைகளும், மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் நிறைந்த சமஸ்த பூமியும் மீண்டும் ஆதிமூல அவியக்த வஸ்துராசி வடிவமாகப் பரிணமித்தன. எந்தச் சமாஜத்திலே கொடுமை இல்லையோ, உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வித்தியாசம் இல்லையோ, எதில் கேவலம் பிரேமையும் ஐக்கியமும் சமத்துவமுமே விளங்கினவோ, அந்த ஜன சமாஜமும் முடிவற்ற சூனியத்தின் கர்ப்பத்திலே மூழ்கிவிட்டது.

ரு

## விசுவாமித்திரரின் வீழ்ச்சி

இனி விசுவாமித்திரர்? அவர் கதையை வீசி எறிந்த உடனே மூர்ச்சை யடைந்தார். எந்த இடத்திலே? அவருக்காக ஓர் இடமும் இருந்ததோ? அகன்ற நிறை சூனியத்தினகத்தே அவர் பிரஞ்ஞை தப்பி விழுந்து கிடந்தார். அது வரையில் அவரது சொந்த பூமியின் ஆகருஷண சக்தி அவரை இழுத்துப் பிடித்து வைத்திருந்தது. ஆனல் இப்பொழுது நம்முடைய பூமி அவரது குற்றுயிராயிருந்த பிரம்மாண்டமான தேகபிண்டத்தை ஆகருஷிக்கலாயிற்று. அவர் சுழன்று, சுழன்று, சுழன்று விழலாயினர். பிரம்மா விசுவாமித்திரரிடத்தில் மிக்க அன்பு வைத்திருந்தபடியால், பலமுறை திரஸ்காரத்தோடு நடத்தப்பட்ட போதிலும், அடிக்கடி அவரிடம் சென்றது மல்லாமல், அவரைப் பிராமணராக்கப் பலகாலும் பிரயத்தனப்பட்டு மிருந்தார். இப்பொழுது விசுவாமித்திரர் மூச்சுவிடக் காற்று இல்லாவிட்டால் சீக்கிரம் செத்துவிடுவார் என்று கண்டு, பிரம்மா பூமியிலிருந்து காற்றைத் தாமே ஆகருஷித்து அதை அவர் முன் நிறுத்தினர். விசுவாமித்திரருக்கு உயிர் நீங்கவில்லையாயினும், அவர் சுழன்று, சுழன்று, சுழன்று சூனிய மார்க்கத்தில் பிரஞ்ஞையற்று

விழுந்துகொண்டே வந்தார். வாயிலிருந்து ரத்தம் கொட்டத் தொடங்கிற்று. அவர் இன்னும் தாழத் தாழ விழுந்தவண்ணமாகவே இருந்தார். இவ்வாறு எவ்வளவு காலம் வரையில் அந்த வீழ்ச்சி நிகழ்ந்ததோ, யாரே சொல்ல வல்லார்?



## ஏழாம் பாகம்

### க

### யாகம்

இன்று மண்ணுலகத்துக்கு மகாபிரளய காலம் கிட்டிவிட்டது போலத் தோற்றுகிறது. இன்று தப்பிப் பிழைத்தால், அப்பொழுதுதான் மனிதரென்னும் பிராணிகள் இப்புவியில் நிலைக்கலாகும். இன்றைய ஆபத்துக்குத் தப்பினால், அப்பொழுதுதான் பிராமணாதி ஜாதிகள் இவ் உலகத்தில் வாழ இடமுண்டு. இன்று க்ஷேமம் உண்டானால்தான், சிருஷ்டிக்கே க்ஷேமம் உண்டாகும்.

இன்று கௌசாம்பியின் வேந்தன் யாகம் செய்யப்போகிறான். அதற்கு மண்ணிலும் விண்ணிலும் மண் விண் இரண்டிலும் வாழும் ஜீவகோடிகள் அனைவரும் அழைக்கப்பட்டிருக்கிறார்கள். இந்த யாகம் இப்பொழுது தொடங்கி ஒரு வருஷத்துக்குள் பூர்த்தியாக வேண்டியது. கௌசாம்பி நகரைச் சூழ்ந்துள்ள விசாலமான பிரதேசங்களிலெல்லாம் ஜனங்கள் திரள் திரளாய் வந்து கூடியிருக்கிறார்கள். ஆனால் ஒருவருக்காவது மனதில் சமாதானமில்லை. இந்த அகாதமான ஜன சமுத்திரத்திலே எப்புறமும் பகையும் வைரமும் குமுறிக்

கொண்டிருத்தலால், சொற்பகாரணத்தை முன்னிட்டும் எந்த வேளையிலாகிலும் கோரமான பிரளயம் ஏதாவது நேரிடக்கூடியதே. சற்றைக்கெல்லாம் அப்படியே நிகழவும் செய்தது.

கௌசாம்பி வேந்தன் சூரிய வமிசத்தில் உதித்தவனாய், பிராமணபக்ஷபாதியா யிருந்தான். அவன் வஸிஷ்ட முனிவரைத் தனக்குப் புரோகிதராக யாகத்தைச் செய்விக்க நியோகித்துக்கொண்டான். அதை அறிந்து விசுவாமித்திரர் கக்ஷியாரும் பரசுராமர் கக்ஷியாரும் வெகுண்டனர். விசுவாமித்திரருடைய மந்திரி காதூஷணரையும் வாலியையும் தனக்குத் துணைவராகச் சேர்த்துக்கொண்டான். அன்றியும், அவன் வெகு காலமாக எண்ணிறந்த பலபராக்கிரமசாலிகளான கள்வர்தலைவர்களைப் பொருள் கொடுத்து வசமாக்கி வைத்திருந்தான். அவர்கள் இப்பொழுது அவனோடு வந்துசேர்ந்தார்கள். வஸிஷ்ட முனிவரின் பக்ஷத்தைச் சேர்ந்த பிராமணர்களும், அயோத்தி, மிதிலை மன்னர்களும் யாகத்தை இடையூறின்றி முற்றுவிக்கும் பொருட்டுக் கச்சை கட்டி நின்றார்கள். வஸிஷ்டரை ஆசிரயித்திருந்த் பவனரும் ஹூணரும் அவரைக் காக்கும்பொருட்டு ஆயுதபாணிகளாய் யஜ்ஞபூமியில் வந்து நின்றார்கள். சாந்திகுலவும் ராஜ்ஜியத்தின் அதிபதியாகிய

குகனும் தன் பரிவார சகிதமாய் அங்கே வந்து சேர்ந்தான். அவனுடைய நோக்கம் முதலில் இரு கக்ஷியாரையும் இணங்கச்செய்ய முயல்வது, அது சாத்தியமில்லையேல் சண்டையை யாவது நிறுத்துவது. இவ்விரண்டில் எதுவும் முடியாவிட்டால், அநியாயக் கக்ஷியை எதிர்த்து யுத்தஞ் செய்வதென்று அவன் தீர்மானித்துவிட்டிருந்தான்.

இனி வால்மீகியாரோ? அவர் அழுது அழுது எல்லோர் கையையும் பிடித்துக் கொண்டு திரிவாராயினர். ஆனால் ஒருவரும் அவரைப் பொருள் படுத்தவில்லை. வால்மீகியாரின் அழுகையைக் கண்டு கல்மனமும் உருகும். ஆனால் ராஜநீதி விற்பன்னரென்று சொல்லிக்கொள்கிறவர்களும், உயர்ந்த ஜாதியில் பிறந்து நாகரிகத்தில் முதிர்ந்தவர்களென்று பெருமை பேசுகின்றவர்களும், தங்கள் அதிகாரத்தை நிலைநிறுத்தும் பொருட்டுத் தங்கள் செல்வ மனையாட்டிகளையும் மக்களையும் கூடப் பலிகொடுக்கக் கூசாதவர்களுமான மகானுபாவர்களின் மனம் கல்லினும் கடினமான பொருளைக் கொண்டன்றோ உண்டாக்கப்பட்டிருக்கிறது! மனிதரின் உயிர்களைச் செண்டாடுகிறவர்களும், தங்கள் அற்பக் கோரிக்கைகளைச் சாதிக்கவேண்டி லக்ஷோபலக்ஷம் ஜீவர்களைப் படாத பாடு படுத்துவதற்கும், அதுவே யன்றி

அவர்களின் உயிரை வாங்குவதற்கும் கூட எள்ளளவும் கூசாதவர்களுமான கிராதர்களின் உள்ளங்கள் அழுகையினுலும் புலம்பலினுலும் கரையுங்கொலோ? கரைந்தாலும் கரையாவிட்டாலும், வால்மீகியாரின் மனம் கலங்கித் தத்தளித்தது. அவர் ஒருகால் வஸிஷ்டரிடம் செல்வார், ஒருகால் காதூஷணரிடம் சென்று அவர்கள் காங்களைப் புல்லுவார். அங்குள்ள சேனுவீராரும் கூடியிருந்த ஜனங்களும் அவருடைய அழுகையால் மனங் கசிந்தார்கள். ஆனுல் பெரியமனிதர்களாகிய ராஜதந்திரிகள் தயாதாக்ஷிணியம் சிறிதுமற்றவர்களாய், அவரைக் கண்ணெடுத்துப் பார்க்கத்தானும் மனமற்றவர்களாய் இருந்தார்கள்.

கடைசியில் வஸிஷ்டர் வேள்வித் தீயை வளர்க்கும்படி ஆஞ்ஞாபிக்கவும், புரோகிதர் யஜ்ஞ வேதிகையின்மேல் ஏறினர். வால்மீகியாரின் ஆசைகள் அடியோடழிந்தன. அவர் அழுதுகொண்டே குகன் எதிரில் தரையில் விழுந்து புரண்டார். குகன் அவரைத் தேற்றலானுன். வேள்வித் தீ மூட்டப்படுமாகில், உடனே ரத்தம் பொழியத் தொடங்குமென்று எல்லோரும் அறிந்திருந்தனர். பிராமணர் வேதிகையின்மேல் ஏறிவிட்டார்களென்று தெரிந்தவுடனே, விரோதகக்ஷியார் ஆயுதபாணிகளாய் வேதிகையின் அருகில்வந்து

நின்றனர். அவர்களை எதிர்த்து ஓட்ட யஜ்ஞக் கக்ஷியார் மறுபக்கத்தில் நின்றார்கள். நேர் எதிரில் நின்றான் குகன், அவசியமானால் அவர் களுக்கிடையில் மத்தியஸ்தம் செய்துவிடலா மென்னும் நோக்கத்துடன். வால்மீகியார் வேதியின்மேல் ஏறி பிராமணர் கையிலிருந்து அக்கினியைப் பறித்துக்கொண்டு, தாமும் அவ் வேதியின் நடுவிலுள்ள பள்ளத்தில் உட்கார்ந்து கொண்டார். பிராமணர் அவரைப் பிடித்து இழுத்து வேதிக்குப் புறமே தள்ளினர். மீண் டும் அங்கே அவரை வரவொட்டாதபடி கையுங் காலும் கட்டிப்போட முந்நூறு புரோகிதர்கள் தயாராயிருந்தார்கள். அதன்மேல் ஒரு பெருங் குழப்பம் உண்டாயிற்று. பிராமணர் திரும்ப வும் அக்கினியை மூட்ட ஆரம்பித்தனர்; அதற் குள், ஹா இது என்ன ஆச்சரியம்! அகஸ்மாத் தாக எங்கிருந்து இந் நீர்த் துளிகள் பிராமண ரின் தேகத்தின்மேல் வந்து விழுந்தன? ஆகா யத்திலோ மேகமில்லை; இல்லாதிருந்தும் நீர் விழுந்ததே! அந்த நீர் அவசியம் அசுத்த மாகவே இருக்கவேண்டுமென்று பிராமணர் சித்தாந்தம்செய்து, தாங்கள் அசுசி யாய்விட்ட தாக எண்ணிக்கொண்டு, ஸ்நானம்செய்து சுசி யாகும் பொருட்டுப் பிரஸ்தானமாயினர். நேரிடு வதாயிருந்த மகாபிரளயம் கொஞ்சநேரத் துக்குத் தடைப்பட்டது. எல்லோருடைய

மனதிலும் ஏதோ ஒருவிதமான அச்சமும் திகைப்பும் குடிகொண்டது. சீக்கிரத்தில் ஏதோ ஒரு கோரமான யுத்தம் நடக்க இருக்கிறதென்று எல்லோருக்கும் தோற்றியது.

உ

## மெய்ம்மறந்த சிந்தனைகள்

விசுவாமித்திரர் சுழன்று சுழன்று கீழே விழுந்துகொண்டிருந்தார். இந்த நிலையிலே அவருக்குப் பிரம்மா படிப்படியாய்ப் புலனுணர்ச்சி உண்டாகும்படி செய்தார். அவருக்குத் தன்னுணர்வு வந்ததும், அவர் மனதில் உண்டான சிந்தனைகளைக் கேவலம் மனிதன் எப்படி அறிந்து சொல்லமுடியும்? "நான் எங்கே இருக்கிறேன்?" என்று அவர் நினைந்து கண்ணைத் திறக்க முயன்றார்; திறந்து பார்த்தவுடனே, மறுபடியும் கண்ணை மூடிக்கொள்ளவும், உணர்வு நீங்கியது. மறுபடியும் உணர்வு உண்டாகி மறுபடியும் நீங்கியது. அவருக்கு இந்திரிய அறிவு இன்னொருமுறை திரும்பி வந்து மீண்டும் அகன்றது. "நான் எங்கே போகிறேன்?" என்று ஒருகால் நினைத்தார். நரகத்துக்குச் சமீபமாய்ச் செல்வதாக ஒருகால் அவர் மனதில் தோற்றியது. உடனே பீதியடைந்து உணர்வற்றவராயினர். "என்னுடைய சிருஷ்டி இப்போது எங்கே?" என்று ஒருகால் யோசித்தார். மறுபடியும் உணர்வு நீங்கியது.

"அது ஒழிந்துபோய்விட்டது," என்று மறுபடியும் நினைத்து, "ஆனால் நான் பூமியிலேயே தங்கியிருந்தாலோ!" என்று யோசித்தார். மறுபடியும் உணர்வு அழிந்தது. "நான் ஏன் அவ்வளவு துராசைகொண்டேன்?—ஏன் பெருமை அடைய அபிலாஷை கொண்டேன்? — ஏன் தவம் செய்யப் போனேன்? — ஐயோ! ஏன் எல்லாவற்றையும் இழந்தேன்? — இப்போ எங்கே போகிறேனோ தெரியவில்லையே! — திரும்பிப் போகவும் சக்தியில்லையே! — கண்ணைத் திறந்து பார்க்கவும் கூடவில்லையே!"

இப்படிப் பாவித்துப் பாவித்து விசுவாமித்திரர் அழலாயினர். அப்போது அவர் கன்னத்தில் வேகமாய்ப் பெருகிய விழிநீர்த் தாரைதான் பிராமணரின் தேகத்தில் விழுந்தது. அழுது அழுது அவருடைய தேகம் இன்னும் மெலிந்தது. மறுபடியும் அவருக்கு உணர்வு அழிய, ரிபுகணங்கள் சகோதரத்துவ சங்கீதம் பாடுவதுபோலவும், "மனிதரே மனிதரை அடக்கி ஒடுக்க முயலாதிருக்கும் பக்ஷத்தில், எவ்வளவோ காலத்துக்கு முன்னமே எல்லோரும் சகோதரபாவத்தோடு வாழ்ந்திருப்பார்களே! அரசன் தன் கடமையைச் செய்திருப்பானேயாகில், எத்தனையோ நாளைக்கு முந்தியே எல்லோரும் சகோதரராய்ப் போயிருப்பார்களே," என்று அவர்கள் உப

தேச சங்கீர்த்தனம் செய்வது தன் காதில் விழுவது போலவும் அவருக்குத் தோன்றிற்று. இப்படி அவர் தம் மனதினுள்ளே அந்தப் பாட்டை உற்றுக்கேட்டபொழுது, இனித் துராசைக்குத் தம் மனதில் இடம் கொடுப்பதில்லையென்று உள்ளுக்குள்ளேயே பிரதிக்கினை செய்துகொண்டார். அந்தச் சமயத்தில் அவருக்கு உணர்வு உண்டாயிற்று. உணர்வு பெற்றுக் கண்விழித்தலும், இனிப் பரஹிதம் செய்வதற்கே தேகத்தைச் சமர்ப்பிப்பேன் என்று பிரதிக்கினை செய்தார். மறுபடியும் உணர்வழிந்து சுழன்று சுழன்று கீழ்நோக்கி வீழலாயினர்.

ரு

## வால்மீகியின் வெற்றி

பிராமணர் ஸ்நானம்செய்து யாகசாலைக்குத் திரும்பிவந்ததும், அக்கினியை வளர்ப்பதற்காக ஏற்படுத்தியிருந்த குண்டத்தை நோக்கிப் பூதாகாரமான மனித உருவம்போன்றதொரு பதார்த்தம் மேலே யிருந்து விழுவதைப் பார்த்தார்கள். எல்லோரும் அந்தத் திக்கில் உற்று நோக்கலாயினர். பயத்தினால் எல்லோருடைய நெஞ்சும் உலர்ந்தது. அந்த அற்புதமான தோற்றத்தைக் கண்டு அனைவரும் பயப்பிராந்தியடைந்து, பேசவும் நா எழாமல் திகைத்து நின்றார்கள். வால்மீகியாரைப் போகவிடாமல்

பிணித்துவைத்திருந்தவர்கள் அவரை விட்டு விட்டார்கள். விட்டுவிடவும் வால்மீகியார் யாக குண்டத்துக்கு அபிமுகமாய் ஓடிச்சென்று, அதில் ஒரு பிரம்மாண்டமான மனித உருவம் விழுந்திருப்பதைக் கண்டார். அவர் குண்டத்தில் குற்றுயிராய் விழுந்திருக்கும் தேகபிண்டம் விசுவாமித்திரரென்று திவ்விய சக்தியினால் உணர்ந்தார்; அப்பொழுது அவர் அழுத அழுகைக்கு அளவேயில்லை, அவருடைய வீணையும் அதிகருண சுவரத்தில் பிரலாபித்தது. விழிநீர்கள் தாரைதாரையாய்ப் பொழிந்து அவரது மார்பை நனைக்கலாயின. அவர் பாடினார்:

ராரா நனுகிட ராஜீவநயனு என்ற மெட்டு.

பல்லவி

பாருங்கள், பாருங்கள், பதர்களா! நீங்கள்
வீரனாகிய இந்த விசுவாமித்திரனை. (பாரு)

சரணங்கள்

அவனியை வெறுத்தொரு புவனம் படைத்தான்,
இவனைப்போல் தீரரும் இனியும் வேறுளரோ? (பா)

வேதாவின் பதத்திற்கும் மேலாக இருந்த
காதிமைந்தனுடைய கதியைத்தான் இன்று (பாரு)

அற்புத மகாவீரன், அருந்தவ முனிவன்,
துர்க்கதி அடைந்ததைத் துரிதமாய் வந்து (பாரு)

நிலையற்ற சுகங்களை நீங்களும் நம்பி
அலைகின்றீர் வெறிகொண்டே, அற்பமானிடரே! ()

விசுவாமித்திரனது விசித்திரப் படைப்பும்
வீழ்ந்ததே இன்றோடு சூழ்ந்த விதியால்! (பாரு)

பிரம்மத்துவம் என்னும் பெரும்பதவியும்
கருமபலத்தினல் காணமல் போச்சே! (பாரு)

பேரும் புகழுடன் பெருந்தவப் பயனும்
ஆரும் அறிவதற்கும் அடையாளம் இல்லையே! (பாரு)

என்ன வருத்தத்தை அன்னவன் அடைந்தான்!
பின்னை உங்களுக்கிந்தப் போராட்டம்வீணே? (பாரு)

ஆருத துயரத்தால் அழுகின்றார் பிரம்மா,
அருந்தவ வசிட்டரும் உறுகின்றார் விசனம்! (பாரு)

சண்டையை விட்டினி சாந்தமாயிருங்கள்,
கண்டுகொள்வீர் வாழ்வு கனவென்று நன்றாய்!

பாருங்கள், பாருங்கள், பதர்களா, நீங்கள்!

அதாவது, "பாருங்களடா, அற்பப் பதர்களே! கீழ்மக்களே! பாருங்களடா, இந்த விசுவாமித்திரன் — மற்றோர் உலகத்தைப் படைக்கத் துணிந்த விசுவாமித்திரன்—பிரம்ம பதத்துக்கும் உயர்வான பதவியை அடைந்த விசுவாமித்திரன் — நியதியின் சக்தியினல் இந்த விசுவாமித்திரன் என்ன கதியை அடைந்தான் பார்த்தீர்களா? அத்தகைய மகாவீரன்— அத்தகைய பெருந் தபோதனன்—அத்தகைய அற்புத புருஷன்—அவனுக்கு எவ்வளவு பரிதவிக்கத்தக்க துர்க்கதி நேர்ந்துவிட்டது பார்த்தீர்களா? நீங்களும் உங்கள் அற்பமான சுகதுக்

கங்களே பெரிதென்று மயங்கி வெறிகொண்டு அலேகிறீர்களே! பாருங்கள், விசுவாமித்திரனுடைய சிருஷ்டி இன்றோடு துவம்சமாய் விட்டது—அவனுடைய பிரம்மத்துவமென்னும் உயர்பதவியும் போய்விட்டது—அவனுக்குக் கிடைத்திருந்த மனுஷியத்துவமென்னும் பெரும்பேறும் இன்றோடு ஒழிந்துபோம் போலும்—அவன் உயிரோடு வாழ்ந்திருந்த வாழ்வின் அடையாளம்கூட இப்பொழுது இல்லாமற் போய்விட்டதே! அவனுக்கு இப்பொழுது என்ன மனோவேதனை உண்டாயிருக்கும், பாவித்துப் பாருங்கள்! விசுவாமித்திரனுடைய கதியே இப்படி முடியுமானல், உங்களுடைய நிலைமை என்ன? உங்கள் கதி எப்படியாகும்? யோசித்துப் பாருங்கள். இதோ பாருங்கள், பிரம்மா இன்று விசுவாமித்திரனுக்காக ஆற்ற முடியாத துயரத்துடன் அழுகிருர். விசுவாமித்திரனல் அவ்வளவு அவமானமுற்ற அந்த வஸிஷ்டரும் இன்று அவனுக்காக ஆகுலமுற்று அழுகின்ருர். ஆகையால் உங்கள் சண்டை சச்சரவுகளை இன்றுடன் விட்டொழிந்து சாந்தமாயிருங்கள். இவ்வுலக வாழ்க்கை சொற்ப நாள் வாழ்வுதானே!"

வால்மீகியாரின் சோகரஸம் நிறைந்த வீணுகானத்தை எல்லோரும் மௌனமாய்க் கேட்டார்கள். எல்லோரது மனமும் உருகியது.

எல்லோர் மனத்திலும் பச்சாத்தாபம் உண்டா யிற்று. எல்லோரும் அழுது அழுது அங்க லாய்த்தார்கள். அஸ்திர சஸ்திரங்களையும் அவற்றோடு சண்டை சச்சரவுகளையும் அகற்றி யெறிந்தார்கள். படிப்படியாய் அவர்களுடைய மனங்கள் மாறிச் சரியான நிலைவரத்துக்கு வந்தன.

இது நிற்க, இங்கே விசுவாமித்திரருக்குச் சிறிது சிறிதாய் உணர்வு உண்டாகலாயிற்று. வீணையின் ஜங்காரநாதம் தூரத்திலிருந்து வரும் பாட்டொலிபோல் அவர் காதில் விழுந் தது. அவர் மூர்ச்சையடைந்து பயங்கரமான கனவுகள் கண்டுகொண்டிருந்தார். கொஞ்சம் கொஞ்சமாய் அவரது சரீரம் குளிர்ந்துவந்தது. வெகுநேரம் கழித்துக் கண் விழித்துப் பார்த் தார். வால்மீகியாரின் கானம் நடந்து கொண்டேயிருந்தது. கானத்தின் மிருதுவான கடிந்துரைகளும், கயைகூரும்படி இரக்கும் தீன மொழிகளும் விசுவாமித்திரர் நெஞ்சை அம்பு போல் துளைக்கலாயின. அவர் கண் திறந்து பார்த்த அளவில், எதிரில் பிரம்மா எழுந்தருளி யிருப்பதைக் கண்டார். அங்கே கூடியிருந்த ஜனத்திரளின் முன்னரும் பிரம்மதேவனது திருவுருவமும் அவருடன் கூட வந்திருந்த தேவரிஷி பிரம்மரிஷிகளின் வடிவங்களும் கிரமக்கிரமமாய்த் தோன்றலாயின. விழிநேர்க

ளால் உடம்பெல்லாம் நனைய, விசுவாமித்திரர் கைகளைக் கூப்பிக்கொண்டு அழுது அழுது, தன்னை க்ஷமிக்கும்படி பிரம்மாவை இறைஞ்சினார். உடனே பிரம்மா அவரைத் தம் கைகளால் வாரியெடுத்து, உச்சிமோந்து, உவகையுடன் தழுவி, திருவாய் மலர்ந்து, "குழந்தாய், இன்று நீ பிராமணன் ஆகிவிட்டாய்," என்று அருளிச்செய்தார். விசுவாமித்திரர் மீளவும் கண்ணீர் சொரிந்து அவருடைய திருவடிகளிலே விழுந்தார். வால்மீகியாரின் கானம் நடந்துகொண்டேயிருந்தது.

பிரம்மதேவன் காட்டிய கருணையினாலே பரவசமாகி விசுவாமித்திரர் கேட்டார், "எம்பெருமானே, நான் இப்பொழுது எங்கே இருக்கிறேன்?"

பிரம்மா சொன்னார், "பூமியிலே இருக்கிறாய். உன்னுடைய துன்பங்களை யெல்லாம் உடனே தீர்த்துவிடுகிறேன்."

இவ்வாறு சொல்லிப் பிரம்மதேவன் தமது கமண்டலுவிலிருக்கும் திவ்விய தீர்த்தத்தை விசுவாமித்திரரின் மேலே புரோக்ஷிக்க, அவர் அதனால் புதிய பலம் பெற்று எழுந்து பார்க்கையில், உலகமெல்லாம் அழுதுகொண்டிருப்பதையும், தூரத்தில் ஒருவன் பாடிக்கொண்டிருப்பதையும் கண்டார்.

வஸிஷ்டர் விரைந்து வந்து விசுவாமித்திரரைத் தழுவிக்கொண்டார். இன்று விசுவாமித்திருக்கு உற்ற கஷ்டகாலத்தைக் கருதி அவருடைய மனதில் கருணை ததும்பியது. விசுவாமித்திரர் பிராமணனாகவேண்டி முயற்சி செய்த காலத்திலே அவரை எதிர்க்கும்படி செய்த எண்ணங்கள் இப்பொழுது வஸிஷ்டரிடம் எள்ளளவும் இல்லை. அந்த எண்ணங்களெல்லாம் இருந்த இடம் தெரியாமல் பறந்து போயின. கடினமாயிருந்த தெல்லாம் கரைந்து கோமளமாய்விட்டது. அவர் தமது கரத்தினாலேயே உபவீதத்தை எடுத்து மந்திரம் ஓதி விசுவாமித்திரரின் தோளிலே சாத்தி, அவரை நோக்கி, "தம்பீ, இன்று நீயும் நானும் ஒன்றாய் விட்டோம். இன்று நீயும் பிராமணனாய்விட்டாய். வா, இருவரும் தழுவிக்கொள்வோம்," என்றார். எனவும் விசுவாமித்திரர், "மகரிஷியே, நான் செளபாக்கிய மதத்தால் செருக்குற்று அறியாமல் தேவரீருக்கு அனேக தீங்குகள் செய்தேன், கஷ்டத்தைக் கொடுத்தேன், கடுமையான வார்த்தைகளைச் சொன்னேன்; இன்று என்னுடைய துக்கத்தைக் கண்டு தேவரீர் ஆற்றாது கண்ணீர் விட்டீர்; நானோ—பாவியேன்—ஒருநாளும் உம்முடைய துக்கங்களைக் குறித்து அழுதேனில்லை; இன்று உம்முடைய கருணையைக் கண்ட பிறகே என்

கண்களிலிருந்து முதன் முதல் நீர் வருகிறது; பிராமணர் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணரென்பதை இன்றுதான் அறிந்தேன்," என்று உருக்கமாய்க் கூறி, பிரம்மதேவனைப் பார்த்து, "எம்பெருமானே! நீர் அகிலாண்ட கோடிகளையும் படைத்த சிருஷ்டிகர்த்தா; உம்மிடத்தில் எத்தனை பழி மொழிகள் கூறிப் பாதகம் செய்தேன்! விலங்கு இட்டுச் சிறையில் வைக்கவும் கருதினேனே! நீரோ இன்று என்னுடைய ஆபத்துக் காலத்திலே உயிரை அளித்துக் காப்பாற்றியருளினீர்; உம்முடைய கருணை கரையற்றதன்றோ!" என்று விண்ணப்பம் செய்தார். அதைக் கேட்டுப் பிரம்மா, "குழந்தாய், உன்னைப் போன்ற மகாபுருஷனை நான் க்ஷமிக்காவிட்டால், சிருஷ்டிகர்த்தாவுக்குள்ள க்ஷமைக் குணம் வீணேயன்றோ?" என்று அருளிச் செய்தார்.

வஸிஷ்ட விசுவாமித்திரர்களின் அன்னியோன்னியபாவத்தைக் கண்டு மற்ற எல்லாப் பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் தம் தம் போர்க்கோலங்களைக் களைந்தெறிந்துவிட்டு, ஒருவரையொருவர் தழுவிக்கொண்டார்கள். எல்லோரும் தங்களுடைய அந்தரங்கமான தீய எண்ணங்களை வெளிப்படையாய்க் கூறி க்ஷமிக்கும்படி ஒருவரையொருவர் கேட்டுக்கொண்

டார்கள். குகனும் தான் பயங்கரமாய் முடியுமோ என்று ஆசங்கைகொண்டிருந்த க்காலமானது இப்படி மங்களகரமாய்ப் பரிணமித்ததைக் கண்டு ஆனந்தக்கூத் தாடினான்.

யாகத்தின் பரிணாமம் இப்படியானதைக் கண்டு முதலில் கௌசாம்பி வேந்தன் அதிக துக்கமடைந்தான்; ஆனால் பின்னர் நடந்ததையெல்லாம் கண்டு அவனும் ஆனந்தபரிதனாகி, யாகார்த்தம் தான் சேகரித்திருந்த அளவற்ற சாமக்கிரிகளை யெல்லாம் விசுவாமித்திரரின் உபநயனத்தை முன்னிட்டு வாரி வாரித் தானமாய் வழங்கலானான்.

வால்மீகியாரோ,

"உடல்குழைய, என்பெலாம் நெக்குருக, விழிநீர்கள்
ஊற்றென வெதும்பி ஊற்ற,
ஊசி காந்தத்தினைக் கண்டணுகல் போலவே
ஓர் உறவும் உன்னி உன்னி,
படபடென நெஞ்சம் பதைத்து உள் நடுக்குற,"

'சகோதர, சகோதர' என்று ஸௌப்ராத்ர சங்கீர்த்தனம் பாடி ஆடிக் குதித்து,

"பனிமதிமுகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பி ஆர்த்தார்த் தெழுந்து,
மடல் அவிழும் மலரனைய கைவிரித்துக் கூப்பி,"

தம் சமீபத்தில் இருந்தவர்களை யெல்லாம், தீண்டுவார், தீண்டாதார், பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், மிலேச்சர், யவனர், ராக்ஷஸர்,

வானரர் என்னும் பேதம் பாராட்டாமல், எல்லோரையும் 'கடல் மடை திறந்தனைய' அன்போடு மார்புறத் தழுவிக்கொண்டார். அவர் இவ்வாறு ஆடியாடிப் பாடிப் பாடிக்கொண்டே வந்து கடைசியில் பிரம்மாவையும் கட்டிக்கொண்டார். கட்டிக்கொண்டதும் அவர் பிரம்மா என்று அறிந்து அச்சத்தினுல் சிறிது கூச்சமுற்று விலகிக்கொள்ளப்போகும் சமயத்தில், பிரம்மாவே அவரை மீளவும் தழுவிக்கொண்டு, "வால்மீகியே, இன்று வெற்றியெல்லாம் உன்னுடையதே," என்ருர். அப்பொழுது வஸிஷ்டரும் தூரத்தினின்று வந்து அவரைக் காடாலிங்கனம் செய்துகொண்டு, "வால்மீகியே, உம்முடையதே இன்று வெற்றியெல்லாம்," என்ருர். விசுவாமித்திரரும் அவரைத் தழுவிக்கொண்டு, "இன்று ஜயமெல்லாம் உம்முடையதே," என்று கூறினுர். நாலு திசைகளிலிருந்தும், "ஜயம்! வால்மீகிக்கு ஜயம்!" என்று வெற்றியொலி எழுந்தது. குகனுடைய பரிவாரங்களும் உரத்த குரலெடுத்து, "ஜயம்! வால்மீகிக்கு ஜயம்!" என்று ஆரவாரித்தார்கள். எல்லாத் திசைகளினின்றும், "ஜயம்! வால்மீகிக்கு ஜயம்!" என்று பிரதித்துவனி எழுந்தது.

இதற்குள் இரவு சமீபிக்கவும், எல்லோரும் நீர் தோய்ந்த கண்களோடு தம்தம் வீடு

களுக்குப் புறப்பட்டுச் சென்றார்கள். இனி அராஜகம் முடிந்துவிட்டதென்று எல்லோர் மனதிலும் நம்பிக்கை உண்டாயிற்று. விசுவாமித்திரர் பிராமணரான வுடனே தமது ராஜ்ஜியத்தைவிட்டு நீங்கவும், அவருடைய பின்னுரிமைக்காரர்கள் கான்யகுப்ஜ ராஜ்ஜியத்தைக் கைப்பற்றிக்கொண்டார்கள்.

பிரம்மா புறப்பட்டுப் போகும் சமயத்தில் ரிஷிகள் மூவரையும் நோக்கி, "சாக்ஷாத் பகவான் நாராயணனே சமஸ்த ஜனங்களுக்குள்ளும் ஐக்கியஸ்தாபனம் செய்யும் பொருட்டு அவதரிக்கப்போகிறார்; நீங்கள் அதற்காகவேண்டிய காரியக்கிரமங்களை ஒழுங்குபடுத்தி வையுங்கோள்," என்று சொல்லிப் போனார். விசுவாமித்திரரும் வால்மீகியாரும் வஸிஷ்டபகவானுடன் அவருடைய ஆசிரமத்துக்குச் சென்று அவ் விஷயத்தைக்குறித்து ஆலோசிக்கலானார்கள்.



## எட்டாம் பாகம்

### க

### ராமாயண கற்பனை

ஸ்ரீராமாவதாரத்துக்கு அறுபதினாயிரம் ஆண்டுகளுக்குமுன் வஸிஷ்டர், விசுவாமித்திரர், வால்மீகியார் என்னும் முனிவர் மூவரும் ஒன்றாய் உட்கார்ந்து, ஸ்ரீராமன் உலகத்தில் தோன்றி என்னென்ன காரியங்களைச் செய்ய வேண்டும் என்பதைப்பற்றி யோசிக்கலாயினர். அவர்கள் யோசிப்பதற்காக எடுத்துக்கொண்ட விஷயம் ராமாயண ரசனைத்திறத்தை நிர்ணயிப்பது மாத்திரமேயன்றி, உலகத்திலுள்ள சகல ஜாதியாருக்குள்ளும் சகோதரபாவத்தை ஸ்தாபனம் செய்வதைப்பற்றியதுமாய் இருந்தது. விசுவாமித்திரர் பலவகைப்பட்ட சுகதுக்கங்களையும் அனுபவித்த பிறகு, மானுஷ சக்தியின் சிறுமையை நன்கு உணர்ந்தவரானார். ஆனால் அவருடைய இருதயத்திலே ரிபுக்கள் பாய்ச்சிய புதிய மின்சார சக்தியிலிருந்து சகோதரபாவத்தை ஸ்தாபிக்கவேண்டும் என்னும் யாதொரு பேராவல் உண்டாயிருந்ததோ, அது எப்பொழுதும் போலவே இன்றும் தீவிரமாகவே இருந்தது. கௌசாம்பி யாகசாலையிலே நிகழ்ந்த வியாபாரத்திலிருந்து புத்தி

பலத்தினாலேயே, மனிதவர்க்கத்தின் விஷயம் அப்படியிருக்கட்டும், இரண்டு மனிதர்களுக் குள்தானும் ஐக்கியத்தை உண்டாக்குவது அசாத்தியமென்பது வஸிஷ்டருக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கி விட்டது. கௌசாம்பியில் வால்மீகியாருக்கு உண்டான வெற்றியிலிருந்து, அன்புநிறைந்த இருதயமே ஐக்கியத்தை ஸ்தாபிக்கவல்ல அமோகமான சாதனமென்று அவ்விருவரும் உணர்ந்தார்கள். அன்றியும் இந்த ஐக்கிய பந்தனத்தைச் சாதிப்பதிலே வால்மீகியாரைத் தவிர்த்து வேறெவரும் சித்திபெறமாட்டார்க ளென்பதையும் அவர்கள் அறிந்துகொண்டார் கள். ஆகையால் இவ் விஷயத்திலே தங்கள் உடல்பொருள் ஆவிகளையெல்லாம் சமர்ப்பித்து வால்மீகியாருக்கு உதவிபுரிவதே தங்களுக்கு உத்தம புருஷார்த்தமென்று அவர்கள் உறுதி கொண்டார்கள். இவ்வாறு வால்மீகியாரின் இருதயம், வஸிஷ்டரின் ஞானம், விசுவாமித் திரரின் அரசநீதியறிவு, இவை மூன்றும் ஒருங்குசேர்ந்து ஜகத்தில் ஐக்கியத்தையும் சகோதரபாவத்தையும் நிலைப்பிக்க நியோகிக் கப்பட்டன.

அவர்கள் இவ் விஷயத்தை ஆரத் தீர ஆராய்ந்து யோசித்த அளவிலே, பிராமணரும் க்ஷத்திரியரும் ஒன்று சேர்ந்துவிட்ட போதி

னும், வஸிஷ்டருக்கும் விசுவாமித்திருக்கும் மித்திரபாவம் உண்டாய்விட்டபோதிலும், விசுவாமித்திரர் பிராமணத்துவம் அடைந்துவிட்டபடியினாலே இனி இந்த உபயஜாதிகளுக்குமிடையிலே விரோதமுண்டாவதற்கு இடமில்லாமற்போனபோதிலும், அனேகருடைய மனம் இந்தப் பழைய சம்பவங்களை நினைந்து இன்னும் கொதித்துக்கொண்டே இருக்குமென்று அவர்களுக்குத் தோற்றியது. வெளிப்படையாய் யுத்தம் நடவாவிட்டாலும், உண்மையான இருதய - ஐக்கியம் உண்டாவது சாத்தியமில்லாதிருக்கலாம். ஆகையால் ஸ்ரீராமபிரான் அவதரித்த உடனே முதலில் இவ் இரண்டு ஜாதிகளையும் ஒருமைப்படுத்தவேண்டுமென்று ஸ்திரம் செய்யப்பட்டது. அவர் அயோத்திமாநகரத்திலே ஜனனமாகி, மிதிலை மன்னனுடைய மகளை மணம் செய்துகொண்டு, குகனோடு நட்புக்கொண்டு, பரசுராமனைச் சங்கரிக்க வேண்டுமென்று பிரஸ்தாவிக்கப்பட்டபொழுது, வால்மீகியார் சங்காரத்தொழிலை அடியோடெதிர்த்து ஆக்ஷேபிக்க, ஸ்ரீராமபிரான் பரசுராமனைக் கர்வபங்கம் மாத்திரம் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அவர் இவ்வாறு ஆரியர்களை ஒருமைப்படுத்தி, பிறகு அனாரியர்களை ஒன்றுசேர்க்கப் போகவேண்டும். வானரர்களுக்குள்ளே தர்மசீலர்க

ளோடு சேர்ந்துகொண்டு, அதர்மமான நெறியில் நடப்பவர்களை அவர் வதம் செய்யவேண்டும். மீளவும் வால்மீகியார் அவ்வளவு ஜீவஹிம்ஸை கூடாதென்று மறுத்துரைக்கவே, வாலியை மாத்திரம் வதம் செய்யவேண்டுமென்று உறுதி செய்யப்பட்டது. பிறகு ஸ்ரீ ராமபிரான் கொடுமை செய்யும் ராக்ஷஸர்களைக் கொன்று தார்மிகனான விபீஷணனுக்கு முடிசூட்ட வேண்டுமென்று சொல்லப்பட்டது. அத்தனை ராக்ஷஸர்களை மடிப்பது கூடாதென்று வால்மீகியார் ஆக்ஷேபித்தார். ஆனால் அந்த ஆக்ஷேபம் அங்கீகரிக்கப்படவில்லை; ஏனெனில் ராக்ஷஸர்களெல்லாம் மிக்க கொடியவர்கள், அவர்களை நல்வழியில் திருப்புவதும் சாத்திய மில்லை. பிறகு ஸ்ரீராமபிரான் தமது தம்பியருள் இருவரின் உதவியைக்கொண்டு மிலேச்ச ஹூணாதி ராஜ்ஜியங்களிலும் சாந்திஸ்தாபனம் பண்ணிவிட்டு வைகுண்டத்துக்கு எழுந்தருளவேண்டும். இவ்வாறு நிர்ணயம்செய்து, இந்தச் சமஸ்த விருத்தாந்தங்களையும் அடக்கி நவரஸங்களோடும் கூடிய ஒரு பெருங்காவியத்தை இயற்றும் பாரம் வால்மீகியாரின் மேல் சுமத்தப்பட்டது.

அப்படிச் சுமத்தும்பொழுது, வஸிஷ்டர் வால்மீகியாரை நோக்கி, "ஸ்ரீராமபிரானைத் தர்மசீலர்களுக்குள் சூடாமணியாக வர்ணிக்கவேண்

டும், அவரது சீலத்தில் பாபமென்பது லவலேச மும் இருத்தல் கூடாது," என்றார்.

அதன்மேல் விசுவாமித்திரர், "அது மட்டிலும் இருந்தால் போதாது; ஸ்ரீராமன் க்ஷத்திரியனாகவும் இருக்கவேண்டும்; அன்றியும், அவருடைய வீரமும் அரசநீதி யுணர்ச்சியும் நன்கு விளங்கும் பொருட்டு அவர் சக்ரவர்த்தியாகவும் இருத்தல்வேண்டும்," என்றார்.

அதற்கு உத்தரமாக வால்மீகியார், "மகரிஷிகளின் ஆஞ்ஞையை அடியேன் சிரஸா வகிக்கிறேன்; ஆனால் அடியேன் ஸ்ரீராமனை வெறும் வீரனாகவும் செய்யமாட்டேன், வெறும் ராஜநீதிக்ஞனாகவும் செய்யமாட்டேன்; சாக்ஷாத் பகவான் நாராயணனே அவனியில் அவதரிக்கப்போகிறார்; அவர் சமஸ்த உத்தம லக்ஷணங்களும் குணங்களும் பொருந்திய ஆதர்ச மனுஷியனா யிருக்கவேண்டும்; அவருடைய சரித்திர வர்ணனை செய்யும் கிரமத்திலே நான் ஆதர்ச புருஷனையும், ஆதர்ச ரமணியையும், ஆதர்ச தம்பதிகளையும், ஆதர்சப் பிராதாவையும், ஆதர்ச குடும்பத்தையும், ஆதர்ச மித்திரனையும், ஆதர்ச சத்துருவையும், ஆதர்ச சேவகனையும், ஆதர்ச அரசனையும், ஆதர்ச அரசியலையும் வர்ணித்துக் காட்டுவேன்; தேவரீர்களது ஆசீர்வாத அனுக்கிரகங்களைப் பெற்று அடியேன் இயற்றப்போகும் காவியத்திலே

அத்தகைய ஒரு மனுஷிய சரித்திரச் சித்திரம் தீட்டி, அதிலிருந்து சர்வ தேசங்களிலும், சர்வ ஜாதிகளிலும், சர்வ காலங்களிலும் உள்ள மக்கள் அகமகிழ்ச்சியும் அறிவுணர்ச்சியும் அடையுமாறு செய்வேன்," என்றார்.

வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் ஏகமுகமாய், "ததாஸ்து! உம்முடைய ஸ்ரீராமன் நீடூழிகாலம் நரஜாதிக்கு ஆதர்ச சுவரூபமாக நிலவுக!" என்று மங்களாசாஸனம் செய்தருளினர்.

இவ்வாறு மகரிஷிகளின் மங்களாசாஸனத்தைப் பெற்று வால்மீகியார் தமது அசாதாரணமான பிரதிபைத் திறத்தினால் ஸ்ரீமத் ராமாயணத்தை இயற்றி வஸிஷ்ட விசுவாமித்திரர்களின் முன்னிலையிலே ஓதிக்காட்டினார். அவர்களும், "வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த" அவ் வான்மீகியாரின் "தீங்கவி"களைச் "செவிகளாரப் பருகி," ஆதி கவியை வாயார வாழ்த்திப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

உ

## எம்பெருமான் திருவவதாரம்

சகல ஜீவகோடிகளையும் படைத்துப் பரிபாலிக்கும் சோதிச்சுடர்ப் பிழம்பாகிய எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன் அவனியிலே

சக்ரவர்த்தி திருமகனாய் ஸ்ரீராமனென்னும் திருநாமமுடையவராய் அவதரித்தார். வஸிஷ்டர், விசுவாமித்திரர், வால்மீகி என்னும் மகரிஷிகள் மூவரால் நிர்ணயிக்கப்பட்ட நியமத்தை அனுசரித்து, அவர் துஷ்ட நிக்கிரகமும் சிஷ்டபரிபாலனமும் செய்து பிருதிவி முழுதிலும் தர்மத்தையும் சாந்தியையும் ஸ்தாபித்தருளினர். அவரது காதல் நிழலின்கீழ் பூமியானது நீர்வளம் நிலவளம் பொருந்தி தனதானிய சம்பத்துடன் பொலிந்தது. நிர்ஜனமான காடுகளெல்லாம் செல்வம் நிறைந்த நகரங்களாய் மாறின. நதிகளெல்லாம் வர்த்தகக் கப்பல்களாலும் உல்லாஸப் படகுகளாலும் கவியப் பட்டிருந்தன. ஜனங்களின் சுக சௌக்கியங்கள் தினே தினே வளர்ந்துவந்தன. கள்வர், வழிப்பறிக்காரர் என்ற பெயர்களே அருகிவிட்டன. மகாமாரி, கொள்ளைநோய், அகாலமரணம் முதலியவைகளின் நினைவுகூட ஜனங்களுக்கு அற்றுப்போய்விட்டது. நிருத்தியம், வாத்தியம் முதலிய கலைகளின் பரிசீலனத்தால் பிரஜைகள் விரைவில் மனத்தேர்ச்சி அடையலாயினர். நானாவகைச் சிற்பத்தொழில்களும் உன்னதி அடையலாயின. எந்தத் திக்கில் கண்ணைச் செலுத்தினாலும், மேகத்தைப் பிளந்து கொண்டு செல்லும் மாளிகைகளின் சிகரங்களில் சூரிய கிரணங்கள் பிரதிபலிப்பதைக்

காணலாம். எந்தத் திசையில் சென்றாலும் காதுக்கினிய கீதத்துவனியும் வாத்திய ஒலியும் கர்ணகோசரமாகும். எவ்விடங்களிலும் நறுமணம் வீசும் ஜாதி, சம்பகம், மல்லிகை, முல்லை, இருவாட்சி, மகிழம், குருவகம் முதலிய புஷ்பச் செடிகள் நிறைந்த உத்தியான வரிசைகளும், இந்தீவரம், கோகநதம், வெண்டாமரை, குமுதம், செங்கழுநீர் முதலிய மலர்களின் பரிமளம் நிறைந்த வாவிகளும் கிராணேந்திரியங்களைக் களிப்பித்தன. புஷ்கலமாய்ப் பெய்த பருவ மழைகளால் பரம தரித்திரர்கள் கூடக் கஷ்டமாவது துக்கமாவது அனுபவியாமலிருந்தார்கள். ஜன சங்கியையும் எங்கும் பெருகி வந்தது. வஸிஷ்டர் செய்வித்த கல்விப்பயிற்சி ஜனங்களின் மனத்தை விரிந்தோங்கச் செய்தது. விசுவாமித்திரரின் ராஜநீதி சாதுர்யமும், அவர் ஒழுங்காய் அமைத்த சட்டதிட்டங்களும் நாட்டில் விவாதங்களையும் கலகங்களையும் தலைநீட்ட வொட்டாமற் செய்தன. வால்மீகியின் ஆனந்தத்துக்கோ கங்கு கரை யில்லை. அவருடைய வீணைக்கும் ஓய்ச்சல் ஒழிவு இல்லை. அவர் பூமண்டலம் எங்கும் பிரதக்ஷிணம் செய்துவந்தார். அவருடைய வீணையின் ஜங்கார ஒலிகளைத் தூரத்திலிருந்து கேட்கும்போதெல்லாம் நகரவாசிகள் திரள் திரளாய்ச் சேர்ந்து அந்த ஒலி வரும் வழியை நோக்கி நடந்து செல்வார்

கள். அவருடைய கானத்தின் சுவரமும் கருத்தும் முறை முறையாய்த் தீவிர, தீவிரதர, தீவிரதமமாய் எழுந்து பொலிந்தது. எங்கும் ஒரே ஸ்வரம் நிறைந்து,

"சோதரரே, எம் சோதரரே, நாம்
சோதரரே யாம் சகலரும் என்றும்,"

என்று முழங்கியது.

ஆனால் இன்னும் வால்மீகியாரின் மனதுக்கு நிர்விசாரமாயிருக்க முடியவில்லை. பூமியில் சாந்தியும் ஐக்கியமும் ஸ்தாபிக்கப்பட்டது உண்மையே யானாலும், யதார்த்தமான சகோதரபாவம் ஜனங்களுக்குள் வளர்ந்திருக்கிறதா என்பதில் அவருக்குக் கனத்த சந்தேகம் உண்டாயிருந்தது.

௫

## ஸ்ரீமத் ராமாயண கானம்

இவ்வாறு சுகமாயும் சந்தோஷமாயும் நாட்கள் கழிந்தன. ஆண்டுக்குப் பின் ஆண்டாய் இவ்வாறு பதினாறாயிரம் ஆண்டுகள் சென்றன. ஸ்ரீராமன் வைகுண்டத்துக்குத் திரும்பிப் போகவேண்டிய காலம் சமீபித்துவிட்டது. லக்ஷ்மணனை வர்ஜ்ஜனம் செய்தபிறகு, சோகத்தினாலும் சந்தாபத்தினாலும் ஸ்ரீராமன் சாயு நதியில் குதித்துவிடுகிறதென்று சங்கற்பித்துக்

கொண்டு, அவ் ஆற்றங்கரையில் ஒரு பெரிய சபை கூட்டினார். பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், நிஷாதர், சண்டாலர், ராக்ஷஸர், வானரர் முதலிய எல்லோராலும் சபை நிறைந்திருந்தது. வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் இன்று ஸ்ரீமத் ராமாயணத்தை அரங்கேற்றுமாறு வால்மீகியாரைப் பிரார்த்தித்தார்கள். அப்பொழுது வால்மீகியார் தம்மால் நன்கு பயிற்றப்பட்ட குசன், லவன் என்னும் சிஷியர் சகிதமாய், தமது வீணையின் உருக்கமான இசைக்கு ஒத்துக் கானம் செய்யலானார்.

வால்மீகியார் வீணை வாசிக்கக் குச லவர் பாடினார்கள். சபையோரெல்லாம் மெய்ம் மறந்து கானரஸத்தில் ஈடுபடலாயினர்; கானத்தின் சோக கருணா ரஸங்களில் அழுது, ஹர்ஷ ரஸத்தில் ஆனந்தித்தார்கள். பூர்வ சரித்திரங்கள் ஞாபகத்துக்கு வரவே, ஸ்ரீராமபிரானும் சில சமயங்களில் ஆனந்தத்தால் உள்ளம் பூரித்து, சில சமயங்களில் துக்கித்து, சில சமயங்களில் அகமுருகிக் கண்ணீரருவி சொரிந்தார். மீண்டும் பழைய உணர்ச்சிகள் புனர் ஜன்மமெடுத்து அவரைச் சோகமோஹங்களில் அழுத்தின. வால்மீகியாரது அற்புத காவிய சக்தியின் வாசாமகோசாமான வைபவத்தைக் கண்டு வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் பிரமித்துப் பரவசமாயினர்.

இந்தச் சமயத்திலே திடீரென்று வானத்தில் சாயாபதம் இரண்டாய்ப் பிளந்து, வால்மீகியாரின் சிரஸிலே புஷ்பவர்ஷம் ஓயாமற் பொழிந்தது. எல்லோரும் உயர நோக்கிப் பார்க்கையில், ரிபுக்கள் ராமாயண கானத்தைக் குசலவர்களின் குரலுக்கு ஒத்து ஒரே ஸ்வரத்திலும் இசையிலும் பாடிக்கொண்டு இறங்கிவருவதைக் கண்டார்கள். அவர்கள் அணுகி வர வர, அவர்களுடைய ஸ்வரமும் கானமும் மேன்மேலும் மதுரித்து எழுந்தன. பிரஜாசமூகம் ரிபுக்களின் அந்தத் தேவகானத்தைக் கேட்டுக் கள்ளுண்டதுபோல் வெறிகொண்டது. வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் என்றைக்காவது ஒரு நாள் ரிபுக்களுடன் கலந்து சமஸ்வரமாய்க் கானம் பண்ணவேண்டுமென்று முன் ஒருகால் ஆசை கொண்டனரல்லவா? அந்த ஆசை இன்று ஈடேறி, அவர்களின் இருதயங்களில் உண்டான ஆனந்த பரவசத்தினல் ராமாயண கானம கடல் மடை திறந்தாற்போல் அவர்களின் தொண்டைகளிலிருந்து வெள்ளமிட்டு எழுந்தது. ரிபுக்களும் ரிஷிகளும் சாதாரண மனிதரும் அன்பின் மேலீட்டினல் கைகளை உயரத் தூக்கி ஒன்றாய்ப் பாடினர். ஸ்ரீராமபிரானும் அங்கம் புளகிப்ப, அன்பினல் உருகி, அவசமாகி, அவர்களோடு கலந்து, ஆடிப் பாடி ஆனந்தக் கூத்தாடினர். அந்தச் சமயத்தில்

பிரம்மதேவன் வந்து சேரா திருந்தால், இந்த ஆனந்தக்கூத்துக்கு அந்தமே இருந்திராது போலும்.

ச

## திருநாட்டுக்கு எழுந்தருளல்

பிரம்மா எழுந்தருளிய வுடனே, அவருக்கும் இந்த ஆனந்தக்கூத்தில் கலந்து ஆடவும் பாடவும் வேண்டுமென்று இச்சை உண்டாயிற்று. நரரூபதாரியாகிய நாராயணனுக்கே உண்டான மனோவிகாரம் அவரைச்சஞ்சலப் படுத்தியதும் ஓர் ஆச்சரியமோ? ஆனல் அவர் அந்தச் சாஞ்சல்லியத்தை அரிதில் அடக்கிக்கொண்டு ஸ்ரீராமனை வைகுண்டத்துக்கு எழுந்தருள வேண்டிய விஷயமாய் ஞாபகப்படுத்தவும், ஸ்ரீராமசந்திரன் பிரஜைகளினிடத்தும் விடை பெற்றுக்கொண்டு சரயுஜலத்தில் இறங்கி, பூத உடம்பை நீத்தார். அவரது தம்பிமார்களும் அவ்வண்ணமே தேகத்தியாகம்செய்து பூர்ணப் பிரம்மத்திற்போய்க் கலந்தனர். ஜனங்களுக்குள் வயோதிகரா யிருந்தவர்களும் அவர்களோடு சென்று ரிபுக்களின் தொகையைப் பெருக்கினர்கள். ரிபுக்களும் மிக்க அன்புடன் இந்த நூதன ரிபுக்களை வரவேற்று, தழுவிக்கொண்டு, முன் ஒருகால் முனிவர் மூவரின் மனதில் மின்சாரம்போல் பாய்ந்த அதே சகோதரத்துவ கீதத்தை அகங்குழைந்து அன்பு ததும்பப் பாடினர்கள்.

௫
## சப்த ரிஷிகள்

பிரம்மா வஸிஷ்டரை நோக்கிப் பார்த்திவ தேகத்தை எறிந்துவிட்டுச் சப்தரிஷி மண்டலத்திலே ஸ்தானம் வகிக்குமாறு நியமிக்க, அவ்வாறே வஸிஷ்டர் சாயுநதியிலே பூதவுடம்பு நீங்கிச் சோதியுடம்பு தாங்கி, தினந்தோறும் ஜகத்தின் காரிய பரியாலோசனையின் பொருட்டு வானத்தில் உதயமாகலானார்.

௬
## விசுவாமித்திரர்

விசுவாமித்திரரும் தம் அநித்தியமான தேகத்தைத் துறந்து ரிபுகணங்களின் பிரதான நாயகர்களுள் ஒருவரானார். மண்ணுலக சாம்ராஜ்ஜியம் சாரமற்றதென்றும், ஹ்ருதயோந்நதியே சத்கதியடைவதற்கு உத்தமசாதனமென்றும் அவருக்கு இப்பொழுது ஞானோதயம் உண்டாயிற்று.

௭
## சுவர்க்கத்தை மறுத்தல்

பிரம்மா வால்மீகியாரைச் சுவர்க்கத்துக்கு ஆரோகணம் செய்யும்படி அருளிச்செய்த பொழுது, வால்மீகியார் கண்ணீர் அருவிசோர, பிரம்மதேவனது திருவடிகளில் அடியற்றமரம் போல் விழுந்து, "பரமேஷ்டி, நான் மகாபாபி, மிகக் கொடிய நராதமன்; நான் தேவரீருடைய

திருவுள்ளப்படி நடக்க முடியாதவனு யிருக்கிறேன்; நான் செய்த சகல பாபங்களுக்கும், எம்பெருமானே, இன்னும் பிராயச்சித்தம் பூர்த்தியாகவில்லை; நான் பாபச்சேற்றில் அழுந்தியிருக்கிறேன்; கருணைக்கடலே, நான் சுவர்க்கத்துக்குப்போய் என்செய்கிறது? பதித பாவனு, நான் மனிதருக்கு எவ்வளவு அபகாரம் செய்திருக்கிறேன்! எல்லா மனிதர்களுக்கும் சமான சுகம் உண்டாகும்படி செய்கிற வரையிலே, என் பாபங்களுக்குப் பிராயச்சித்தம் எப்படி முடிவுபெறும்? என் ஐயனே, மனிதர்களுக்கு இன்னும் அகங்காரம் போகவில்லை. இன்னமும நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் பண்டிதன், நான் பணக்காரன் என்ற அகங்காரமும், இவன் மூர்க்கன், இவன் ஏழை என்ற பேதபுத்தியும் இருந்துகொண்டேயிருக்கின்றன; எம்பெருமானே, அப்படியிருக்க அவர்களுக்குச் சுகமுண்டென்று எப்படிச் சொல்லலாம்? இந்த அகங்காரம் எப்பொழுது ஒழிகிறதோ, இந்தப் பேதபுத்தி எப்பொழுது போகிறதோ, அப்பொழுது சமஸ்த பூமியும் அப்படியே சுவர்க்கத்துக்குப் போகும்; அப்பொழுது நானும், ஓ கிருபாநிதி, தேவரீருடைய திருவுள்ளத்தின்படியே நடப்பேன்; இந்தச் சமயத்துக்கு என்னை க்ஷமித்தருளும், தயாநிதி," என்ருர்.

இவ்வாறு சொல்லி வால்மீகியார் விம்மி விம்மி அழலாயினர். அதைக் கண்டு பிரம்மாவின் மனம் இளகியது. அந்தச் சமயத்தில் ரிபுக்கள் வானத்திலிருந்து வால்மீகியாரின் சிரஸில் புஷ்பமாரி ஓயாமல் பொழியலானார்கள்.

## அ

## விசுவரூப தரிசனம்

அப்பொழுது பிரம்மா கூறினர், "ககனமண்டலத்தில் கண்ணைச் செலுத்திப்பார்!"

பார்த்தார் வால்மீகியார்.

[1]ஸவித்ருமண்டலமத்யவர்த்தியாய், [2]ஸாஸிஜாஸந—ஸந்நிவிஷ்டராய், [3]கேயூரவானாய், [4]மகாகுண்டலவானாய், [5]கிரீடியாய், [6]ஹாரியாய், [7]ஹிரண்மயவபுவாய், சங்க சக்ரதாரியாய்ப் பகவான் முராரி தேஜோமயமாய் விளங்குவதைக் கண்டார். பயபக்தியோடு வால்மீகியார் அத்தேஜோரூபத்தை நோக்கிய வண்ணமாகவே இருந்தார். அவர் அவ்வாறு நோக்கிக்கொண்டிருக்கையிலேயே, நாராயணன் விராட் ஸ்வரூபமெடுத்து விளங்கினர். அனந்தமான தோள்

---

1. சூரியமண்டலத்தின் நடுவில் இருப்பவர். 2. பத்மாஸனத்தில் வீற்றிருப்பவர். 3. தோளணியணிந்தவர். 4. மகாகுண்டல மணிந்தவர். 5. கிரீட மணிந்தவர். 6. ஹாரம் அல்லது மாலையணிந்தவர். 7. பொன்னர் மேனியர்.

களோடும், அனந்த வயிறுகளோடும், அநேக முகங்களோடும், எண்ணிறந்த நேத்திரங்களோடும், கோரமான பல்வரிசையோடும் கூடிய அனந்த ரூபாத்மகமான விசுவரூபத்தைத் தரிசித்தார் வால்மீகியார். அந்த ரூபத்துக்கு ஆதியும் இல்லை, மத்தியுமில்லை, அந்தமுமில்லை. சந்திரனும் சூரியனும் அவருக்கு நேத்திரங்களாயினர். சுடர்வீசும் அக்கினி அவர் திருவாயிலே திகழ்ந்தது. அவரது திருமேனியின் திவ்வியப் பிரபையால் திக்குத் திகந்தங்களெல்லாம் பிரகாசித்தன. இவ்வாறு ஸ்ரீமந் நாராயணன் பூமிக்கும் வானத்துக்கும் இடையிலுள்ள அந்தரிக்ஷமெல்லாம் நிறைந்தார். தேவ தானவ யக்ஷ ராக்ஷஸர்களும், பிரம்மாதி சகல தேவர்களும், சகல மனிதர்களும், சகல ஜீவ ஜந்துக்களும் அந்த விராட் ஸ்வரூபத்தின் வாயில் நுழைந்தனர். அந்த ஸ்வரூபத்தின் ஒவ்வொரு மயிர்க்காலிலும் கோடிகோடி பிரம்மாண்டங்கள் நிலைபெற்றிருந்தன. அந்த விராட் ரூபத்தின் முன்னிலையிலே மனிதன் சூனிய பதார்த்தமாகவும், தேவர்கள்கூடப் புழுக்களாகவும் வால்மீகியாருக்குத் தோற்றினர். அத்தகைய விசுவரூபத்தைத் தரிசித்து வால்மீகியார், இரண்டு கைகளையும் சிரசின்மேலே குவித்து, இரண்டு கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் சொரிய, திருமேனியெங்கும் மயிர்

பொடிப்ப, அக்கினியில் அகப்பட்ட மெழுகு போல மனம் மிக உருகி இவக, நாத் தழும்ப,

நம: புரஸ்தாத் அத்ஹ ப்ருஷ்ட்ஹதஸ் தே!
நமோ'ஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ!
அநந்தவீர்யாமிதவிக்ரமஸ் த்வம்!
ஸர்வம் ஸமாப்னோஷி ததோ'ஸி ஸர்வ:! *

என்று ஸ்தோத்திரம் செய்தார்.

அப்பொழுது பிரம்மா வால்மீகியாரை நோக்கி, "வால்மீகி, பார்த்தனையா, எல்லா மனிதரும் சமானரே, எல்லோரும் சகோதரரே, எல்லோரும் ஒன்றே; நீ பூமண்டலமெங்கும் சென்று இந்தச் சமத்துவத்தை, இந்தச் சகோதரத்துவத்தை, இந்த ஏகத்துவத்தை உனது கானத்தினால் பிரசடனம் பண்ணுவாய்; நீ அமரனாய்விட்டாய்; உன்னுடையதே ஜயம்," என்று கூறினார்.

விராட் புருஷனுடைய அகன்ற திருவாயினின்றும் ககனத்தைப் பேதிக்கத்தக்க கம்பீரமான சத்தப்பொலிவோடு எழுந்தது, "ஜயம்" என்னும் எதிரொலி.

வால்மீகி விஜயம்

முற்றிற்று

---

* முன்னே நம! பிறகு மொய்த்தே நம! உனக்கு இங்கு
என்னேரம் சூழ்ந்து நம! எல்லாமாம்—மன்னேதான்
வீயாத வீரியம்சேர் விக்கிரம! மிக்கு எல்லாம்
நீ ஆதலால், எல்லாம் நீ!

பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர்

"வங்கதரிசனம்" என்னும்

வங்காளி மாஸிக பத்திரிகையில் எழுதிய

## மதிப்புரை

"வங்கதரிசன"த்திலே ஒருமுறை பிரசுரிக்கப் படுகின்ற விஷயங்கள் மறுபடியும் புஸ்தகரூபமாய்ப் பதிப்பிக்கப்பட்டால், அந் நூல்களை "வங்கதரிசன"த்திலே விமரிசனம் செய்யும் வழக்கமில்லை. ஆனால் "வால்மீகிர் ஜய்" என்னும் இந் நூலின் ஒரு பாகம் "வங்கதரிசன"த்திலே பிரசுரம் செய்யப்பட்டிருந்ததெனினும், எஞ்சிய பெரும்பாகம் இந்த மாஸிகையிலே வெளியாகவில்லை. இதில் பிரசுரமாயிருந்த அம்சம்கூட இந் நூலில் விசேஷமாய் மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே நாம் இப்பொழுது விமர்சிக்கவேண்டிய நூல் "வங்கதரிசன"த்திலே ஏற்கெனவே வெளிப்பட்டதொன்றென ஒப்புவதற்கில்லை. ஆகையால் படிப்போர் அனுமதிக்க மறுக்கமாட்டார்களென்று நம்பிக்கையோடு இம் மதிப்புரை தீட்டத் துணிந்தோம். பத்திராசிரியரின் அனுமதியை ஏற்கெனவே பெற்றுக்கொண்டிருக்கிறோம்.

மதிப்புரை எழுத ஆரம்பித்து, இந் நூல் எவ் வகையைச் சேர்ந்ததென்று சொல்லமுடியா திருத்தலைக் குறித்து விசனிக்கின்றோம். இது செய்யுளில் அமைந்தில்லை; ஆகையால் மதிப் புரைகாரர் இதைக் காவிய மென்று ஒப்பார். இது நாடகமில்லையென்று உறுதியாய்ச் சொல் வோம், ஏனெனில் இது சம்பாஷணை ரூபமாக இயன்றிருக்கவில்லை. இதை 'நாவல்' என்றும் வகுப்பதற்கில்லை; ஏனெனில் இதில் தலைமகன் இல்லை, தலைவி இல்லை, காதல் இல்லை, 'கோர்ட் ஷிப்' (பூர்வ சல்லாபம்) இல்லை, விவாகம் இல்லை, களவு இல்லை, அடிதடி இல்லை, கொலை இல்லை. இதில் வஸிஷ்ட விசுவாமித்திரர்களின் விருத் தாந்தம் இருக்கிறது, ஆனால் இது புராண மில்லை. திக்விஜய விருத்தாந்தம் இருக்கிறது, ஆனால் இது இதிகாசமன்று. ஒருவகை சிருஷ் டிக்கிரம வர்ணனையும் உண்டு, ஆயினும் இது விஞ்ஞான நூல் அன்று. நக்ஷத்திர நீகாரிகை களின் செய்தி காணப்படுகின்றது, ஆயினும் இது வான நூலில்லை. மனிதரைப் பசுவாக்கும் பிரசங்கம் வருகிறது, எனினும் இது *Origin of Species* * அன்று. ஹரப்பிரஸாத சாஸ்திரிகள் நிச்சயமாகவே ஒரு 'கிம்பூத கிமாகார' பதார்த் தத்தைச் சிருஷ்டித்திருக்கிறார்.

---

* ஜீவராசிகளில் ஜாதிப்பாகுபாடு எவ்விதம் ஜனிக்கி றது என்பதை ஆராய்ந்து டார்வின் என்ற ஆங்கிலப் பண் டிதன் எழுதிய நூல்.

நல்லது, நூலின் ஜாதி நிர்ணயம் செய்ய முடியாமற்போயிற்று; ஒருவாறு அதன் சொரூப விசாரமாவது செய்ய முயல்வோம். நூலாசிரியரே தலைப்புப் பக்கத்தில் அதை ஒரு வகைக் குறிப்பால் காட்ட முயன்றிருக்கிறார்: நூலின் உபநாமமாக ஆங்கிலத்தில், *The Three Forces—Physical, Intellectual and Moral,* * என்று சேர்த்திருக்கிறார். இங்கிலீஷ் பாஷையின் மேலே ஆணையிட்டுக் கேட்கிறோம், இந்த வார்த்தைகளால் ஏதேனும் விளங்குகிறதா? *Force* என்னவோ ஒன்றும் தெரியவில்லை: நமக்குக் காணப்படுவன வஸிஷ்டர், விசுவாமித்திரர், வால்மீகி என்னும் மூன்று விராட் மூர்த்திகளே, மூன்று வலிய உருவங்களே! இந்த மூன்றும்தான் எங்கள் *Forces* என்று சொல்வீராயின், உம்முடைய *Force* களைக் கங்காஜலத்தில் கொண்டுபோய் எறியும், நாம் இந்தத் திரிமூர்த்தியையே உபாசனை செய்வோமென்று உத்தரம் சொல்வோம். உங்கள் மானுஷ தேவதைகளையும் பார்க்க எங்கள் துர்க்காதேவி எவ்வளவோ உத்தமமென்போம்; துர்க்காதேவியை உருவாய் அமைக்கமுடியும், ஆகவே பூஜை செய்யவும் முடியும். மானுஷ தேவதை எங்கே?

---

* மூன்று சக்திகள்—ஜடசக்தி, சித்சக்தி, தார்மிக சக்தி.

நெடுநாளாக நாட்டிலே விவகாரத்தில் இருந்து வருகிறது—எது தான் இல்லை?—மூன்று forces — physical, intellectual, moral என்று. திரிகுணங்கள்—சத்துவம், ரஜஸ், தமஸ்; அல்லது தமஸ், ரஜஸ், சத்துவம் என்னும் விவகாரமும் வெகுகாலமாக உண்டாயிருக்கிறது. காலக்கிரமத்தில் இம் முக்குணங்களும் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்னும் மும்மூர்த்திகளாகப் பரிணமித்தன. ஆனால் இம் முப்மூர்த்திகளால் இனிக் காரியம் நடவாது—இவர்கள் கேவலம் தேவதைகளாய்விட்டனர். அவர்களில் இருவர் கோயில்களில் உட்கார்ந்து கொண்டு அரிசி, தேங்காய், வாழைப்பழம், பாக்கு வெற்றிலை, கற்பூரம், சாம்பிராணிகளின் விலையை ஜாஸ்தியாகும்படி செய்துகொண்டிருக்கிறார்கள்; மற்றவர், பாவம்! கோவில் குளம் ஒன்றுமின்றிச் சோற்றுக்குத் தாளம் போடுகிறார். நமஸ் த்ரிமூர்த்தயே துப்ஹ்யம்—திரிமூர்த்திகளே, உங்களுக்கு ஒரு நமஸ்காரம், போய்வாருங்கள். நாங்கள் வேறு திரிமூர்த்திகளைத் தேடித் திரிகிறோம்.

அகண்ட மண்டலாகாரமான சராசரங்களை வியாபித்திருப்பவரின் திருப்பாதத் தாமரைகளைக் காட்டும் குருமூர்த்தி இப்பொழுது கடலின் அக்கரையில் எழுந்தருளியிருக்கிறார் போலும். ஐரோப்பாவிலிருந்து நம் செவித்

துவாரங்களில் இவ்வாறு மந்திரம் முழங்குகின்றது—பூஜை செய்யுங்கள் இந்தத் திரிமூர்த்தியை—*Physical, Intellectual and Moral!* பாருங்கள், *Physical*—எங்களுடைய இந்த இம்மைச் சம்பத்தை! இந்த ஒப்பற்ற ஐசுவரியத்தை! இந்த வெல்லற்கரிய அளவற்ற சைனியத்தை! *Intellectual*—இதோ இந்த ஷேக்ஸ்பியர் நாடகங்களை, இந்த கத்தே (*Gœthe*) யின் காவியத்தை, இந்தக் காந்தின் (*Kant*) தர்சனத்தை, இந்த ஐரோப்பிய விஞ்ஞானக் கடலை! இனி *Moral?* அது கிறிஸ்துமதம்போலும். இந்தத் திரிமூர்த்தியாலும்கூட நம்முடைய மனம் திருப்தியடையவில்லை. நமக்கு நாமே திரிமூர்த்தியை அமைத்துக்கொள்வோம். நமஸ் த்ரிமூர்த்தயே துப்ஹ்யம்! பார்ப்போம் வாருங்கள், ஹாப் பிரஸாத சாஸ்திரிகளின் திரிமூர்த்தி எப்படியிருக்கிறதோ பார்ப்போம்.

நீர் யாராயிருந்தாலும் சரி, உம்மைக் கேட்கிறோம், நீர் செய்யும் தொழில் யாது? நீர் சொல்வீர் எங்கள் அன்னவஸ்திரங்களுக்கு வேண்டிய காரியங்களைச் செய்கிறோமென்று. உமக்கு அன்னவஸ்திரம் கொடுப்பது யார்? சமாஜம். நீர் யாராயிருந்தாலும் சரி, நீர் சமாஜத்துக்காக உழைத்தால், சமாஜமும் உமக்கு உண்ணக் கொடுக்கும். எவர் எதைச் செய்தாலும், அது பிறர்பொருட்டுச் செய்யும் காரியமேயாம்.

எல்லாக் காரியங்களின் முடிவான பலனும் சமாஜத்தின் உபகாரார்த்தமே யாகும்.

இந்தச் சமாஜ-உன்னதியின் பொருட்டுப் பல்லாயிரம் ஆண்டுகளாகச் சமஸ்த மனிதவர்க்கமும் முயற்சிசெய்து வருகிறது. சமாஜத்துக்குப் பலவகையான உன்னதியும் உண்டாயிருக்கிறது. ஆனால் இன்னமும் மக்களின் மனம் ஏற்றமடையவில்லை. சமாஜம் இன்னும் தாழ்ந்த நிலையிலேயே இருக்கிறதென்று பலர் கூறுகின்றனர். உன்னதியடைய இரண்டொரு சுலபமான வழிகளும் உண்டாகவில்லையா? சில சுலபமான உபாயங்கள் முதலில் பிரெஞ்சு ராஷ்டிர விப்லவ (*French Revolution*) காலத்திலே பரீக்ஷித்துப் பார்க்கப்பட்டன. அவ் உபாயங்களுள் ஒன்றின் பீஜமந்திரம் *Fraternity*—பிராதிருத்துவம்—சகோதரபாவம். எப்பொழுது மனிதருக்குள் பரஸ்பரம் துவேஷமில்லாமற் போமோ, எப்பொழுது எவரும் பிறருக்கு அநிஷ்டமானவற்றைச் செய்யாதொழிவரோ எப்பொழுது எல்லோரும் பரோபகார விரதம் பூண்டொழுகுவார்களோ, அப்பொழுதுதான் அனைவரும் மற்ற யாவரையும் அன்போடு நேசிப்பர். எப்பொழுது மனிதருக்குள் பரஸ்பரம் "அண்ணன் தம்பி" சம்பந்தம் உண்டாகுமோ, அப்பொழுதுதான் மனித சமாஜம் உண்மையான உன்னதி மார்க்கத்தில் நிற்பதாகும். இந்த

"அண்ணன் தம்பி" சம்பந்தம் எதனால் உறுதியாய் ஏற்படுமோ அதைச் சாதிக்க எல்லோரும் முயல்வது உசிதமேயாகும்.

இதுவே உத்தம சாதனமென்று யாம் ஒப்பவில்லை. இத் தேசத்தின் நிலைமையை நாம் ஆராய்ந்து பார்த்தமட்டிலே, சகோதரபாவம் பெரியதொரு சாந்திமயமான ஸ்திதியென்று எமக்குத் தோற்றவில்லை. எல்லா வங்காளிகளுக்குள்ளும் இந்தச் சகோதரபாவம் ஏற்படுமாகில், அப்பொழுது குடும்ப விவாதங்களினுலும் பங்காளி ஸ்வராஜ்ஜிய விவகாரங்களினுலும் தேசமானது கெட்டுக் குட்டிச்சுவராய்ப்போகுமென்று நாம் அஞ்சுகின்றோம். அப்பொழுது ஜில்லாவுக்கு ஜில்லா ஹைகோர்ட்டும் கிராமத்துக்குக் கிராமம் ஸப்ஜட்ஜும் இல்லாவிட்டால் முடியாது. நம் தேசத்துப் பண்டிதனுகிய சாணக்கியன் இவ்விஷயத்தில் சாரதத்துவத்தை நன்றாய் அறிந்திருந்தான். அவன் சகோதர பாவம் உதவாது ஆத்மபாவம் வேண்டும் என்கிறான். "ஆத்மவத் ஸர்வ ப்ஹூதேஷு"—தன்னுயிரைப்போல் மன்னுயிரைக் கருதி ஒழுகல் வேண்டும். ஸர்வ ப்ஹூதேஷு—எல்லா உயிர்களிடத்தும் ஜீவகாருண்யத்தோடு ஒழுகும் இந்த ஒழுக்கமே இன்னும் அதிகமான ஏற்றமுடையது, அதிகமான இனிமையுடையது.

அது நிற்க, இந்நூலிலே அண்ணன் தம்பி முறை என்றும் சகோதரபாவம் என்றும் வரும் இடங்களிலெல்லாம், மனிதருக்குள் அன்னியோன்னியம் மாறாத, மாசற்ற அன்பு என்றே வைத்துக்கொள்வோம். இந்த மாசற்ற அன்பும், இந்தச் சகோதரபாவமும், எவ்வாறு உண்டாகும்? புஜபலத்தினால் என்கின்றனர் சிலர். எல்லோரையும் வென்று ஒரு குடையின்கீழ்க் கொண்டுவந்தால், ஒரு வாளைக்கொண்டு அடக்கியாண்டுவந்தால், ஒரு சட்டத்தினால் கட்டுப்படுத்தினால், எல்லோரும் ஒரே சீலமுடையவராவர், ஒருயிர்போலாவர். இங்கிலாந்தின் ஒரு தனிக்குடைக்கீழ் பாரதவர்ஷம் மெல்ல மெல்ல ஐக்கியமடைந்துவருகிறதென்று முன் ஒரு சமயம் லார்ட் ஸாலிஸ்பரி ஒரு சபையில் சொல்லியிருக்கிறார். பல வருஷங்களுக்கு முன்னே, அமெரிக்காவின் தென்பாகம் நிகிரோவர்களைச் சகோதரரைப்போல நடத்தவில்லை என்று கண்டு, வடபாகம் வாளைக்கொண்டு தென்பாகத்தை ரத்தவெள்ளத்தில் அமிழ்த்திச் சகோதரத்துவத் திருமந்திரத்தை ஜபித்தது. "பண்டிதராகுங்கோள், நான் கற்பிப்பதைக் கற்றுக்கொள்ளுங்கோள், நான் இடும் விலங்கைப் போட்டுக்கொள்ளுங்கோள், எல்லோருமே ஒரே நிலையில் நிற்பீர்கள்—எல்லோரும் சகோதரராவீர்கள்," என்கின்றனர்

இன்னும் ஒரு சாரார். மத்திய யுகத்தில் ஐரோப்பாவிலிருந்த ரோமன் கத்தோலிக் பாதிரிகள் இந்தச் சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள். மேற்கூறிய சம்பிரதாயத்தினரை ஒத்தவர்களே நம் பிராமணரும் என்று கொண்டு பிராசீன பாரதவர்ஷத்தின் மாபை உணராதார் இடர்ப்படுவர். மற்றுமொரு சாரார், "எமக்குப் புஜபலமில்லை, வித்தியாபலமும் இல்லை, இருப்பது வாக்குச் சக்தியொன்றே; நாங்கள் பிறர்பொருட்டு வருந்தியழுகின்றோம்; நீங்கள் நின்று ஒருமுறை கேட்டுப்பாருங்கள்; அப்பொழுது நீங்களும் சகோதரர் ஆவீர்கள்," என்கின்றனர். இயேசு பிரானையும் சாக்கிய சிம்மனையும் போன்ற தர்மபராயணர்களும், ஸொக்ராத்தனைப் போன்ற நீதிபராயணர்களும், மற்றும் நற்கவிவாணரும் இந்த மாபைச் சேர்ந்தவராவார்.

இக் கூறிய மூவகையார்தாம் ஹரப்பிரஸாத சாஸ்திரிகளின் மும்மூர்த்தி, இவர்களே முறையே அவரது விசுவாமித்திரர், வஸிஷ்டர், வால்மீகி என்பார். இம் மூவரின் இயல்புகளுக்கும் *Physical, Intellectual and Moral* என்று நாமகரணம் செய்தது சரியென எமக்குத் தோற்றவில்லை.

இனி நூலுக்குள் புகுவோம். புண்ணியம் செய்த மக்கள் மரித்தபின் சுவர்க்கத்துக்

குப் போகிறார்களென்று உலகோர் உரைக்கின்றனர்; ஆனால் வேதமதத்தின்படி அவர்கள் சுவர்க்கத்திற்குச் செல்வதில்லை. அவர்கள் ரிபுக்கள் ஆகிறார்கள். ரிபுக்கள் யாதோ ஒரு திவ்விய லோகத்தில் வசிக்கின்றனர். நூலின் முதற் காட்சியிலே, ரிபுக்கள் ஓர் இரவிலே ஒருங்குசேர்ந்து பூலோகத்தைப் பார்க்க வருகின்றார்கள். காவிய நயத்திலே பாங்ளா பாஷையிலே இந்தக் காட்சிக்கு இணையாக எதையும் யாம் யாண்டும் கண்டதில்லை. கிருத திரேதாயுகங்களின் சந்திசமயத்திலே, ஓர் அமாவாசையிரவில், "சாயாபதம் திடீரென்று இருகூறாகப் பிள்வுண்டது. அதன் நடுவிலிருந்து கணக்கற்ற ரிபுக்கள் வெளிப்பட்டு வந்தார்கள். சமஸ்தப் பிரம்மாண்டமும் அவர்களது சரீரப்பிரபையினால் காந்திபெற்று விளங்கியது. நக்ஷத்திரங்கள் ஒளி மழுங்கி ஆகாயமாகிய படத்தில் தீட்டிய சித்திரங்களெனத் திகழ்ந்தன. இமைப்பொழுதில் ரிபுக்கள் ககனமார்க்கத்தைக் கடந்தனர். பக்ஷிகள் கூட்டம் கூட்டமாய்ப் பறந்து செல்வது பார்ப்பதற்கு எவ்வளவு நேர்த்தியாயிருக்கிறது! ஆனால் ஜோதிமயமாய் விளங்கும் ரிபுக்கள் தங்கள் மேனியின் ஒளியால் திக்குத்திகந்தங்களையெல்லாம் பிரகாசிக்கச்செய்து, ஆகாய மார்க்கத்தை மறைத்துக் குழாம் குழாமாய்ப் பவனி

வரும் காட்சியைப் பூலோக வாசிகள் ஆச்சரியத்துடன் நோக்கி நிற்கும்போது, அக் காட்சி இன்னும் எவ்வளவு அழகாய் இராது? ஏதோ தூமகேது தோன்றியிருக்கிறதென்று சிலர் சொன்னார்கள்; நக்ஷத்திரங்கள்தாம் உதிர்ந்து விழுகின்றன என்று சிலர் கருதினார்கள்." *

ரிபுக்கள் ஹிமாலயத்தில் வந்து இறங்கினார்கள். நூலின் தொடக்கத்தில் ஹிமாலய வர்ணனை மிக அழகாய்ச் செய்யப்பட்டிருக்கின்றது. அந்த ஒப்பற்ற வர்ணனை இலக்கியக் கடலில் இன்றும் நிகரற்ற நித்திலமாகவே திகழ்கின்றது. அதைப் படித்துப் பார்த்தால், மேற்றிசைக் கல்வியின் தோஷத்தினாலோ அல்லது குணத்தினாலோ, பிராசீன சாகித்தியத்துக்கும் ஆதுனிக சாகித்தியத்துக்கும் எவ்வளவு பேதம் இருக்கிறதென்று தெரியவரும். குமாரசம்பவம் இயற்றிய கவிகுல சார்வபௌமனான காளிதாஸன் அதிப்பிராகிருத (Ideal) சௌந்தரிய வர்ணனையில் ஒப்பற்றவன், எவரும் அவனை அணுகவும் ஒண்ணாது. ஆனால் ஆதுனிக கவிகள் பிராகிருத (Real) சோபையை வர்ணிப்பதில் மகா சதுரர். ஐரோப்பியக் கல்விப் பயிற்சியினின்றும் நாம் அடைந்த லாபம் இதுவேயாம். பிராசீன கவிகளால் பரிஷ்கரிக்கப்பெற்ற பவித்திரமாகிய அதிப்பிரா

---

* நூலின் சு-எ-ம் பக்கங்கள்.

கிருத நெறியைக் கைவிட்டு நாம் ஐரோப்பிய ஆதர்சத்தைக் கண்டு மலைத்து, மண்ணுலகத்தின் அபவித்திரமாகிய பிராகிருத நெறியைப் பின்பற்றுகின்றோம். இதையே உயர்தரக் கல்வி என்கின்றனர். அவ்வாறாயின், கீழ்தரக் கல்வி என்று எதைச் சொல்வது?

ரிபுக்கள் ஹிமாலய சிகரங்களில் இறங்கிக் கானம் செய்தனர். அந்தக் கானத்தினால் உலகம் மோஹ பரவசமாயிற்று. கானத்தின் பல்லவி "சோதரரே, எம் சோதரரே, நாம் சோதரரே யாம் சகலருமென்றும்." இவ்வாறு கானம் செய்தபிறகு ரிபுக்கள் ஆகாயமார்க்கத்தில் புறப்பட்டுப் போய்விட்டனர்.

"சற்றுநேரம் கழித்து ரிபுக்கள் ஹிமாலய சிகரங்களிலிருந்து புறப்பட்டு அந்தரிக்ஷத்தில் ஏறிச் செல்லலானார்கள். ராசிசக்கரம் விபரீத மார்க்கத்தில் சுழல்வதாக வஸிஷ்டர் முதலானவர்களுக்குத் தோற்றியது. ரிபுக்கள் உயரத்தில் ஏறிச் செல்லச் செல்ல, லக்ஷோபலக்ஷமான நூதன நக்ஷத்திரங்கள் வெளிப்பட்டு ஒளி வீசுவதுபோல் காணப்பட்டது; இந்த நக்ஷத்திரத் தோற்றமும் சீக்கிரத்தில் மறைந்துவிட்டது. ஒரு பிரம்மாண்டமான வெண்மேக படலம் ஆகாய மண்டலத்தை ஆவரித்துக் கொண்டு சாயாபதத்துக்குள் ஊடுருவிச் செல்வது போலவும், அந்தச் சாயாபதம் அகிலப்

பிரபஞ்சத்தையும் விழுங்கிவிடுவது போலவும் தோற்றியது. துவாபர யுகத்தின் முடிவில் அர்ஜுனனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் தன் விசுவ ரூபத்தைக் காட்டியபொழுது, அந்த நாராயண னுடைய விராட் ஸ்வரூபத்தின் திருவாயில் ஜகத்து முழுவதும் பிரவேசிப்பதாக எப்படிக் காணப்பட்டதோ, அப்படியே இந்தச் சமயத்தி லும் நிகழ்வதாகத் தோற்றியது. படிப்படியாக வெண்மேகபடலம் முழுவதும் சாயாபதத்துக் குள் கலந்துபோகவும், அதன் நடுவில் உண்டா யிருந்த குகைபோன்ற பிளவு நிரம்பி மூடிக் கொண்டது. அகில உலகமும் முன்னைய உரு வத்தை அடைந்தது; ஆகாயமண்டலம் முன் போலவே ஸ்திரபாவத்தை அடைந்தது; ஆகா யத்தின் கோமளமான நீலநிறப் பரப்பில் நக்ஷத் திரங்கள் முன்போலவே ஜொலிக்கலாயின. பூமண்டலத்தில் பிராதக்காலம் உதயமா யிற்று. காகமும் குயிலும் கூவிக்கொண்டு எழுந்தன." *

கானத்தைக் கேட்டு உலகத்திலுள்ள எல் லோருமே மயங்கிப் பரவசமடைந்த போதி லும், அந்தக் கானத்தின் மகத்துவத்தை விசேஷமாய் உணர்ந்தவர் மூவரே யாவர். ஒரு வர் புஜபலபராக்கிரமமுடைய திக்விஜயியாகிய ராஜா விசுவாமித்திரர். இரண்டாமவர் வித்தியா

---

* கஅ - கூ - ம் பக்கங்கள்.

பலமுடைய பிராமணராகிய வஸிஷ்ட முனிவர். மூன்றுமவர் நாஹத்தி செய்யும் வழிப்பறிக் கள்வஞன வால்மீகி.

விசுவாமித்திரர் அந்தச் "சகோதர, சகோதர" என்னும் மோஹமயமான மந்திரத்தைக் கேட்டு, மனுஷிய ஜாதியை அண்ணன் தம்பி முறையில் ஒருங்கு சேர்க்கத் தம்மால் ஆகு மென்று கருதினர். "'அஹம் விச்வாமித்ர:. என் பெயர் விசுவாமித்திரனல்லவா? முதலில் நான் உலகத்தை ஜயிக்கட்டும். அதில் என்னைத் தடுக்க எவராலும் ஆகாது. எல்லோரையும் என் கைக்கு அடங்கும்படி நான் செய்யட்டும். பிறகு அவர்களை ஒன்ருக்கிவிடுவேன்.' காதில் இசைத்தது 'சகோதர, சகோதர' என்ற நாத கீதம். மறுபடியும் பாவிக்கிருர், 'இந்தப் பூலோகத்தில் என்றைக்காவது ஒருநாள் நானும் இவ்வாறு பாடும்படி செய்தால்தான், விசுவாமித்திரன் என்ற பெயர் எனக்குத் தகும். ஆனல் அது என்னல் சாதிக்க முடியாதா? இந்தக் காரியத்தை முடிக்க இவ் இரு தோள்களுக்கும் வலிமை இல்லையா?'" *

வஸிஷ்டர் யோசித்தார். "'என்னே புத்தியின் மகிமை! க்ஷத்திரியர்களை எவ்வளவு லேசாய் ஏய்த்துவிட்டேன்!' என்று ஒரு

* உஉ - உரு - ம் பக்கங்கள்.

க்ஷணம் கருதுவார். மறுபடியும் எண்ணுவார், 'பிராமணர்களேயும் க்ஷத்திரியர்களேயும் ஒன்ருய்ச் சேர்த்துவிட்டேன்; மற்ற ஜாதிகளே யும் அப்படியே சேர்க்க என்னுல் ஆகாதா?' மீண்டும் காதில் முழங்குகிறது அதே பல்லவி, 'சகோதர, சகோதர, சகோதர,' என்று. மறு படியும் தர்க்கிக்கிருர்,—'சகல சாஸ்திரங்களே யும் கசடறக் கற்றிருக்கிறேன். தேஜஸ் அல் லது பௌருஷ சக்தி என்பது யாது? சாஸ்தி ரமோ 'ஸ்வகார்யம் உத்த்ஹரேத் ப்ராஜ்ஞ:' என்று கூறுகின்றது, அதாவது, புத்திமான் தன் காரியங்களேத் தானே சாதித்துக்கொள்ள வேண்டுமென்று உபதேசிக்கிறது. இனி அதில் மானமென்ன அவமானமென்ன? பௌரோகித்தியம் கீழானதொழில் என்பது வாஸ்தவமே. ஆனல் சகல அதிகாரங்களும் பிராமணனுக்கென்றே ஏற்பட்டிருக்க வில்லேயா? பண்ணவேண்டியதை யெல்லாம் பக்குவமாகவே பண்ணியிருக்கிறேன். இனி மந்திர சங்கிதைகள் செய்திருக்கிறேன். அவை களும் இதையே சூசிப்பிக்கின்றன. யோக சாஸ்திரமோ, அதுவும் இதைத்தான் வலியுறுத் துகின்றது. மானமோ, அவமானமோ, எது வந்தாலும் சரி, என் உத்தேசத்தைச் சாதித் துத்தான் தீருவேன். என்னுல் முடியாதா? தேஜஸ், சத்தியம், தர்மம், சர்வமும் மித்தை.

காரியசாதனமே சத்தியம். காரியத்தைச் சாதிக்க என்னால் ஆகாதா? ரிபுக்கள் எதற்காக வந்தார்கள்?' " *

வால்மீகியும் சிந்தித்தார். "எத்தனை பேர்களைக் கொன்றிருக்கிறேன்? எத்தனை துர்ப்பாக்கியவதிகளை விதவைகளாகும்படி செய்திருக்கிறேன்? இந்த மகாபாதகங்களெல்லாம் எப்படித் தீரும்? இந்தத் தீ எப்படி அவியும்? இங்கே ரிபுக்கள் வந்ததைப் பார்த்தேன். அவர்கள் கானம் செய்த கீதத்தையும் கேட்டேன். அந்தக் கீதம் என் நெஞ்சத்தில் தீயைமூட்டித் தக தக வென்று எரியும்படி செய்துவிட்டது. ஆனால் அவர்களோடு கலந்து அந்த ஆனந்த பரவசத்தை அனுபவிக்க என்னால் முடியாமற் போய்விட்டது. ஐயோ! நான் ஏனோ மனிதனாய்ப் பிறந்தேன்? எங்கே நாம் எல்லோரும் சகோதரர்போல் அன்னியோன்னியமாய் இருக்கவேண்டுமோ, அங்கே என்னைக் கண்ட மாத்திரத்தில், எல்லாரும் ஓடிப்போய் விடுகிறார்களே! ஓ தெய்வமே! ஏனோ எனக்கு இந்த இழிந்த தொழில் லபித்தது?" *

ஆரம்பத்திலேயே வஸிஷ்டருக்கும் விசுவாமித்திரருக்கும் ஒரு விவாதம் உண்டாய் விட்டது. வஸிஷ்ட விசுவாமித்திரர்கள் இரு

---

* உ0 - உஉ - ம் பக்கங்கள்.
* உக - ம் பக்கம்.

வரும் காலையில் ஹிமவத்பர்வதத்தினின்றும் இறங்கி வந்துகொண்டிருக்கும்போது, ஒருவரை யொருவர் நேரே பார்க்கும்படி நேர்ந்ததில் அவர்களுக்குப் பரிசயம் உண்டாயிற்று. கொஞ்சநேரம் 'லோகாபிராமமாய்'ச் சம்பாஷணை நடந்தது. விசுவாமித்திரர் வஸிஷ்டரை விருந்துக்கழைத்துத் தம் பாசறைக்குக் கூட்டிக் கொண்டு போனார், தம் அளவற்ற செல்வத்தைக் காட்டினார், வஸிஷ்டருக்கு மகா வைபவத்துடன் அதிதிபூஜை செய்தார், பிறகு ரத்தின ராசிகளை அவருக்குத் தக்ஷிணையாகக் கொடுத்தார். வஸிஷ்டர் விடைபெற்றுக்கொள்ளுங்கால் அவரைத் தம் ஆசிரமத்துக்கு விருந்துக்கு அழைத்துவிட்டுப் போனார். அப்படியே விசுவாமித்திரரும் விருந்தேற்கப் பிராமணனுடைய தபோவனத்துக்குச் சென்றார். சென்று பார்த்ததில் வியப்படைந்தார் — தம்முடைய செல்வத்தையும் பார்க்க வஸிஷ்டரின் ஐசுவரியம் அதிகமாயிருந்தது. அதைப் பார்த்து விசுவாமித்திரர் கேட்கலாயினார், "மகானுபாவ, தேவரீர் வனத்தில் வசிக்கும் தவசியா யிருக்கிறீர். தேவரீருக்கு இந்த அளவற்ற செல்வம் எங்கிருந்து வந்தது?"

வஸிஷ்டர்: "மகாராஜ, என்னிடத்தில் ஒரு பசு இருக்கிறது. அது காமதேனுவின் வயிற்றிற் பிறந்தது. நந்தினி யென்று அதற்குப்

பெயர். நான் விரும்புவதை யெல்லாம் அது எனக்குக் கொடுத்துவருகிறது."

விசுவாமித்திரர்: "அப்படியானல் சொற்பக் கொடைகளினல் எனக்குத் திருப்தி உண்டாகாது; எனக்கு அந்தப் பசுவைக் கொடுத்துவிட வேண்டும்."

வஸிஷ்டர்: "அதை அதன் தாயினிடத்திலிருந்து நான் கொண்டுவந்தபோது, அதை ஒருகாலும் எவருக்கும் கொடுப்பதில்லையென்று வாக்குத்தத்தம் செய்திருக்கிறேன்."*

வஸிஷ்டர் பசுவைக் கொடுக்கவில்லை. விசுவாமித்திரர், பசுவைப் பலாத்காரமாய்க்கவர்ந்துபோகும்படி தம் சைனியத்துக்குக் கட்டளையிட்டார். அப்போழுது வஸிஷ்டர் என்ன செய்வார்? ப்ராஹ்மணஸ்ய பலம் க்ஷமா. ஆனல் நந்தினியைப் பலாத்காரமாய்க் கொண்டுபோக யாரால் முடியும்? நந்தினியின் ஒவ்வொரு ஹுங்காரத்துக்கும் எண்ணிறந்த சைனியங்கள் உற்பத்தியாகி வரத்தொடங்கின. விசுவாமித்திரர் அந்தச் சேனவீரரிடம் தோல்வியுற்று நந்தினியை விட்டுவிட்டு ஓட்டமெடுத்தார்.

புஜபலம் வித்தியாபலத்தினிடம் தோல்வியடைந்துவிட்டது. அதன்மேல் இப்பொழுது

* சச - சரு - ம் பக்கங்கள்.

வித்தியாபலம் தர்மபலத்தினிடம் அபஜயம் அடைந்துவிட்டால், அதோடு நூல் முற்றுப் பெற்றதாகும் — வால்மீகியின் வெற்றி நிறைவேறிவிடும். ஆனால் இந் நவீன நூலாசிரியர், இன்னும் செலவிடாமல் வைத்திருக்கும் ப்ரதிபையின் ஆற்றலால் உந்தப்பட்டவராய், இந்த நேரான வழியில் செல்வதை வெறுத்தார் போலும். நாம் இந் நூலைப் படிக்கப் படிக்கப் பல விடங்களில் ஆசிரியரின் நடையைத் தருக்குற்ற சிங்கத்தின் நடையோடு உள்ளுக்குள்ளேயே ஒப்பிட்டோம். அது நிற்க.

விசுவாமித்திரர், "த்ஹிக் பலம் க்ஷத்ரிய பலம், ப்ரஹ்ம தேஜோ பலம் பலம்," என்பதை நன்குணர்ந்து, தமது சாம்ராஜ்ஜியத்தைத் துறந்து ஹிமாலயத்தில் தவம்புரியச் சென்றார். அவருடைய கடுந்தவத்தினால் தேவர்கள் திடுக்கிட்டுத் தியங்கிப்போக, பிரம்மா வரம் கொடுக்க வந்தார். விசுவாமித்திரர் பிராமணத்துவம் வேண்டுமென்றார். ஆனால் வஸிஷ்டர் முதலிய பிராமணர்களின் கலகத்தினாலோ வேறு எக்காரணத்தினாலோ பிரம்மா அவருக்குப் பிராமணத்துவம் அளிக்க ஒப்பவில்லை. விசுவாமித்திரர் எவ்வாற்றானும் பிறிதொருவரம் வாங்கமாட்டேனென்று பிரம்மாவையும் பிரம்மரிஷிகளையும் திக்காரம் செய்தார். சொன்னார்:—

"உங்களுடைய தந்திரமெல்லாம் எனக்கு நன்றாய்த் தெரிந்துவிட்டது. நீங்கள் வெளி மயக்கான வார்த்தைகளினால் என்னைப் பிராம ணத்துவம் பெறவொட்டாமல் ஏய்க்கப் பார்க்கி றீர்கள். அந்தப் பிராமணத்துவம் இனி எனக்கு வேண்டியதில்லை; அதை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள். நான் பிரம்ம பதத்தை வகிக்க விரும்புகிறேன். இனி நான் உங்கள் புகழ் பாடித் தவம் செய்யப்போகிற தில்லை. நான் நூதனமாய் ஓர் உலகத்தைப் படைத்து அதற்குப் பிரம்மாவாகப் போகி றேன். என்னுடைய உலகத்திலிருந்து துக்கத்தை அகற்றிவிடுவேன். அதில் பிராம ணரைக் கிட்ட நெருங்கவொட்டாமல் எட்டி யிருக்கச் செய்வேன். உங்களால் என்னைத் தடுக்க முடியுமானால் ஒரு கை பாருங்கள்." *

தபோபலத்தினால் விசுவாமித்திரர் நூதன சிருஷ்டி செய்தார். அதில் துக்கம் இல்லை, பிராமணன் இல்லை. விசுவாமித்திரரே அதற்கு நியந்தா. படிப்போர் இங்கே நூலா சிரியரின் விசுவாமித்திரர் இனி விசுவாமித்தி ரரா யிராமல் வஸிஷ்டராய் மாறிவிட்டதைக் கவனிக்கவேண்டும். இப்பொழுது அவருக் குச் சக்தியளிப்பது புஜபலமன்று, மற்றுத் தபோபலமும் விக்கியாபலமுமே யாம். நந்தி

* கஅ-ம் பக்கம்.

னியின் ஹுங்காரத்தினுல் சமுத்திரம்போல் அளவற்ற சேனைகள் சிருஷ்டிக்கப்பட்டன: விசுவாமித்திரரின் இச்சாமாத்திரத்தால் நூதன ஸௌரஜகத்து சிருஷ்டிக்கப்பட்டது. விசுவாமித்திரரை வஸிஷ்டராக்கி, நூலாசிரியர் அப்பொழுதே அவரை மீண்டும் வால்மீகியின் பாதையில் கொண்டுவந்து நிறுத்துகிறார். விசுவாமித்திரர் நூதன ஜகத்தின் நியந்தா— ஆனால் மனிதனே. மனிதனுயிருக்கும் தன்மையைப்பற்றி அல்லவா, "எல்லாம் சித்தித்து விட்டது; ஆனால் சுகம் எங்கே?" என்று ஒரு நாள் ஜான் ஸ்டியூவர்ட் மில் என்னும் ஆங்கில தத்துவ பண்டிதன் கதறி அழுதான். விசுவாமித்திரரும் இப்பொழுது, "எல்லாம் முடிந்தது, ஆனால் சுகம் எங்கே?" என்று அழுதார். சுகத்தின்பொருட்டு பூமியிலிருந்து தம் ராஜதானியையும் ஸ்வஜனங்களையும் ஒருங்கே சேர்த்துக் கான்யகுப்ஜ நகரத்தை மேலே எழுப்பிக்கொண்டு தமது சிருஷ்டிக்குச் சென்றார். ஆனால் விசுவாமித்திரரின் தபோபலம் கழிந்துபோய்விட்டபடியால், சிறிது தூரம் சென்றபிறகு அவரது ராஜதானி மேலே செல்ல முடியவில்லை — விழுந்து விட்டது. அதைப் பிரம்மா பிடித்துக்கொண்டு இறக்கிக்கொண்டு வந்தார். பிறகு விசுவாமித்திரர் தனியே தம் சிருஷ்டிக்குத் திரும்பிப்போக முயன்றார்,

முடியவில்லை; சுழன்று சுழன்று மூர்ச்சாவஸ்தையில் சூனியமார்க்கத்திலிருந்து கீழ் நோக்கிப் பூமியில் விழலாயினர்.

இது நிற்க, வால்மீகி ரிபுக்களின் கானத்தைக் கேட்டதுமுதல் கள்ளத்தொழிலை ஒழித்துவிட்டார். இப்பொழுது அவர் பிறர் துயரத்தைக் கண்டு மிக வருந்தி அழுவாராயினர். பிறர் துக்கத்தைச் சகிக்கலாற்றாது அழுதமையால், அவருடைய இருதயத்திலே தூய்மை உண்டாயிற்று. அந்த அனுதாபமே நீதி; அதன் வெளிப்பாடே கவித்துவம். பிறர்மேல் பிரீதிகொண்டு வால்மீகி இருதயத்திலே கவியாகிவிட்டார்—பாரதியின் கிருபையால் அவர் சொல்வன்மையிலும் கவியானர். பாபு ரவீந்திரநாத டாகூரின் 'வால்மீகி ப்ரதிபா' என்னும் நாடகத்தைப் படித்தவர்கள், அல்லது அதன் அபிநயத்தைக் கண்டவர்கள் கவிதையின் ஜன்ம விருத்தாந்தத்தை எப்பொழுதும் மறவார்கள். ஹரப்பிரஸாத சாஸ்திரிகள் இந்த அத்தியாயத்திலே ரவீந்திர பாபுவைப் பின்பற்றி யிருக்கிறார்.

வால்மீகி இப்பொழுது உலகத்துக்கு நீதி போதகர், ஆதி கவி. அவர் புவியெங்கும் கானம் செய்துகொண்டு திரிகிறார். சுகதுக்கங்களில் சமவுணர்ச்சியை உபதேசித்துக்கொண்டு, அவர் சகோதரத்துவ மந்திரத்தின்

உண்மையான சாதகராய் விளங்குகிறார். இப்பொழுது கௌசாம்பீ நகரத்தில் அரசன் யஜ்ஞம் செய்கிறான். அதற்கு உலகத்திலுள்ளவர்களெல்லோரும் அழைக்கப்பட்டு வந்து கூடியிருக்கிறார்கள். இதற்குள் ஒரு 'கந்தர கூளம்' நடக்கிறது. ஒரு கக்ஷியார் யாகம் செய்யவேண்டும் என்கிறார்கள். மற்றொரு கக்ஷியார் அந்த யாகத்தை நடக்கவொட்டோம் என்கிறார்கள். இரு கக்ஷியாரும் யுத்தம் செய்ய ஆயத்தமா யிருக்கிறார்கள். அதைத் தடுப்பவர் வால்மீகி ஒருவரே. அவருடைய ஆயுதம் விழி நீர், வாணி தேவி அளித்த வீணை ஆகிய இரண்டே. இந்தச் சமயத்தில் முடிவற்ற சூனிய வெளியினின்றும் சுழன்று சுழன்று உணர்ச்சியற்று விசுவாமித்திரர் அந்த யாக குண்டத்தில் வந்து விழுந்தார். அவரது நிலைமையைக் கண்டு ஜனங்கள் அச்சமும் வியப்பும் அடைந்தனர் — வால்மீகியின் வாக்குச் சக்தி விருத்தியாயிற்று — அவருடைய கருணமாகிய கானத்தினால் சமஸ்த சராசரங்களும் மயங்கிப் பரவசமாயின — ஜனங்களின் மனம் உருகியது — சண்டை சச்சரவுகளெல்லாம் ஒழிந்தன. வால்மீகிக்கு வெற்றி உண்டாய்விட்டது.

பிரம்மாவின் கிருபையால் விசுவாமித்திரர் உயிர்பெற்றார். அவர் திவ்வியஞானம் அடைந்து பிரம்மாவைத் துதித்துத் தம்முடைய அபரா

தங்களை நினைந்து பச்சாத்தாபப்பட்டார். வஸிஷ்டர், விசுவாமித்திரர், வால்மீகி — இம் மூவரும் ஒருங்கு சேர்ந்தனர். புஜபலம், வித்தியாபலம், தர்மபலம், மூன்றும் ஓரிடத்தில் கூடின. பிரம்மா இந்த ரிஷித்திரயத்தையும் நோக்கி, "ஸாக்ஷாத் பகவான் நாராயணனே சமஸ்த ஜனங்களுக்குள்ளும் ஐக்கியஸ்தாபனம் செய்யும்பொருட்டு அவதரிக்கப் போகிறார்; நீங்கள் அதற்கு ஆகவேண்டிய காரியக்கிரமங்களை ஒழுங்குபடுத்தி வையுங்கோள்," என்று ஆக்ஞைசெய்தார். விசுவாமித்திர வஸிஷ்ட வால்மீகிகள் வஸிஷ்டரின் ஆசிரமத்துக்குச் சென்று அவ் விஷயத்தைக் குறித்து ஆலோசனை செய்யத் தொடங்கினர்.

அப்பொழுது அம் மூன்று ரிஷிகளும் ஸ்ரீமத் ராமாயணத்தின் கதையை நிர்மாணம் செய்ய உட்கார்ந்தனர். வஸிஷ்டர் சொன்னார் "ஸ்ரீராமனைத் கர்மசீலனாகச் செய்ய வேண்டும்" என்று. விசுவாமித்திரர் சொன்னார் "அவனை ராஜநீதிக்ஞனாய்ச் செய்யவேண்டும்." என்று. வால்மீகி உரைத்தார், "நான் ஸ்ரீராமனை ஆதர்ச மனிதனாகச் செய்யப்போகிறேன்."

ஸ்ரீமத்ராமாயணம் பிரணீதமாய் விட்டது. அதன்பிறகு ஸ்ரீராமன் அவதாரமானதும், ராமாயணம் அபிநயிக்கப்பட்டது. அதன் பிறகு ராமாயணம் கானம்செய்யப்பட்டது.

நாராயணன் ஸ்ரீவைகுண்டத்துக்கு எழுந்தருளிவிட்டார். கடைசியில் வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் பிரம்மாவின் கட்டளைப்படி பூத வுடம்பு நீங்கினர். வஸிஷ்டர் சப்தரிஷி மண்டலத்தில் ஸ்தானம் பெற்றார், விசுவாமித்திரர் ரிபுக்களின் தலைவராயினர். பிரம்மா வால்மீகியையும் சுவர்க்காரோகணத்தின் பொருட்டு வற்புறுத்த, அவர் அதற்கிசைய வில்லை. இவ் வுலகத்தில் அவருடைய காரியம் இன்னமும் முடியவில்லை, மனிதருக்குள் பரஸ்பரம் சகோதரபாவம் அப்பொழுதும் உண்டாக வில்லை. கடைசியில் பிரம்மாவின் ஆக்ஞைப்படி அவர் விண் மண்டலத்தில் விராட் ஸ்வரூபத்தைத் தரிசனம்செய்து துதித்தார். அப்பொழுது பிரம்மா கூறினர், "வால்மீகி! பார்த்தனையா, எல்லா மனிதரும் சமானரே, எல்லோரும் சகோதரரே, எல்லோரும் ஒன்றே! நீ பூமண்டல மெங்கும் சென்று, இந்தச் சமத்துவத்தை, இந்தச் சகோதரத்துவத்தை, இந்த ஏகத்துவத்தை உனது கானத்தினால் பிரகடனம் பண்ணுவாய்! நீ அமரனாய்விட்டாய்! உன்னுடையதே ஜயம்!"

விராட் மூர்த்தியின் திருவாயிலிருந்தும் "ஜயம்" என்று பிரதித்துவனி எழுந்தது.

படிப்போருக்கு நூலின் உள்ளுறையைச் சுருக்கமாக எடுத்துக் கூறினோம். இதி

லிருந்து அவர்கள் அவர்கள் நூலைப்பற்றித் தம் தம் அபிப்பிராயங்களை ஏற்படுத்திக்கொள்ள லாம். "இஃதெல்லாம் வெறும் புராணக்கதை, எங்களுக்கு ஏற்கெனவே தெரிந்துள்ள செய்தி," என்று அனேகர் சொல்லக்கூடும். இவர்களையும்பார்க்க அதிக நெஞ்சுறுதி கொண்டவர்கள், "இது முழுவதும் மூளை மயங்கிப் பிதற்றும் பிதற்றலேயன்றி வேறில்லை; சாயாபதம் பிளந்து இருகூறுவதும், நந்தினியின் பிரதி ஹூங்காரத்துக்கும் ஆயிரம் ஆயிரம்சேனை சிருஷ்டியாவதும், விசுவாமித்தி ரர் பிரம்மாவைப்போல் இரண்டாவது ஜகத் தைச் சிருஷ்டிப்பதும், இவையெல்லாம் பிதற்ற லல்லாவிடில் வேறென்ன?" என்பர். இவர்க ளையும் பார்க்கச் செம்மையாய்க் கல்வி கற்றவர் கள், "இது உருவகம்; நந்தினியின் பிரதி ஹூங்காரத்திலும் சைனியசிருஷ்டி யாயிற்று என்பதன் அர்த்தம், சரஸ்வதியின் அனுக்கிர கத்தினல் ஜடசக்தியின்மேல் மனிதருடைய ஆதிக்கம் ஸ்தாபிக்கப்பட்டது என்பதாம்; நந்தி னியின் ஒரு ஹூங்காரத்தினல் துப்பாக்கி மருந்தின் சிருஷ்டி, இன்னொரு ஹூங்காரத் தினல் நீராவி யந்திரம், நீராவிக்கப்பல், ரதம் இத்தியாதி, இத்தியாதி," என்பர். சிலர் இதை உருவகமென்று கருத விரும்புவராயின், நாம் அவர்களோடு விவாதம் செய்யப்போகிற தில்லை. இது உருவகமாயின், ஸ்பென்ஸரின்

உருவகம்போல, உருவகம் காவியத்தில் அமிழ்ந்திப்போய்விட்டது. இதன் உருவகத் தன்மை எவருக்கும் புலப்படாது.

இச் சிறு நூலில் பல குற்றங்கள் இருக்கின்றன. காவிய அமைப்பு எல்லா இடங்களிலும் சாதுர்யமாய் அமையவில்லை. எப்படியெனில், வித்தியாபலத்துக்கு அபஜயம் வஸிஷ்டரிடத்தில் அல்லாமல் விசுவாமித்திரர் மாட்டே நிகழ்ந்திருக்கின்றது. வால்மீகியின் கீதங்களிலே கற்பனாலங்காரம் இல்லை. ஆனால் நாம் இவற்றையெல்லாம் பெரிதாய்ப் பாராட்டுகிறோமில்லை. சந்திரனது களங்கம் எப்படிக் கிரணங்களிலே மறைந்துபோய்விடுகிறதோ, அப்படியே இந் நூலின் கண்ணும் என்க. இதன் குணங்களையெல்லாம் எடுத்துக் கூறவும் பொழுதில்லை. காவியத்தின் பிரதானச் சிறப்பு கற்பனையில். இதன் கற்பனை மிக்க மாட்சிமை யுடைத்து. ரிபுக்களின் வருகை, விசுவாமித்திரர், விசுவாமித்திர சிருஷ்டி, விசுவாமித்திரரின் வீழ்ச்சி, கௌசாம்பியில் யாகம், கடைசியில் விசுவரூப தரிசனம், இவற்றுள் எதை நோக்கினும் கற்பனை மாண்புடன் திகழ்கின்றது. எல்லாவற்றினும் பார்க்க, இந்த விசுவாமித்திரரே அச்சுறுத்தப்படியான உருவம். ராவணனை அல்லது விருத்திராசுரனை எந்த அச்சில் வார்த்திருக்கிறதோ, அந்த அச்சிலே இந்த விசுவாமித்திரரை

நம் நூலாசிரியர் வார்த்திருக்கிறார். நாம் வால்மீகி ராமாயணத்தின் ராவணனைப்பற்றியாவது, புராணங்களிலே வர்ணிக்கப்பட்ட விருத்திராசுரனைப்பற்றியாவது பேசுகிறோமில்லை. நாம் பேசுவது மதுசூதன தத்தனது ராவணனையும் ஹேமசந்திரனுடைய விருத்திராசுரனையும் பற்றியேயாம். அந்த அச்சு மிகப் பெரிய அச்சு. ஆனால் மதுசூதனன் அல்லது ஹேமசந்திரனது காவியத்துக்குச் செவிலித்தாய் ஆங்கில சாகித்தியம். ஆங்கில சாகித்தியத்திலேஇந்த விசுவப்பிரம்மாண்டமானது அளந்து வரையறுக்கப்படு மொன்றாகும்;ராவணனும்விருத்திரனும்பிரம்மாண்ட உருவங்களாயினும், அளந்து வரையறுத்து வர்ணிக்கப்படக் கூடியவர்களே. கேவலம் அந்தப் பிராசீன புராண நூலாசிரியர்களே அபரிமேயமும் அனந்தமுமான விராட் உருவங்களைக் கற்பனைசெய்ய வல்லவர். அந்தப் பிராசீனப் பிராமணர்களைப்போல் மானசிக சக்திவாய்ந்த அத்தகைய ஞானி மற்றொன்று இவ் வுலகில் வேறெங்கும் ஜனித்ததேயில்லை. பண்டித ஹரப்பிரஸாத சாஸ்திரிகள் ஆங்கிலம் நன்கு கற்றவராயிருந்தும், பிராசீன ஆரியசாஸ்திரங்களிலேயும் சிறந்த பண்டிதர். அவரது மானசசக்தியைப் புஷ்டி செய்வதிலே மேற்றிசைச் சாகித்தியம், ஆரிய சாகித்தியம் எனும் இவ் உபய சாகித்தியங்களும் துல்யரூபமாய்ப்

புகுந்திருக்கின்றன. இந்த விசுவாமித்திர வியக்தியைக் கற்பனைசெய்யுங் காலத்தில் அவர் பிராசீன ஆரிய சாகித்தியத்தின் வயப்பட்டுப் போயிருக்கிறார். மேற்றிசை மதிப்புரைகாரரின் நியமானுசாரமாய் எவர்களுடைய ருசி அமைந்திருக்கிறதோ, அன்னாரிடம் இந்த விசுவாமித்திர கற்பனைக்கு எவ்வித நன்குமதிப்பும் உண்டாகாதென அஞ்சுகின்றோம்.

கற்பனை எப்படியோ அப்படியே வர்ணனையும் அமைந்திருக்கிறது. வர்ணனையழகை ஏற்கெனவே நாம் பல உதாரணங்களால் எடுத்துக்காட்டியிருக்கிறோம். நூலின் நடை விஷயமாய் மதபேதம் உண்டாகக்கூடும். ஆனால் யாம் இந் நூலின் வங்காளி நடையை உத்கிருஷ்டமான வங்காளி என்போம். இந்த 'வங்க தரிசன'த்திலே பலமுறையும் இந்தக் கொள்கை நிலைநிறுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால் அதைப்பற்றி இனிப் பேசுவது அனாவசியம். இந் நூல் மிகச் சிறிதேயெனினும், இது வங்காளி பாஷையிலே ஒளிச்சுடர் வீசும் உத்தம ரத்தினமாம். வேறெந்த வங்காளி நூலாசிரியரும் இவ்வளவு சொற்ப வயதிலே இத்தகைய பிரதிபையும் மானச சக்தியும் காட்டியதாக எமக்கு ஞாபகமில்லை.

முற்றிற்று.

~~~
~~~

## எம்மிடம் கிடைக்கும் நூல்கள்

| | | ரூ. அ. |
|---|---|---|
| க. | சந்திரகுப்த சக்ரவர்த்தி ... | ௦—அ |
| உ. | புக்கர் வாஷிங்டன் - ஜன சேவையைப்பற்றி விரிவாய் எழுதிய அனுபந்தத்துடன் ... ... | ௦—அ |
| ௩. | மங்கையர்க் கரசியின் காதல்முதலிய கதைகள் ... ... | ௦ - க௦ |
| ௪. | கம்பராமாயண பாலகாண்டச் சுருக்கம்: யாவரும் படிக்கும்போதே பொருளும் சுவையும் உணரும்படி செய்யுளிலேயே பதங்களைப் பிரித்து எழுதியும், அரும்பொருள் விளக்கம், அகராதி, ௱ பக்கமுள்ள முகவுரைமுதலியன சேர்த்தும் ... | உ—௦ |
| | ஷை துணிக்கட்டடம் ... | உ - ௬ |
| ரு. | ரவீந்திரநாத டாகூரின் சிறு கதைத் தொகுதி: முதல் புத்தகம் ... | ௦ - கஉ |
| ௬. | ஷை உ-ம் புத்தகம், கதைகளின் சாரத்தை விளக்கும் விரிந்த முகவுரையுடன் ... ... | ௦ - கஉ |
| எ. | ஆனந்தமடம்: மஹேச குமார சர்மா மொழிபெயர்ப்பு ... | ௦ - கஉ |
| அ. | குப்பன் பித்தலாட்டங்கள் (நாடகம்) | ௦ — ௬ |
| ௯. | மகாத்மா காந்தி ... ... | க — ௦ |

## அச்சிலிருக்கும் நூல்கள்

க. வர்த்தமான பாரதம் (நமது நாட்டின் தற்கால நிலைமை) ஸ்வாமி விவேகானந்தர் எழுதி மஹேச குமார சர்மா மொழி பெயர்த்தது.

உ. தன்னம்பிக்கை அல்லது ஆத்ம விசுவாசம்.

௩. பிருதிவிராஜ சரித்திரம்.

௪. குரு கோவிந்த ஸிம்கன்.

"கம்ப நிலயம்," புதுச்சேரி.